உ

# காதம்பரி

வித்துவான்

இ. கி. நடேச சர்மா

(*Tamil Pandit, Wesley College, Madras*)

எழுதியது

மாடர்ன் பப்ளிஷிங் ஹவுஸ்,

திருவல்லிக்கேணி, சென்னை.

 1928 [விலை அணு 12.

# FOREWORD

I am glad that I have been accorded the privilege of writing a brief foreword to this excellent Tamil adaptation of Bana's famous Sanskrit romance *Kadambari*. There is an old saying to the effect that *Kadambari rasagnanam aharopi na rochate* (to those that enjoy the sweetness of Kadambari, even delicious food would not be welcome.) The word-painting in the original is of the most wonderful and attractive character; and the rhythmic cadences of the Sanskrit poetic prose in the work have a haunting melody and stateliness.

The author of this work has seen and has been fired by the sight of

> " The pride and ample pinion
> That the Indian eagle bear
> Sailing with supreme dominion
> Through the azure deep of air."

His language also has the sonorous stateliness and dignity and flow of the style of Bana. *I have no doubt that the work will furnish instruction and delight not only to the school-going population but also to the public at large.* One of the primary

factors in our national regeneration is the vitalisation of the vernaculars by translating into each vernacular the best works in Sanskrit which is the classical language of the whole of India and in the other beautiful vernaculars of India and in the modern terse and progressive languages in the West. An enrichment of literature and an enrichment of life are mutually in a relation of cause and effect and of effect and cause. I wish the author and the publisher who have done good work in such a direction ever-increasing public appreciation.

Trichinopoly,
6—2—'28

K. S. RAMASWAMI SASTRI

# நான்முகம்

தண்டமிழகமே! நின் தொன்மை, இனிமை, மாண்பு முதலிய வினைத்தையும், சில நூற்றாண்டுகளாக, நின்மகாஅர் வியம்பவொண்ணு வியல்பால் மறந்து வறிதிருந்தனர். இற்றை நாளில், அவர் நல்லுணர்ச்சியையும், எஞ்சா வெழுச்சியையும் பெற்றுத் தமிழ்மடம் பட்டனராய்ப் பல்லிடத்தும் பேசுகின்றனர். இளஞ் சிறாஅரெல்லாம், ஏக்கம் நீத்து, 'எம் தாய்மொழியைச் சிறக்கக் கற்பேம்' என ஊக்கங் காட்டுகின்றனர். பல்கலைக் கழகமும், 'தாய் மொழிப்பேணுவதே கருமமுங் கடப்பாடும்' என்று பல்லாற்றானும் பணி செய்வதிற் றலைசிறந்து விளங்குகின்றது. ஆதலின், நின்னைப் பற்றி நலிந்த வின்னல்கள் பலவும் அழிந்தொழிந்தன. இனி நீ உண்மைத் தமிழகமேயாகுவை என்பதி லையமும் உளதோ?

நின்னிற் பிறந்து வளர்ந்து, நின்மொழியும் வடமொழியும் ஒருங்கே பயின்ற நின் பல்லாயிரம் மகாஅர்தமுள் ஒருவனுகிய வெற்கு, மகாகவி பாணபட்டனூர் இயற்றிய காதம்பரி எனுங் கத்திய காப்பியத்தைப் பெரிதும் தழுவி, உயர்தரப் பாடசாலை மாணவர்க்குப் பயன்படுமாறு, தமிழில் சுவைபட எழுதவேண்டு மெனுங் கருத்து, யான் அந்நூலைக் குருமுகமாகப் பாடங் கேட்ட அந்நாள்தொட்டு, நாளிதுகாறும் என்னுளத்துக் குடிகொண்டிருந்த தாகலின், அதனை ஒருவாறு நிறைவேற்றிக்கொண்டேன். மகா கவி பாணபட்டனூர் பெருமையும் எனது சிறுமையும் மிகப்பெரிய. எனினும், சில வழிகாட்டிகளான பெரியோரைப் பின்பற்றி, ஆசைவாய்ப் பட்டு யானிதை எழுதப் துணிந்தேனன்றி, முன்னூலினுஞ் சிறக்கப் பின்னூலொன்று எழுதவேண்டுமெனுங் கருத்தினுலன்று.

மகாகவி பாணபட்டனார் சோணமா நதிக்கரையில் உள்ள பிருது கூட மென்னும் பதியில் வத்ஸ மரபிற் பிறந்த வேதியர். இவரது தாயாரின் பெயர் இராசதேவியார்; தந்தையாரின் பெயர் சித்திரபானு. இளமைப் பருவத்தே அவரது தாயார் இறந்துவிடத் தந்தையாரால் எல்லாக் கலைகளையும் ஒருங்கேபயின்று சிறந்த கவியானார். பின்னரில் தந்தையாரும் இறந்தனர். இறக்கவே, பாணகவி அடைந்த துன்பத் துக் களவில்லை. பின்னர், ஒவ்வொரு துறையிலும் வல்லவர்களான நண்பர் பலருடன் தேச யாத்திரை செய்து, இறுதியில் ஊர் வந்தனர். அவரது புகழ் எங்கணும் பரந்தது. பரக்கவே, கான்யகுப்ஜத்தில் அரசு செலுத்திய ஸ்ரீஹர்ஷன் என்னும் சக்கரவர்த்தி அவரைத் தன் அவைக்களப் புலவராக்கி ஆதரித்து வந்தான். அவனது காலம் ஆறுவது ஏழாவது நூற்றாண்டுகளின் இடைப்பகுதியெனச் சரித்திர ஆராய்ச்சியாளர் கூறுவர். ஸ்ரீஹர்ஷன் அவைக்களத்தில் எத்தனை யாண்டுகள் புலவராக நங்கவிவாணர் இருந்தாரென்பதை அறுதி யிட்டுக் கூற முடியாதாயினும், அவர் காதம்பரியின் முதற்பகுதியை எழுதி முடித்த பின்னர், இம்மண்ணக வாழ்வை ஒருவி, விண்ணக வாழ்வை மருவினர் என்பது மாத்திரம் புலனாகின்றது. அன்றியும், காதம்பரியிற் கூறப்படும் வைசம்பாயனன் என்ற கிளியின் வரலாறு அவரது வரலாற்றோடு ஒருபுடை ஒப்புநோக்கி ஆராயத்தக்கது. பாணபட்டனார் அறியாத விஷயம் இல்லை; சொல்லாத பொருளில்லை; சொல்லாத கற்பனைக ளில்லை. இயற்கையின் அழகை எடுத்தியம்பும் வன்மை யிவர்க்கே உரியது. இப்பெரியாரை நயவாதாரும் வியவா தாரும் மிகச் சிலர்.

இந்நூல், அரசு அமைச்சு முதலியவற்றி னியல்புகளையும், இல் லறத்தின் சிறப்பினையும், மகப்பேற்றின் மாண்பினையும், கல்வியின் உயர்வையும், நட்பின் நலத்தினையும், கற்பின் மேன்மையினையும், உலகில் மக்கள் ஒழுகவேண்டிய ஒழுகலாற்றினையும், விதியின் வலி யினையும், தவத்தின் மாட்சியினையும் நன்னர்த் தெரிக்கு மியல்பினை யுடையது.

தமிழகமே! நீ கடமை செய்வதிற் கண்ணுங் கருத்துமுடையை; காலப் போக்கையும் அறிகுவை. மாணவரது தற்கால நிலையும் அவர் பயிலவேண்டிய அளவும் உனக்குத் தெரியும். ஆதலின், கலாசாலை மாணவர்க்குப் பெரிதும் பயன்படும் நூற்களுள் இதனையும் ஒன்றாய்ச் சேர்த்துக்கொள்ளுமாறு நின்னை வேண்டுகின்

இலக்கியங்களெனும் தேனிறை மலர்களிற் பன்முறையும் பறந்து சென்று, இன்பமே துய்க்கும் பாவலர் நாவலராய வண்டர்காள்! நுந்தமை வணங்கி யுமக்கோர் விண்ணப்பம் செய்வல்: இந்நூற்கண், என் அறியாமையால் நேர்ந்த பிழைகள் பல மலிந்திருத்தல் கூடும்; அவற்றைக் கருணையுடன் பொறுத்து எனக்கு அறிவிக்குமாறு நுந்தமைப் பணிவுடன் வேண்டிக்கொள்கின்றேன்.

மற்று, இந்நூல் கையெழுத்துப் பிரதியாயிருந்த நாட்டொடங்கி அச்சுப் பொறியேறி யிறங்கும்வரை, உடனிருந்து உதவி செய்து ஊக்கமளித்துப் பெருமைப்படுத்திய என் நண்பர்க்கும், இதனையும் பதிக்க முன் வந்த பதிப்பாசிரியர்க்கும் என் மனமார்ந்த வந்தனத்தைத் தெரிவித்துக் கொள்ளுதலன்றி என்னால் செயக் கூடியது வேறென் ?

கபிலாகம்,
இராயப்பேட்டை,
30 - 1 - '28

பண்டிதரடிப்பொடி,
**இ. கி. நடேச சருமன்**

# பொருளடக்கம்

1. பறைக்குலப் பாவையும் கலைநிறை கிள்ளையும் .. 1
2. அருளும் மருளும் .. 8
3. சந்திராபீடனும் வைசம்பாயனனும் .. 20
4. சந்திராபீடன் கோமுடி சூடலும் திக்கு விசயமும் 39
5. கின்னர மிதுனமும் அச்சோத வாவியும் ... 42
6. மகாசுவேதை சந்திராபீடற்குத் தன் வரலாறு கூறல் 51
7. கபிஞ்சலன் வரவும் மகாசுவேதையின் புறப்பாடும் 62
சந்திராபீடன் ஏமகூடம் போதல் ... 73
இளவரசன் ஏமகூட நீத்து உச்சயினிக் கெழுதல் 91
10. பத்திரலேகையின் வரவும் காதம்பரியின் செய்தியும் 103

II

11. கேயூரகனது வரவும் பத்திரலேகையின் செலவும் 107
12. சந்திராபீடன் வைசம்பாயனனைக் காணச் செல்லல் 113
13. வைசம்பாயனன் நிலையைச் சிற்றரசர் கூறல் ... 115
14. வைசம்பாயனன் செய்தியை அரசரும் அமைச்சரும் அறிந்து வருந்துதல் ... 119
15. சந்திராபீடன் அச்சோதஞ் சென்று தன் நண்பன் கிளியானமை கேட்டு இதயம் வெடித் திறத்தல் ... 124
16. காதம்பரியின் வருகை ... 129
17. இந்திராயுதம் கபிஞ்சலனாகித் தன் வரலாறு கூறல் 132
18. தாராபீடனாதியோர் வருகை ... 137
19. தாராபீடன் மகனைக் கண்டு துறவு பூணல் ... 142
20. வைசம்பாயனன் பஞ்சரத் தடைபடல் ... 144
21. இன்பப் பெருக்கு ... 154

# காதம்பரி

## காப்பு

துண ணிறை யடியவர் கருத்தினிற் குலவிடுங்
கணசார்க் கிறைவியின் கருவினி லுதித்திடுங்
கணபதி யடியிணை துணையெனக் கருதினன்
கணக்கில காழ்வினை களைந்தெறி தாவரோ.

ஞானச் சுடரென நிலவுறு நாமகள்
ஊன மொழித்துறை வாளென் னுளம்பிசை.

## 1. பறைக்குலப் பாவையும் கலை நிறை கிள்ளையும்

நிலமகள் நெற்றித் திலகமென விளங்கியது அலகில் புகழ் மிகு மாளவ தேயம். அத்தேயத்தில் கோல் கோடாது சூத்திரக னென்பான், அரசியற்றி வந்தான். அம்மன்னன் அடியிணைகள், குறுநில மன்னர்களின் சேகரச் சென்னிகளால், என்றும் அலங்கரிக்கப்பட் டிருக்கும். அவன் கடல் சூழ் காசினியைக் கையகத்துக் கொண்டவன்; வரம்பில் வேள்விகளை விரும்பிச் செய்தவன்; செயற்கரிய செயல்களைச் செய்வதில் இணையற்றவன்; சாத்திரங்கட்குக் கண்ணாடிபோன்றவன்; கலைகட்கெல்லாம் மூலமானவன்; குணங்கட் கெல்லாம் நல்லக மானவன்; பாநலம் சுவைக்கும் பாவலர்க்குப் பற்றுக் கோடென நின்றவன்.

வேத்திரவதி யெனும் நதியாற் சூழப்பட்ட விதிசை யென்னும் மாநகரே அம்மன்னனுக்கு இராசதானி. அரசன்

அந்நகரிலிருந்து கண்ணகன்ற பூமியைக் கவலை யேதுமின்றிப் பரிபாலித்து வந்தான். அவ்வரசற்கு அறிவிற் சிறந்த அமைச்சர் பலரிருந்தனர். அவர் அமர குருவின் அறிவினையும் எள்ளுந் திறத்தினர்; வழிவழி அமைச்சுத் தொழில் பூண்ட குலத்துப் பிறந்தவர்; நீதிநூல்களை நிரம்பக் கற்று, அவற்றின் வழி நிற்கும் நல்லொழுக்கம் நிறைந்தவர்; மறுவில்லா மனத்தர்; அஞ்சா நெஞ்சர்; பாவத்தைக் கண்டு பயந்தவர்; அயலார் பொருளில் அணுவளவும் ஆசை யில்லாதவர்; குன்றாத ஊக்கமுடையார்; அரசனிடம் அன்புடை யகத்தினர்.

சூத்திரகனுக்குப் பல அந்தப்புர மகளிர் இருந்தனரெனினும், அவரோடு அளவளாவுதலில் அவன் மனம் செல்லவில்லை. ஆதலின், அவன் தன்னைப்போல் அறிவுடையவர்களும், சமான வயதுடையவர்களுமான நண்பர்களோடு எப்போதும் காலத்தைக் கழித்துவரத் தொடங்கினான். அவன் சில நேரம் மத்தளம் முழக்கி மகிழ்வான்; சில சமயம் வேட்டைமேற் செல்வான்; பண்டிதர்களுடன் சொற்போர் நிகழ்த்துவதில் சில நாழிகைகள் கழிப்பான்; சில போது ஓவியம் தீட்டுவான்; கவிக ளியற்றுவான்; சில காலம் மாதவர் தாள்களைப் பணிந்து மகிழ்வான்.

ஒரு நாள், சூத்திரகன் வழக்கப்படி கொலுமண்டபத்தில் வீற்றிருந்தனன். அப்போது ஆதித்தன் வானிடைத் தோன்றி இரண்டு நாழிகை இருக்கும். அங்கே, செருகிய வாளுடன் விளங்கும் இடையும், நீலநிறக் கஞ்சுகம் அணிந்த உடலுமுடைய வாயிற் காக்கும் பெண்ணொருத்தி, அரசன் திருமுன் முழந்தாளிட்டுப் பணிந்து, "வேந்தரே, உமக்கு வெற்றி யுண்டாகுக. அரண்மனை வாயிலில், பெண்ணொருத்தி தங்களைப் பார்க்க விரும்பிக் காத்திருக்கின்றாள். அவள் பறைக் குலப் பாவை; தென்னாட்டவள்; கறுத்த மேனியள்; அழகே

உருக்கொண்டதன்னாள்; பஞ்சரத்திலடைத்த கிளியொன்றைக் கையில் ஏந்தியிருக்கின்றனள். அவள், 'உலகத்துள்ள அரும் பொருள்கள் அரசர்க்கே உரியன; நான் கையில் வைத்திருக்கும் கிளி மிகவும் ஆச்சரியம் பொருந்தியது; இதை அரசர் அடியிணையிற் சேர்த்து, அவரைப் பார்த்துப் போகவேண்டும்,' என்று விரும்புகிறாள். ஆதலின், தங்கள் சித்தம்,'' என்று சொல்லி அப்பாற் சென்றாள். அரசன் இதைக் கேட்டு, அருகிலிருக்கும் அரசர் முகங்களை ஒரு முறை உற்று நோக்கி, 'ஏன்? அவளை வரவேற்பதால் என்ன குற்றம்?' என்று சொல்லி, வாயிற் காப்பாளைப் பார்த்து, 'அவளை இங்கே வரச் செய்,' என்று கட்டளை யிட்டான்.

வாயிற் காப்பவளும் அரசனது ஆணையைத் தலைமேற் கொண்டு, வெளிச் சென்று, பறைக்குலப் பாவையை அழைத்து வந்தாள். அம்மாது, தூரத்திலே நின்றே அரசனது வடிவழகை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்து, அவனும் அவனுடைய அமைச்சர்களும் தன்னிடத்துக் கவனம் செலுத்தவும், தனது வரவை அவர்கள் அறியவும் தன் கையிற் றாங்கிய மூங்கிற் கழி யொன்றால் தரையை மெல்லெனப் புடைத்தனள். அவ்வோசையால் அவையிலுள்ளார் கண்கள் அனைத்தும் அப் பெண்ணிடத்துப் பொள்ளெனத் திரும்பின.

இளமை கழிந்து முதுமை முதிர்ந்தும், இடையறா வுழைப்பினால் நரையுந் திரையுமின்றிக் குன்றாவலியுடைய ஒரு கிழவன் முன்னே வர, காற்றினால் நாற்புறமும் அலைந்தாடும் காகபக்கமென்னும் குடுமியையுடைய பறைக்குலச் சிறுவன் ஒருவன், பொன்னினியன்ற கிளிக்கூடொன்றைக் கையிலே தாங்கி, அம்முதியோனைப் பின்றொடர்ந்து வர, குதிகால் வரை தொங்குகின்ற கருநிறக் கஞ்சகமெனும் மெய்ப்பை அணிந்து,

மாந்தளிரேயென வனப்பும் மென்மையும் பெற்று, நோய்ந் திடலின்றியும் துப்பின் வண்ணம் பொருந்திய துகிலொன்றாற் சென்னியை முக்காடிட்டு, இடையிற் காஞ்சி அணிந்து, கழுத் தில் முத்து வடம் பூண்டு, எல்லா வழகும் ஒருங்கே திரண்டு வடிவெடுத்து வந்தாலென மெல்ல நடந்து அவ்விளஞ்சிறுனுக் குப் பின்னே வந்த அப்பறைக்குலப் பெண்ணை, வேந்தன் இமையா நாட்டம் பெற்றுனென நோக்கினன்.

வந்த பாவையும் பார்த்திவனைக் கண்டு, தன் காதிலே யணிந்த நறுந்தளிர் நழுவி விழுமாறு நன்கு பணிந்து, அருகி லிருந்ததோர் அரதன மேடையில் அமர்ந்தனள். உடன் போந்த கிழவன், சிறுவன் கையிலிருந்த கிளிக்கூட்டை வாங்கி, அரசனருகிற் சென்று, 'இறைவீர், இதோ இருக்கும் கிளி யைப் பாருங்கள். இஃது எல்லா நூல்களையும் ஐயந் திரி பறக் கற்றது; இசை நூலறிவில் இணையற்றது; காப்பியம், காதை, நாடகம் முதலியவற்றை மறுவற உணர்ந்தது; நூற்கள் இயற்றும் வன்மையில் நிகரற்றது; களிறு, பரி, ஆடவர், மக ளிர் இவர்தம் இலக்கணங்களை இனிதறியுந் தன்மையது; பல சொல்லியென்? இஃது இந்நிலவுலகத்துக்கு ஓர் அரும்பெறல் மணி யெனலாம். இக்கிளியின் பெயர் வைசம்பாயனன் என் பது. மணிகளுக்கெல்லாம் இரத்நாகரம்போல உலகிலுள்ள அரும்பொருட்கெல்லாம் அரசனே உரியவன். இது கருதியே எம் தலைவன் மகள், இவ் வைசம்பாயனனைத் தங்கள் திருவடி கட்குக் கொணர்ந்தாள். ஆதலின், அரசரேறே, இதனை ஏற் றருள்க,' எனச் சொல்லிக் கூட்டினை வேந்தன்முன் வைத் துச் சிறிது விலகி நின்றான்.

கிழவன் விலகியதும், கிளியானது, மன்னற்கு எதிரே திரும்பித் தன் வலக்காலைப் பணிவுடன் சிறிது மேலுயர்த்தி

வேந்தனை நோக்கி, இனிய குரலால், 'பாராளும் மன்னரே, உம் மாற்றார் மடந்தைமார் தமது கண்ணீரருவியில் நன்னீராடி, இதய சோகமெனும் சுடுநெருப்பின் அருகி லிருந்து, நல்லணி களைந்து, நீருஞ் சோறும் நீக்கிக் கடுந்தவம் புரிகின்றனர்,' எனப் பாடி வாழ்த்தியது.

அரசன், தன்னை அக்கிளி வாழ்த்தியது கேட்டுப் பெரு மகிழ்வடைந்தான்; தன் அருகிலிருக்கும் அந்தணர் குலத்து அமைச்சுப் பெருந்தகையாரான குமாரபாலிதரை நோக்கி, 'அமைச்சரே, இக்கிளி, எழுத்துக்களை எவ்வளவு நன்றாய் உச் சரித்தது பார்த்தீர்களா! இனிமையான குரலுடன் எவ்வளவு அழகாய்ப் பேசிற்று! என்ன ஆச்சரியம்!' என்றான்.

அதைக் கேட்ட மந்திரியார், 'அரசரே, இதில் என்ன வியப்பு இருக்கிறது? கிளி முதலிய பறவைகள், மனிதர்கள் பேசுவதைக்கேட்டுத் தாமும் அப்படியே பேசும். இக்கிளி முற் பிறப்பின் வாஸனையாலோ, அன்றிப் பயிற்சி பெற்றோ பேசு கிறது. முற்காலத்தில், மனிதர்களைப் போலவே இப்பறவைகட் கும் பேசுந்திறமை வாய்ந்திருந்தது; பிற்காலத்தில் இவற்றுக்கு அக்கினியின் சாபத்தால், அவ்வாற்றல் இல்லாமற் போயிற்று. அச்சாபத்தினாலேயே யானை முதலிய விலங்குகட்கும் நாத் திறம்பின,' என்று மொழிந்தனர்.

உடனே, நடுப்பகலில் முழக்கும் சங்கொலியும், நாழிகை முரசின் ஒலியும் வானத்தைப் பிளந்து சென்றன. ஒலி கேட்ட அரசன், பகல் நீராடக் கருதிப் பொள்ளெனத் தன் இருக்கை விட் டெழுந்தனன். மற்றையோரும் தத்தம் இருக்கை சென் றனர்.

எழுந்த அரசன், பறைக்குலப் பெண்ணை நோக்கி, 'இளைப் பாறுக,' என்று மொழிந்து, வெற்றிலைத் தட்டேந்தும் பணிப்

பெண்ணை நோக்கி, 'வைசம்பாயனன் எனும் கிளியை அந்தப்புரத்துக்கு எடுத்துப் போ,' என அவட்குக் கட்டளையிட்டுத் தன் உரிமை நண்பர் நால்வருடன் அரண்மனை புகுந்தனன்.

புகுந்த அரசன், தன் அணிகளை யெல்லாம் களைந்துவிட்டுத் தேகப்பயிற்சி செய்யுமிடஞ் சென்றான்; அங்கே, அவனுடைய நண்பர் சிலருடன் சின்னேரம் சிலம்பம் பழகினன்; பிறகு நீராடுமிடஞ் சென்றான். அவ்விடத்தில், பொன்னானியன்ற பெரியதொரு கடாரத்தில், நறுமணங் கலந்த நன்னீர் நிரப்பி வைக்கப்பட்டிருந்தது. அதன்பாங்கர்ப் பளிக்கினாற் செய்த பீடமொன் றிருந்தது. ஒருசார், மணிகள் குயிற்றிய சிறு கலயங்கள் நிறைந்திருந்தன. அரசன், தன் வழக்கப்படி நீராடி, பாலாவி முகந்தென மெல்லிய வெண்பட்டிரண்டினை அரைக்கொன்றும், மேலுக்கொன்றுமாக முறையே உடுத்துத் தரித்துத் தலைப்பாகை யணிந்து, நீர்க்கடன் முடித்துத் தேவாலயஞ் சென்றான். சென்ற வேந்தன் சிவபெருமானை முறைப்படி பூசித்தான்; பின்னர்ப் போனக முண்டு, வெள்ளிலை மென்று, பானிறப் பட்டு விரிக்கப்பட்டதோர் அணையின் மீது சிறிது சாய்ந்துட்கார்ந்துகொண்டு, அங்கு நிற்கும் பணிப் பெண்ணை நோக்கிக் கிளியின் விருத்தாந்தத்தை அறிய ஆவலுற்றவனாய், 'கிளியை இங்கே எடுத்து வா,' என்று கட்டளையிட்டான்.

ய சிறிது நேரத்தில் வைசம்பாயனன் என்ற கிளி பஞ்சரத்துடன் பணிப்பெண்ணால் கொண்டுவரப்பட்டது. அரசன், அக்கிளியை நோக்கி, 'கிளியே, அந்தப்புர மாதர் உனக்கு உருசியான நல்லுணவுகள் கொடுத்தனரா?" என்று கேட்டான். அது கேட்ட கிளி, 'அரசரே, அந்தப்புரத்தில் நான் உண்ணாத உணவுகள் இல்லை. குயில்

களின் கண்ணொளிபோன்ற நிறமுடைய நாவற்பழச் சாற்றை வேண்டியமட்டும் குடித்தேன்; சினங் கொண்ட சிங்கத்தின் நகங்களால் பிளக்கப்பட்ட மதயானையின் தலையிலிருந்து உதிர்கின்றனவும், இரத்தந் தோய்ந்தனவுமான முத்துக்களின் காந்தியைப்போன்று ஒளி வீசும் மாதுளம் விதைகளை மனமார உண்டேன்; பசுமையும் இனிமையும் கொண்ட நெல்லிக்கனிகளை நிரம்பத் தின்றேன். பல சொல்லியென்? தங்கள் உரிமை மகளிரின் தளிர்போன்ற கைகளால் எடுத் தூட்டப்பட்ட எந்த உணவும் எனக்கு அமுத மயமாகவே இருந்தது,' என்றது.

உட[illegible]ரகனை, அக்கிளியின் வரலாற்றை [illegible]ய மிக்க ஆவல் உள்ளவனாய், 'சுகமே, நல்ல திருக்கட்டும். உன் வரலாற்றனைத்தையும் கூறி என் ஆவலை ஒழி. நீ எங்குப் பிறந்தனை? உனக்கு இப்பெயரிட்டோர் யாவர்? உன்னைப் பெற்றோர் யாவர்? நீ வேதம், சாத்திரம் இவற்றைப் பயின்றது எங்ஙனம்? உன் ஆசிரியர் யார்? இவையனைத்தையும் ஒரு வேளை வரத்தினாலடைந்தனையோ? கல்வியினால் பெற்றனையோ? இதற்கு முன்னே நீ எங்கிருந்தாய்? உன் வயதென்ன? கூட்டில் ஏன் அடைபட்டாய்? பறையர் கையில் எப்படிச் சிக்கினை? ஈண்டு எப்படி வந்தனை?' என்று பல வினாக்களை அன்புடனும் ஆவலுடனும் கேட்டான். இவ்வினாக்களைக் கேட்ட கிளி, சிறிது நேரம் ஆலோசித்து, 'அரசரே, என் வரலாறு மிகப் பெரிது. அவா இருந்தால் கேளும்; சொல்லுகிறேன்,' என்று சொல்லத் தொடங்கியது:

## 2. அருளும் மருளும்

'குணகடல், குடகடற் கரைகளைத் தழுவிய விந்தியாடவி எனப் பெயர்கொண்ட காடொன்று உண்டு. அது மலையினும் உயர்ந்த மரங்கள் நெருங்கியது; தாரகைகள் எனத் தோற்றும் மலர்த்திரளை யுடையது. அக்காட்டின் ஒரு பகுதி தண்டகாரணியம் எனப்படும். புண்ணிய நதியாகிய கோதாவிரியால் சூழப்பட்ட அகத்திய முனிவரின் ஆச்சிரமம் அதன் ஒருபால் விளங்கும். அவ்வாச்சிரமத்தில், அம்முனிபுங்கவர்தம் மனைவியாராகிய உலோபாமுத்திரையாரால் பாத்தி கட்டித் தண்ணீர் பாய்ச்சி வளர்க்கப்பட்ட வான் தோய் மரங்கள் கண்ணில விளங்கும். 'பிரம்மசரியத்தின் உருவே யிவன்!' எனக் கண்டார் நினைக்கும் தோற்றத்தையுடைய திருடதஸ்யு என்னும் அகத்திய முனிவர்தம் குமாரனால் அவ்வாச்சிரமம் எப்பொழுதும் பரிசுத்தமாகக் காணப்படும். இராமர், தம் மனைவியோடும், தம்பியோடும் கான் போந்து வசித்த பஞ்சவடி என்னும் தூய தலமும் அங்குத்தான் இருக்கின்றது. இராமபிரான் அகத்திய முனிவர்தம் அருள்பெற்று விளங்கியதும் அவ்விடமே.

'அவ்வாச்சிரமத்தின் அருகில், பம்பை என்ற ஒரு தாமரைப் பொய்கை இருக்கின்றது. அஃது ஆழமும், அகலமும், தெளிந்த நீரும் உடையதாதலால், நான்முகனால் படைக்கப்பட்ட இன்னொரு கடல்போல் விளங்கும் தன்மையது. அதில் காரன்னப் பேடுகளின் கலகலவென்னு மோசை என்றும் நிறைந்து விளங்கும். நீர்த்துறைகளில், முனிவர் இறங்கித் தத்தம் கமண்டலங்களில் நீர் மொள்ளும் குபுகுபுவென்னு மோசை செவிக் கின்பம் தரும். எங்கும் பசுமையான தோற்றத்தைத் தருங் கொடி வீடுகள் அப்பொய்கையின் நாற்புறங்களிலும் காணப்படும்.

'அப்பொய்கையின் மேற்கரையில், வன தேவதைகளின் மாளிகை போன்று மிக வுயர்ந்ததோர் இலவ மரம் உளது. அத னடியில் யானைகளின் துதிக்கைகள்போன்ற மலைப்பாம்புகள் சுற்றிக்கொண்டிருக்கும்; நீருண்ட மேகங்களும் அதன் கிளை களில் சற்று இளைப்பாறியே செல்லும். அம்மரத்தின் கிளை களிலும், பொந்துகளிலும், பற்பல தேயங்களிலிருந்து வந்த கிளிக்கூட்டங்கள், தத்தம் கூடுகளைக் கட்டிக்கொண்டு, பயம் ஏதுமின்றி வாழும். இலைகள் நிறைந்து காணப்படாவிடினும், கிளிகளின் பசுமையால், நிறைந்த இலைகளையுடையதுபோல அம்மரம் காணப்படும். அக்கிளிகள் இரவெல்லாம் தத்தங் கூடுகளில் வசித்துக் காலைப் பொழுதில், தூண்கள் இல்லாமல் கட்டிய தோரணங்கள் போல வானத்தில் வரிசையாகப் பறந்து இரை தேடச் செல்லும்; மாலையில், திரும்பி வந்து, தம் குஞ்சு களுக்கு உணவினை ஊட்டி மகிழும்.

'என் தாய் தந்தையர் அம்மரத்திலிருந்த பெரியதொரு பொந்திலே வசித்துவந்தனர். புத்திரப்பேறில்லை என்று நினைத்து வருந்திய என் பெற்றோர்க்கு, முதுமைப் பருவத்தில், கடவுளின் அருளால், ஒரேயொரு ஆண்குஞ்சாகிய நான் பிறந் தேன். என்னை ஈன்ற வயவு நோயால் என் அன்னை இறந்து விட்டாள். தந்தையோ, மனைவி பிறந்ததால் மூண்ட சோகக் கனலால் எரிக்கப்பட்டாராயினும், அதை வெளியிடாது உள்ள டக்கி, என்னிடம் வைத்த அன்பின் மிகுதியால், என்னைப் போற்றுவதிலேயே கண்ணுங் கருத்துமா யிருந்தார். அவர் நிறைந்த மூப்பினர்; சரிந்த தோளினர்; உதறிய சிறகினர்; நடுங்கு முடலினர். வெளியே பறந்து சென்று இரை தேடி வந்து என்னைக் காப்பாற்றச் சிறிதும் திறமை யில்லாத என் தந்தையார், கூடுகளிலிருந்து மரத்தடியில் சிதறிக் கிடக்கும் தானிய மணிகளையும், சிதைந்த பழங்களையும், தேய்ந்துபோன

தம் அலகினால் எடுத்துக்கொணர்ந்து என்னை யுண்பித்து மகிழ்வர்; நான் உண்டு மிகுந்ததைத் தாமுண்டு பசி யாறுவர்.

'இப்படியிருக்க, ஒருநாள் விடியற்காலத்தில் பறவைகளெல்லாம் இனிமையாய்ப் பாடி ஈசனைத் துதித்துக்கொண்டிருந்தன. பம்பைப் பொய்கையில் அன்னப் பேடுகள் இன்னொலி யியம்பின. சூரியன் உதய கிரியில் தோன்றினான். அந்த வனத்துறு நாண்மலரெல்லாம் தளை யவிழ்ந்து விளங்கின. பொய்கையி லுள்ள கமல மலரெல்லாம் தங்கள் நாயகனை வாய் திறந்

'நான், என் தந்தையாருக் கருகிலிருந்த ஒரு கூட்டி லிருந்தேன். அப்பெருங்காட்டில் திடீரெனப் பேரொலி யொன் றுண்டாயிற்று. சிறிது நேரத்தில் அது மக்கள் வேட்டை யாடுவதா லெழும் ஒலி யென்று எனக்குத் தெரிந்தது. பற வைகளெல்லாம் பயத்தாற் பிடியுண்டு, பரபரப்புடன் பறந்து சென்றன. யானைகள் மருண்டு பிளிறின. காட்டுப் பன்றிகள் தங்கள் வீட்டை நோக்கி உறுமிப் போயின. மலைக் குகை களில் உறங்கி யெழுந்த அரிமாவெல்லாம், திசைகள் நடுங் கும்படி கர்ச்சித்தன. நான், இவற்றைப் பார்க்கவும் கேட்க வும் சகியாமல், என் அருமைத் தந்தையாரின் சிறகுகளில் ஒளிந்துகொண்டேன்; பிறகு, அங்குப் பெரிய வேடர் கூட்டம் ஒன்று வருவதைக் கண்டேன். அவ்வேடர்கள், வரும்போதே, 'இதோ, காட்டெருமைகள் தங்கள் கொம்புகளால் தரை யைக் குத்தி எழுப்பிய புழுதி! அதோ, யானைக் கூட்டம்! அப் பால் சிங்கத்தி னீட்டம்! அம்மரங்களுக்கப்பால் பன்றிக் கூட் டம்! இதோ, கவரி மான்கள் அணி அணியாய்ச் செல்லுகின் றன! ஏன் நிற்கின்றீர்கள்? வேகமாய்ச் செல்லுங்கள்! கையில் வில்லை எடுத்துக்கொள்ளுங்கள்! எங்கே வேட்டை நாய்கள்?

அவற்றை அவிழ்த்து நான்கு திக்கிலும் ஓட விடுங்கள்!' என்று கூச்சலிட்டுக்கொண்டே வந்தார்கள். சிறிது நேரத்தில் வேடர்களால் அடியுண்ட சிங்கங்கள் அண்டம் வெடிக்க ஆர்த்தன. வேட்டை நாய்கள், சதைகளைக் கடித்துப் பிடுங்கிய தால் மான்கள் அலறின. மரங்களிலிருந்த பறவைகளெல்லாம் கீச்சுமூச்சென்று ஒலித்துக்கொண்டு, கூட்டங் கூட்டமாய்ப் பறந்து சென்றன. எங்கும் அபயக் குரலன்றி வேறு குரல் கேட்கப்படவில்லை. சிறிது நேரஞ் சென்றபின் வேட்டை முடிந்தது. வனம் சித்திரத்தில் எழுதியதுபோல எங்கும் அமைதியா யிருந்தது.

'நான் சற்றுத் தைரியங் கொண்டு, தந்தையாரின் சிறகு களில் ஒளிந்தவாறே யிருந்து, கழுத்தைச் சிறிது வெளியே நீட்டி எட்டிப் பார்த்தேன். வேட்டையாடின அந்தக் கொடிய வேடர் கூட்டம் என்னை நோக்கி வரக் கண்டேன். தீவினை யென்பது பல உருவங் கொண்டு ஓரிடத்தில் திரண்டு வந்தது போல் அக்கூட்டத்தினர் காணப்பட்டனர். அக்கூட்டத்தி னிடையே இளமைப்பருவத்தினனை ஒரு சேனாபதி யிருந் தான். அவன் கைகள் உருண்டு திரண்டு முழந்தாளளவும் தொங்கின. அவன் எப்போதும் ஓய்வின்றி உழைத்து வந்தமை யால், அவன் வயிறு மிகவும் மெலிந்து காணப்பட்டது. அவ னைச் சுற்றி வேட்டையாடிக் களைத்துப்போன நாய்கள், நாக்கைத் தொங்கவிட்டுத் தொடர்ந்து ஓடி வந்தன. அவைகள், பார்வைக் குப் பிடரி மயிரில்லாச் சிங்கங்கள் போன்று விளங்கின. தீவினையின் சகோதரன் போன்ற மாதங்கன் என்ற அச்சேனா பதி கலி காலத்தின் ஓர் உருவெனவுந் தோன்றினன்.

''அந்தோ! வேடர்தம் வாழ்க்கை மிகவும் வருத்தந் தரத்தக்கது; பெரியோர்கள் வெறுக்குந் தன்மையது. காளி

முதலிய தேவதைகளுக்கு நரபலி யிடுவதே இவர் செய்யும் அறச்செயல்; கள்ளும், ஊனுமே நல்லுணவு; நரிகளின் ஊளைக் குரல்களே இவர் கற்ற சரித்திரம்; ஆந்தைகளே இவர்க்கு அறவுரை கூறும் பெரியோர்; நாய்களே அணுக்கத் தோழர். இவர்க்குக் கொடுமை மிக்க வேங்கைகளோடு எப்போதும் பழக்கம்; இவர்கள் பசுவினது இரத்தத்தாலே கடவுளைப் பூசை செய்பவர்கள்; திருட்டுத் தொழிலை வாழ்க்கையாகக் கொண்டவர்கள்,' என்று இவ்வண்ணம் நான் என் மனத்தில் எண்ணி வருந்திக்கொண்டிருக்கும்போது, அச்சேனாபதி மெல்ல மெல்ல வந்து நானிருந்த இலவமரத்தின் அடியிலேயே தங்கினான். தங்கியதும், இன்னொரு வேட வாலிபன், விரைந்து சென்று, பொய்கையில் இறங்கிச் சில தாமரைக் கிழங்குகளையும், இலையொன்றில் தண்ணீரையும் எடுத்துக்கொண்டு வந்து தன் தலைவனுக்குக் கொடுத்தான். அவன் அதை வாங்கி உண்டு, சிறிது இளைப்பாறித் தான் விரும்பிய நெறி பற்றிப் புறப்பட்டுச்

'அவ்வேடர்களுள் ஒரு கிழவன் மாத்திரம், தனக்குச் சரியானபடி இறைச்சிப் பங்கு கிடைக்காத காரணத்தால், அங்கேயே தங்கிவிட்டான். சிறிது நேரத்தில் வேடன் அந்த இலவமரத்தை ஒரு தரம் ஏற இறங்கப் பார்த்துவிட்டு, ஒரு கணப்பொழுதில், படிகளில் ஏறிச் செல்லுமாறுபோல அம்மரத்தில் ஏறினான். ஏறியதும், ஆங்குள்ள கிளிகளெல்லாம் செத்தவை போலாயின. வேடன், கிளைகளின் சந்து பொந்துகளில் வாழும் கிளிக்குஞ்சுகளைப் பழங்களைப் பறிப்பதுபோல ஒவ்வொன்றாய் எடுத்து, உயிரைப் போக்கித் தரையில் எறிந்தான்.

'என் தந்தையார், எதிர்ப்பாராத இவ்வாபத்தை எண்ணி எண்ணி உடல் நடுங்கினார். மரண பயம் அவர்க்கு அதிகமா

யிற்று. என்னிட மளவில்லாத அன்பு பூண்டவராகிய அவர், தாம் உயிரிழப்பினும் என்னுயிரைப் பாதுகாக்க வேண்டும் என்னும் விருப்பத்தினராய், என்னைத் தம் சிறகுகளால் மூடி மார்புடன் அணைத்துக்கொண்டார். வேடனும் எல்லாக் கிளைகளையும் பார்த்துவிட்டு எங்கள் பொந்தின் அருகில் வந்து, கருநாகத்தின் கை போன்ற தன் கையை நீட்டி, என் தந்தையாரைப் பிடித்தான். என் தந்தையார் அலகினால் கொத்தியும் கூக்குரலிட்டும் அவன் ஒன்றையும் கவனிக்கவில்லை. முடிவில் அவன் என் தந்தையாரின் கழுத்தைத் திருகித் தரையில் எறிந்தான். நான் அவரது மார்போடு மார்பாய் ஒட்டி யிருந்தமையாலும், தந்தையாரை யிழந்த துக்கத்தை அனுபவிக்க வேண்டியிருந்தமையாலும், நான் விழுந்த விடம் ஒரு சருகுக் குவியலானமையாலும் கீழே விழுந்தும் உயிர் பிழைத்தேன்; இல்லாவிட்டால், சிதறிப்போயிருப்பேன். அந்தக் கிழவேடன் மரத்திலிருந்து இறங்கிவருவதற்குள் நான் தத்தித் தத்திச் சருகுகளுக்குள்ளே புகுந்துகொண்டேன். வேடன் இறங்கி வந்து தான் கழுத்தைத் திருகி எறிந்த கிளிகளை யெல்லாம் வாரி எடுத்துக்கொண்டு தன் தலைவன் சென்ற வழியே சென்றுவிட்டான்.

'தாய் இறந்த பின்பு என்னைக் காப்பாற்ற இருந்த என் தந்தையாரும் இறக்கவே, எனக்குச் சோகம் அதிகமாயிற்று. உயிரை விடவும் எண்ணினேன். ஏதோ என் சிறு பிள்ளைத்தனத்தால், இவ்வுலகில் இருப்பதுவும் நன்றென எனக்குத் தோன்றிற்று. தந்தையார் இறந்ததால் மனத்துன்பமும், மரத்திலிருந்து கீழே விழுந்ததால் உடல் வலியும் அதிகமாயின. நீர் வேட்கையால் நாவறண்டது. வெளியே எட்டிப் பார்த்தால் வேடன் கண்டுகொள்வானோ என்ற பயமும் என்னைப் பிடித்து வாட்டியது. 'எப்படியாயினும் ஆகட்டும்!' என மனந்தேறிச்

சற்றுக் கழுத்தை உயர நீட்டி எட்டிப் பார்த்தேன்; வேடன் நெடுந்தூரம் சென்றுவிட்டதை யுணர்ந்தேன். பிறகு சருகு களின இடையிலிருந்து, சிறிது முளைத்து வெளி வந்த சிறகு களின் உதவியால் தத்தித் தத்திச் சென்று ஒரு பசுமரத்தின் வேருக்குள் ஒளிந்துகொண்டேன். அங்கிருந்து, நீர் வேட்கை யைத் தணித்துக்கொள்ள நீரிருக்குமிடம் தேடிச் செல்ல முயன் றேன். சிறகுகள் நன்றாய் முளைக்காததால், சிறிது தூரம் செல்வ தும், தள்ளாடித் தலை குப்புற விழுவதும், பிறகு எழுவது மாகத் தடுமாறித் தத்தளித்துச் சென்றேன். உடம்பைத் தாங்கவும் எனக்குப் பலமில்லை; நடக்கும் பழக்கமுமில்லை. மீறி நடந்தால் இளைப்பு மேலிடும். வெய்யிலோ, வெகு கடோரமா யிருந்தது. உடல் முழுவதும் புழுதி நிறைந்தது. இப்படி நான் வருந்திக்கொண் டிருக்கையில் என் மனத்தில் பல எண்ணங்கள் அடுக்கடுக்காய்த் தோன்றின:

" ஆ! என்ன ஆச்சரியம்! எத்தனை இடுக்கண்களை அனுபவிப்பினும், உலகிலுள்ள பிராணிகள் உயிரின்மீதுள்ள அபிமானத்தை மட்டும் விடுவதில்லை. பிராணிகளுக்கு உயி ரைக் காட்டிலும் போற்றத் தகுந்த உயரிய பொருள் இல்லை. தந்தையார் இறந்தும், என் உயிர் பெரிதென்றெண்ணி நான் இன்னும் உயிருடன் இருக்கின்றேனே! சீ! நான் கருணையற் றவன்! நன்றி கெட்டவன்! வெகு கொடியவன்! எனக்குப் பெரியதோர் உதவியைச் செய்த என் தந்தையாரைப் பின்பற்றி என்னுயிர் செல்லவில்லையே! எல்லா வகையாலும் இடர்ப் படுகின்ற எனக்குத் தண்ணீர் பருகித் தாகத்தைத் தணித் துக்கொள்ள வேண்டும் என்னும் ஆசை நீங்க வில்லையே! குளமோ, பக்கத்தில் இல்லை. பின்னுஞ் சிறிது தூரம் நடந்து போகவும் எனக்குச் சக்தியில்லை. வெயிலோ, பொசுக்கிவிடும் போல் காய்கிறது! கண்கள் சுழலுகின்றன. பெருமூச்சு அதிக

மாகிறது! அந்தோ! இச்சமயத்திலாவது கடவுள் எனக்கு மரணத்தைத் தந்தருளுவாரா?' என்றிவ்வண்ணம் நான் எண்ணி எண்ணிப் புழுங்குங்கால், அக்குளக்கரையின் சிறிது தூரத்துக்கு அப்பால் ஆச்சிரமமியற்றி, அருந்தவம் புரிந்து, அமைதியுடன் வாழும் அருளுருவரான ஜாபாலி முனிவரின் அருமைத் திருக்குமரர் ஹாரீதர் என்பார், தம் நண்பர்கள் புடைசூழ, நானிருக்கும் வழியே அக்குளத்துக்கு நீராட வந்தார்.

'தவசியரின் காந்தியே காந்தி! அவர்தம் உருவமே உருவம்! ஆ! அந்த ஹாரீதர் அன்பும் அருளும் நிறைந்தவராய் என்னருகில் வந்தார்; என்னிலைமையைக் கண்டார்; தமது அருகில் வரும் நண்பர்களில் ஒருவனைப் பார்த்து, 'நண்ப, இதோ பார்! இக்கிளிக்குஞ்சு எப்படியோ மரத்திலிருந்து தவறிக் கீழே விழுந்திருக்கிறது! ஒரு வேளை கொடிய பறவை வாய்ப்பட்டுத் தப்பி வீழ்ந்திருத்தலுங் கூடும்! மிக்க உயரத்திலிருந்து கீழே விழுந்திருப்பதால், உயிர் நீங்கும் தறுவாயில் இருக்கிறது. இதற்குக் கண்களைத் திறக்கவும் சக்தியில்லை. கால்களைப் பூமியில் ஊன்றி நிற்க முடியாது தலையைக் குப்புற வீழ்த்துகின்றது; பெரிதும் பெருமூச்சு விடுகின்றது. அந்தோ! நீர் வேட்கைபோலும்! அடிக்கடி தன் அலகைத் திறக்கின்றது பார்! ஆதலால், காலம் போக்கலின்றி இதனைத் தண்ணீர்க் கருகில் கொண்டுபோய் விடு. இல்லாவிட்டால் இதன் உயிர் துறக்கும்,' எனக் கூறியதும், அவன் என்னை நீர்க்கருகில் எடுத்துச் சென்று மெல்லெனப் பூமியில் விட்டான். பிறகு, ஹாரீதர் என்னைத் தம் மெல்லிய கைகளால் எடுத்து, சக்தி யில்லாத என் முகத்தை நிமிர்த்தி, சிறு சிறு துளிகளாக நான் பருகும்படி என் வாயில் நீர் ஊற்றினார்; உடல்மேலும், களை தீரத் தண்ணீரைத் தெளித்தார். எனக்குக் களையும் தீர்ந்தது; உணர்வும் வந்தது. கரையோரமாகப் படர்ந்திருந்த ஒரு தாமரை யிலையின் அடியில்

என்னை விடுத்து, ஹாரீதர் நீராடச்சென்றார்; நீராடி, நீர்க்கடன்களை முடித்துக்கொண்டு, புதியதொரு மாவுரியுடுத்தி, நீறுபூத்த நெற்றியராய், என்னையும் தமது கையில் எடுத்துக்கொண்டு, அருமறையோதும் நாவினராய் மெல்ல ஆச்சிரமம் சென்றார்.

'நான் அந்த ஆச்சிரமத்தைக் கண்ணுற் கண்டேன்; அதுவே நான்முகனது சத்தியலோகம் என்று எண்ணினேன். அங்குப் பரிதியின் கதிர்கள் சிறிதும் நுழைய இட மின்றி, குளிர்ந்த நிழல்தரும் உயர்ந்த மரங்கள் எங்கும் நிறைந்து விளங்கின. மாதவர்கள், நறுநெய்யை எடுத்து, ஆகுதிமந்திரங்களால் அங்கியிற் பெய்து ஓமம் செய்தார்கள். அம்மந்திரங்களைக் கிளிகளெல்லாம் தத்தம் முற்று மொழிகளால் மொழிந்து நின்றன. குருடராய மாதவர்களை மந்திகள் வழி காட்டி அழைத்துச் சென்றுகொண் டிருந்தன. ஒரு பக்கம், விரு ர வர வேற்று உபசரிக்கப்பட்டனர். ஒரு புறம், சிராத்தச் சடங்குகள் நியமமாய் நிறைவேற்றப்பட்டன. வேள்வி செய்யும் முறைகளை ஒரு முனிவர் பாடஞ் சொல்ல, பல மாணவர்கள் கருத்துடன் கேட்டுக்கொண் டிருந்தார்கள். ஒருசார் அறநூல் வாதம்; ஒருபுடை சாத்திர வாராய்ச்சி; ஒரு சிறை வேத கோஷம். என்னே அவ்வாச்சிரம வாழ்க்கையின் பெருமை!

'அங்குள்ள முனிவர், வாய்மை நோன்பினர். மாசும் மறுவும், ஓமகுண்டத்தினின்றெழும் புகையிலன்றி, அவர்கள் ஒழுக்கங்களில் இல்லை. கிளிகளின் முகஞ் சிவந்திருப்பதன்றிச் சினத்தால் முகஞ்சிவப்பார் அங்கெவரு மிலர். வாழையிலைகள் அங்குமிங்கு மலைவதல்லால், அவர்தம் மனம் அலைதல் இல்லை.

'இன்னோரன்ன பெருமை வாய்ந்த அவ்வாச்சிரமத்தின் இடைப்பகுதியில், அருண நிறம் வாய்ந்த அசோக மரமொன்று காணப்பட்டது. அதனடியில் ஜாபாலி என்னும் முனிவேந்தர் வீற்றிருந்தார். அவர் நரைத்த குஞ்சியினர்; இடையிடையே

விளர்த்த வீசையும் தாடியுமுடையவர் ; ஐம்பொறிகளெனும் அடல் மிகு பரிமாக்களின் வலி தொலைத்து அவற்றைக் கட்டுங் கயிறுகளென, நரம்புகள் நிறைந்த கழுத்தினர் ; வலிமையைக் குன்றுகட்கும், ஒளியைக் கதிரவனுக்கும் பகுத்துக்கொடுத்த தென விளங்கு மேனியர்; நான் கண்கள் படைத்த பயனை அவரைக் கண்டதால் பெற்றுப் பின்கூறுமாறு எண்ணினேன்:

“ தவத்தின் பெருமை சொல்லத் தரமன்று! இவரது உருவம் சாந்தமாகக் காணப்படினும், மாற்றுயர்ந்த பொன் னெனப் பொங்கொளி வீசுகின்றது. பற்றுக்களைத் துறந்து பகையொழித்த பண்பினரெனினும், இவரை நெருங்குகிறவர் நெஞ்சில் அச்சம் எஞ்சாது நிறைகின்றது. இவர் உலகனைத் தும் வணங்கும் திருவடிகளை யுடையர் ; கடுந்தவ மியற்றுபவர்; எல்லா உண்மைகளையும், அங்கையின் நெல்லியங் கனியென எளிதிற் காணுந் திறத்தினர் ; அடி நிழ லுறைந்தார்தம் அரு வினைகளை அகன்றொழியுமாறு செய்யும் அடலும் ஆண்மையு முடையர் ; கருணையின் வடிவினர் ; பிறவிக்கடற்குப் பெரும் புணை ; ஆசைத் தொடர்பெனும் நச்சுக் கொடிகள் படர்ந்த பாவக் காட்டுக்குக் கோடரி ; அறியாமையெனும் இருளுக்கு ஆதித்தர் ; நன்மையின் இருக்கை ; கலியின் பகை ; தபோ நிதி ; வாய்மைக்குத் தோழர் ; புண்ணியங்கட்கு மூலம்; மாரனை வென்ற வீரர் ; இன்பங்களை அடிமை கொண்டவர். இவரது அருளால், இச்சோலை பகைமையைக் கடிந்து, பொறாமையை யொழித்து நிற்கின்றது. ஆ! பெரியார் பெருமை பேசவும் படுமோ! விலங்குக ளெல்லாம் பகை யொழித்துத் திரிவதும், வெயிலால் வாடிய விரி நிற நாகம் மயிலின் சிறகிடை மகிழ் வுடன் வதிவதும், தாயைப் பிரிந்த மானின் கன்று கொய்யுளை படாத கோளரிக் குட்டிகளுடன் கூடி விளையாடிப் பெண்சிங்

கத்தின் மடியினை முட்டி, அஃது அன்பாற் சுரந்த இன்சுவைப் பாலைச் சுவைத்துச் சுவைத்துப் பருகும் பண்பும், ஜாபாலி யெனும் நன்மாமுனிவர் நல்லருளாலே யன்றோ?'

'இவ்வண்ணம் எண்ணி யெண்ணி மகிழும் என்னை ஹாரீதர், அந்த அசோகமர நீழலின் ஒருசார் கிடத்தித் தம் தந்தையாரை அட்டாங்கந் தோய அடிபணிந்து சிறிது தூரத்தில் இடப்பட்ட தருப்பாஸனமிசை அமர்ந்தனர். அங்கிருந்த முனிவரனைவரும் என்னை நன்றாய்ப் பார்த்து, 'இக்கிளிக் குஞ்சை எங்கிருந்து கொணர்ந்தாய்?' என ஹாரீதரை வினவினர்.

'அதைக் கேட்ட ஹாரீதர், 'முனிவர்களே, நான் நீராடக் குளக்கரை சென்றேன். ஆங்கிருந்த ஒரு மரத்தினடியில் இது தவறி விழுந்து குற்றுயிராய்க் கிடந்தது. இதைக் கண்ட நான், தண்ணீர் குடிப்பித்து இதன் களையைப் போக்கினேன். அம்மரம் மிக உயர்ந்ததா யிருந்தமையால், கூட்டில் இதை விட்டுவிட வழியில்லை. ஆதலால், ஈண்டு எடுத்து வந்தேன். பறக்குந்தன்மை யடையும் வரையில், நம்மாச்சிரமத்திலே வைத்து, நொய்யரிசிகளாலும், கனிகளின் சாற்றினாலும் இதை வளர்க்க விரும்புகிறேன். ஆதரிப்பாரின்றிக் கிடக்கும் வாயில்லாப் பிராணிகளைக் காப்பாற்றுத லன்றோ நமது முதற் கடமை? சிறகுகள் நன்கனம் உண்டாகிப் பறக்குந் தன்மை அடைந்ததும், இது தன் விருப்பம்போல் பறந்து போகட்டும்; அல்லது, இவ்விடமே இருப்பினும் இருக்கட்டும்,' என்றனர்

'என்னைப்பற்றி ஹாரீதர் இவ்வாறு கூறிய மொழிகளை ஜாபாலி அன்புடன் கேட்டனர்; கேட்டுத் தம கழுத்தைப் பல முறை சாய்த்துச் சாய்த்து, என்னை அன்புடன் பார்த்து, யோசித்த வண்ணம், 'இக் கிளி தான் முற்பிறப்பிற் செய்த குற்

றத்தின் பயனை இப்பிறப்பில் அனுபவிக்கிறது'' எனக்கூறினர். இறப்பு, நிகழ்வு, எதிர்வு எனும் முக்காலங்களையும் நன்கறிந்த வரும் தமது ஞானப் பார்வையான் ஞாலமனைத்தையும் அங் கையின் நெல்லியங் கனியெனக் காண்கின்றவருமான அந்த ஜாபாலியை நோக்கி, 'இஃது எங்கு என்ன தவறு செய்தது? முன்னம் எந்தப்பிறப்போ டிருந்தது ?' என்று அன்பும் அவா வும் ஒருங்கே பொருந்திய ஏனைய முனிவர் உசாவினர்.

'இதைக் கேட்ட ஜாபாலி மாமுனிவர், 'இவ்விஷயம் மிகுந்த வியப்பைத் தருவது; மிகவும் பெரியது. பகற்பொழுது சாயச் சில நாழிகைகளே இருக்கின்றன. நாம் நீராடும் வேளை யும் நெருங்குகின்றது. இறைவனைப் பூசித்து வழிபடுங் காலமும் வந்துற்றது. நீவிர் அனைவீரும் எழுந்து சென்று, அனுட்டானங்களை முறைப்படி செய்து முற்றி வாருங்கள். பிறகு, இக்கிளி எங்கிருந்து வந்தது ? முற்பிறப்பில் எப்படி யிருந்தது? கிளியாகப் பிறந்த காரணமென்ன? எனும் விடயங் களை உங்கட்குக் கூறுவேன். அதற்குள் கிளியும் சிறிது ஆகாரங் கொள்ளட்டும். நான் உங்கட்கு இதன் கதையைக் கூறி வரும்போதே இது தன் பிறப்பைத் தானே உணாந்து கொள்ளும்,' என்று கூறி எழுந்து போயினர். மற்றைய முனி வரும் நீராடப் சென்றனர்.

'கதிரவன் மேலைப் புணரியில் தோய்ந்தனன்; அவன் தோய்ந்த வேகத்தான் விண்ணின்மீ தெழும்பிய தெள்ளிய நீர்த்துளிகளெனத் தாரகைக் கணங்கள் வானத்திற் றோன்றின. முனிவர்களின் மனமென்னுமிடம் நீங்கலாக யாண்டும் இருள் நிறைந்தது. கீழ்த்திசை வெள்ளென விளர்க்கப் பாற்கடலைக் கிழித்தெழுபவன் போலத் தண்மதிக் கடவுளும் மெல்ல மெல்ல எழுந்தனன். இதற்குள் முதல் யாமத்திற் பாதி கழிந்தது.

ஹாரீதர் உண்டி கொண்டு, என்னைக் கையகத்தேந்தி, முனிவர் குழாத்தினிடையே பிரப்பினு லியன்ற உயரியதோர் இருக்கையில், நான்முகனென விளங்கும் தம் தந்தையாரின் பாங்கர்ச் சென்று, 'எந்தையீர், இப்பறவையின் வரலாற்றைச் செவிக்குணவாக விரும்பிய முனிவர் காத்து நிற்கின்றனர். இதுவும் உண்ணத் தகுவன உண்டு களை தீர்ந்தது. இனித் தாங்கள் இதன் வரலாறனைத்தையும் மொழிந்தருளவேண்டும்,' என்று கேட்டனர். முனிவரும் ஒரு முறை என்னைக் கருணையோடு ஏற இறங்கப் பார்த்து, முனிவர்களை நோக்கி, 'நல்லது; இதன் வரலாறறிய விருப்ப முளதேல் கேட்பீராக,' என்று மொழியத் தொடங்கினர்:

---

## 3. சந்திராபீடனும் வைசம்பாயனனும்

' விண் மண் பாதலமெனப்பெயரிய ஒரு மூன்றுலகத்தின் நுதியதொரு திலகமென விளங்கும் அவந்தி எனும் நாடொன்றுண்டு. அந்நாட்டின் தலை நகர் உச்சயினி என்பது. அஃது ஒளியால் விண்ணையும் வென்றது; கடலென மருளும் அகழி சூழ்ந்தது; வானளாவிய கொடி முடிகள் கணக்கில கொண்டது; வெண்சுதை தீற்றிய மதிலால், கைலையங் கிரியெனத் தோற்றும் இயல்பினை யுடையது; நீண்டனவும் அகன்றனவுமாய ஆவண மறுகுகள் வரம்பில கொண்டது; சிப்ரா வெனும் புண்ணிய நதியாற் சூழப் பெற்றது. மகா காலர் எனப் பெயர் கொண்டு, சிவபெருமான் உறையுந் திப்பியத் தலமும் அஃதேயாம்.

' இப்பெருமை வாய்ந்த உச்சயினி யெனும் மாநகரத்தில் தாராபீடன் எனும் சக்கரவர்த்தி கோல் கோடாது அரசியற்றி வந்தான். அவன் மூவகை யாற்றலும் நிறைந்தவன்; அறநூல்களை ஐயந்திரிபின்றி ஓதி யுணர்ந்தவன்; அறக்கடவு ளவதாரம் போன்றவன்; 'காலகாலனுர் காய்ந்தெரித்த

அனங்க வேளே இப்பெயர் பூண்டு வந்தனனோ!' என்று கண்டார் மருளும் கட்டழகு குடையவன். அவனது சரித்திரத்தைத் தம் பாக்கியப் பெருக்கென அனைவரும் செவியுறுவர்.

'தயரதனுக்கு வசிட்டர்போலத் தாராபீடனுக்குச் சுகநாஸர் எனப் பெயரியவோர் அந்தணர் பெருந்தகை அமைச்சராயிருந்தார். அவர் சாத்திரங்களைக் கசடறக் கற்றவர்; இளமை தொட்டு அரசனுடன் பழகிய பான்மையர்; அன்பும் அருளும் நிறைந்தவர்; நீதி நூல்களைப் பிரயோகிப்பதில் இணையற்றவர்; கூரிய மதியும் சீரிய சிந்தையு முடையவர்; எத்துணைத் துன்ப நிலையிலும் அஞ்சா நெஞ்சத்தினராய்க் காரியங்களை நிறைவேற்ற வல்லவர்; நல்லொழுக்கத்தின் உருவனையர்; வாய்மைக்கோர் அணிகலமென விளங்குவோர்.

'தாராபீடனது நாட்டின்கண் மதிநலம் வாய்ந்த மாண்புடை ஒற்றர்கள் ஆயிரக் கணக்கினராக யாண்டும் திரிதலால், எந்த விஷயத்தையும் மன்னன் எளிதில் அறிந்துகொண்டான். பிறருடைய மூச்சு விடுகையையும் அரசன் அறிந்து வந்தானென்றால், ஒற்றரின் மதி மாண்பினையும், அரசனது ஆணைத் திறத்தினையும் என்னென்று கூறுவது! சிலகாலம் தாராபீடன், தன் அமைச்சரான சுகநாஸரிடம் அரசை ஒப்புவித்துத் தன் இளமைப் பருவத்தை இன்புடன் கழிக்க மகளிர் தம் அந்தப்புரம் சென்றான். சுகநாஸரும் தம் மதிநலத்தால் எவரும் இன்புறக் கோலோச்சி வந்தனர்.

'தாராபீடன் மனைவியின் பெயர் விலாஸவதி என்பது. அவள் திருமாலின் திருமார்பின் நீலமணி போலவும், மதிக்கு நிலவு போலவும், மன்னனுக்கு அரியதோர் அணிகலமாக விளங்கினள்; கற்பும் பொற்பும் ஒருங்கே நிறைந்தவள். அம் மாதரசியோடு தாராபீடன் மணியும் ஒளியும் போலவும், பூவும் மணமும் போலவும், நீரும் தண்மையும் போலவும் பிரியா

ந்து, இன்பந் துயதது வந்தனன. இளமைப பரு வம் இனிது கழிந்தும், அரசற்கு மகப்பேறு உண்டாக வில்லை. இத்துன்பம் நாளுக்கு நாள் பெருகி அரசனை வருத் தத் தொடங்கியது. அவன் செல்வ மிருந்தும் வறியனாகவும், ஆயிரக் கணக்கான குறுநில மன்னர் சூழ்ந்திருந்தும் தன்னந் தனியனாகவும் தன்னை எண்ணினான்.

'ஒரு நாள், தாராபீடன் வழக்கப்படி மகளிர்தம் அந் தப்புரஞ் சென்றான். அங்கு என்றும் காணப்படும் மகிழ்ச்சி குன்றி எங்கும் அமைதியே குடிகொண்டிருந்தது. அவன் அங்கு விலாஸவதியைக் காணவில்லை. விலாஸவதியோ, அணிகலன் களைந்து, திலக நீக்கி, முகத்தை இடக் கையிற் சார்த்தி, கண்ணீரருவி கவிழ்க்கப் பனிக்கப் போலே விழுந்த தாமரையெனச் சிறியதோர் அணைமிசை யிருந் தனள். பணிப்பெண்கள், துன்பம் தேங்கிய மனத்தராய் வாய் பேசாது, தேவியைச் சூழ விருந்தனர். முது மைப் பருவத்துச் சில மகளிர், தேவிக்குத் தேற்றமவு கூறுபு நின்றனர். இக்கோலத்தைத் தாராபீடன் தன் கண்களாற் கண்டான். தேவி எழ முயன்றனள். முயன்ற தேவியை மன்னன், 'எழ வேண்டா,' எனக் கூறி, அணைமிசை யிருந்தப் புழுங்கிய மனத்தளைக் கண்ணீர் துடைத்து, 'விலாஸவதி, உனக்கு இத்துணைத் துயரமேன்? வாய் திறவாமற் புலம்புகின்ற னையே! கண்களோ, வெண்முத்துக்களை உதிர்க்கின்றன! அணிகலன்களும் அணியவில்லை! உனது நெற்றி, திலகம் பெறும் பேற்றை இழந்தது! நீ இவ்வாறு துயருறக் கார ணம் என்னை? யான் செய்த தவறு ஏதேனும் உண்டோ? பிழைத்தனரோ பணிப்பெண்டிர்? இகழ்ந்தனரோ தோழி யர்?' எனப் பல முறை வினவியும், ஏதும் பேசுதலின்றி மோனவிரதம் பூண்டனள் விலாஸவதி தேவி. அதைக் கண்ட தாராபீடன், அருகிலிருந்த பணிப்பெண்டிருள் ஒருத்தி

யாய மகரிகையைப் பார்த்துக் காரணம் வினவ, அவள் அரசனை வணங்கிக் கூறன் மேயினள்:

"அரசரே, நீவிர் சிறிதும் பிழைத்தனிரல்லீர். ஏவல் மகளிரும் பிழைத்தாரல்லர். தேவியாரின் மனத்து நெடுநாட்க ளாகவே பெரியதொரு துன்பம் குடிகொண் டிருக்கிறது. அது மகப்பேறில்லாத் துன்பமே. சில காலமாக உண்டி, படுக்கை, அணிகலன், நீராட்டம் இவற்றைத் தேவியார் வெறுத்து வருகின்றனர்; நாங்கள் வற்புறுத்தினலலால் இவற் றைக் கொள்வதில்லை. இன்று சதுர்த்தசித் தினமாகையால், தேவியார், மகாகாலரது ஆலயஞ் சென்றனர். ஆண்டுக் கடவு ளுக்கு வந்தனை வழிபாடுகளியற்றித் திரும்புகையில், ஒரு சார் ஒரு பெரியார், மாபாரதத்தைப் படித்துப் பொருள் சொல்லப் பலர் அதை ஆவலுடன் கேட்டுக்கொண் டிருந்தனர். அவர், 'பிள்ளை யில்லார்க்குச் சுவர்க்கமு மில்லை; இன்பமு மில்லை. 'புத்' என்னும் நரகத்திலிருந்து பெற்றோரை நீக்குவோனே புத் திரன். புத்திரன் இல்லாதார் அக்கடு நரகில் வீழ்ந்து வருந்து வர்,' என்றார். அதைத் தேவியார் கேட்டு, வாடிய முகமும் புழுங்கிய நெஞ்சமு முடையாராய்த் திரும்பி வந்தனர்; வந்தது முதல், எல்லாவற்றையும் வெறுத்துத் தள்ளி இவ்வண்ணம் அழுதுகொண் டிருக்கின்றனர். இதுதான் உண்மை,' என்றாள்.

'இதை யறிந்த தாராபீடன், சிறிது நேரம் ஒன்றும் பேசாமல் மௌனமா யிருந்து, பின்பு நெட்டுயிர்ப்பெறிந்து, தன் தேவியைப் பார்த்து, 'மாதராய், இதற்கோ வருத்தம்! இது விதியின் பயன். இதன் திறத்து யாம் செய்யத் தகுவது ஒன்றும் இல்லை. போதும்; அழாதி. முற்பிறப்பிற் செய்த தீவினை நம்மைச் சூழ்ந்து நிற்கின்றது. நல்வினை செய்தார்க் கன்றோ நன்மை விளையும்? ஈசன் செயலை மாற்றிவைப்பதில் நம் முயற்சி பயனின்றிக் கொன்னே கழியும். ஆயினும், நம்

மாற் செயக்கடவ முயற்சிகளிற் றீர்ந்திருப்பதுந் தீது. பெண்ணருங்கலமே, நீ இன்று முதல் குரவரை வழிபடு ; கடவுளர் முனிவரர் இவர்தமைப் பேணு. முனிவரான் எதுவும் முட்டின்றி முடியும். அவர் கடவுளரினும் மேம்பாடுடையர். மகத நாட்டு மன்னனுப பிரகத்திரதன், சண்ட கோசிக முனிவரது நல்லருளாலே சராசந்தன் என்னும் மகனை யடைய வில்லையா? விபண்டக முனிவர்தம் மதலையாய கலைக்கோட்டு முனிவரது பேரருளாலே தயரத மன்னன், தராதலம் போற்றும் மைந்தர் ஈரிருவரைப் பெறவில்லையா? முனிவரை வழிபட்டு மகப்பேறடைந்த மன்னர் கணக்கிலராவர். பாவாய்! நின்னை நலியும் எண்ணம், என்னையும் பிடித்து அல்லும் பகலும் அல்லல் இழைத்து, அலைத்தலைத் தாட்டுகின்றது. என் செயலாம்! நீ துயராதி ; தைரியங்கொள் ; அறவழி நாடு. அங்ஙனம் நாடுவோர்க்குப் பெரும்பேறுகள் மிக வணிமையவாமன்றிச் சேய்மையவாகா,' என்று கூறிக் கண்ணீர் மாற்றி, முகமும் திருத்தித் தேற்றரவு கூறி வெளியே சென்றான்.

'விலாஸவதி, கணவன் மொழிகளால் உளந் தேறி, அன்று முதல் தெய்வங்களை வழிபட்டு வந்தாள் ; நான்மறை அந்தணரை நாடிப் பணிந்தாள். முக்குறும் பெறிந்த முனிவர் தம் தாளை முடிமிசை யணியெனக் கொண்டாள் ; பொன்னாற் செய்த எள்ளின் மணிகளை, உயரிய அரதனக் குவையுடன் நாடோறும் தானஞ் செய்தனள் ; சந்திகளிற் சென்று பல வகையினவாய பலிகளை யிட்டனள் ; தெய்வத் தன்மை வாய்ந்த புண்ணிய தீர்த்தங்களில் நீராடினள் ; அரசு முதலிய தருக்களை வலம் வந்து பரசினள் ; புள்ளின் குறி யறிந்த பெரியாரைப் போற்றினள் ; வேதியர்களை யழைத்து வேத மோதச் செய்தனள் ; மந்திரத்தானியன்ற காப்புக்கள் பலவற்றைத்

தரித்தனள். பல சொல்லி யென்! இவற்றால் நேரும் எத்தகைய உடற் சோர்வையும் கருதாது, மகப்பேறடைய எவர் எவ்வித வழி கூறினும், அவ்வாறெல்லாம் அசையாது செயல்களை ஆற்றி வந்தனள்.

'இவ்வண்ணம் சில மாதங்கள் கழிந்தன. தாராபீடன், ஒரு நாள் வைகறைப்போழ்தில், விலாஸவதி தேவி வெண்மையான ஒரு மாடத்தும்பர் வீற்றிருக்க, அவளது முகத்தினுள் கலைகள் நிறைந்த வெண்மதி யொன்று நுழைந்ததாகக் கனவு கண்டனன்; உடனே விழித்தெழுந்து, அதைத் தன் நண்பரும் அமைச்சருமான சுகநாஸரிடம் கூறினன். அச்செய்தியைக்கேட்ட சுகநாஸர், 'அரசரே, நம் நெடுநாட் குறைகள் இன்னுஞ் சில நாட்களில் நிறைவேறும். மைந்தன் முகத்தைப் பார்க்கும் பெரும்பேறு உங்கட்கு விரைவினிற் கிட்டும். யானும், இன்று கடையாமத்தில், வெள்ளைக் கலையுடுத்துத் திப்பிய வடிவங்கொண்ட மறைவல்லாரொருவர், அலர்ந்த வெண்டாமரை மலரொன்றை எனது தேவி மனோரமையின் மடியில் வைத்துச் சென்றதாக நல்லதொரு கனவு கண்டேன். இந் நன்னிமித்தங்கள், நமக்கு இனி வர இருக்கும் இன்பச் செய்திகளை முன்னம் தெரிவிக்க நல்லறிகுறிகளாய் விளங்குகின்றன. கடை யாமத்திற் கண்ட கனவுக ளெல்லாம் கடிதிற் பயன் தருவன காண்டிர். தலைவரே, உமது மரபு, மைந்தன் பிறத்தலாற் குறையின்றி விளங்கப்போகிறது,' என்று கூறினர். அது கேட்ட தாராபீடன், அமைச்சரைக் கைப்பிடித் தழைத்து, அந்தப்புரம் சென்று, இருவர்தம் கனவுகளையும் விலாஸவதிக்கு விடாது கூறி அவளை மகிழ்வித்தனன்.

'சில நாட்கள் கழிந்ததும் கடவுளருளால் விலாஸவதி கருக்கொண்டனள். மாதங்கள் ஆகவாகக் கருவும் முதிர்ந்து

வந்தது. அவள் கருவின் பொறையால் மெல்ல மெல்ல நடந்தாள்; பொய்த்துயில் கொண்டாள்; புளிக்கு முவந்தாள். அவளது மேனி வெளுத்தது. இச்செய்தியைக் குலவர்த்தனை எனும் முதியா ளொருத்தி, சுகநாஸருடன் அளவளாவி அரியணை மீதிருக்கும் தாராபீடற்கு அறிவித்தனள். அரசனும், 'அன்று கண்ட கனவு உண்மையாய் விட்டதுபோலும்!' என்று மகிழ்ந்தான். பின்னர் அவன் அமைச்சருடன் நேரில் அந்தப்புரஞ் சென்று, செய்தியை யுணர்ந்து களிபேருவகை

'விலாஸவதி மகப்பெறுங்காலம் அணித்தாயிற்று. கணித நூல் வல்லாரெல்லாம் நாழிகைகளைக் கணக்கிட்டு, இலக்கினம் கூறச் சித்தமாய்க் காத்திருந்தனர். உலகெலாம் மகிழ, உயர் பேரொளியுறு மைந்தனும் தோன்றினன். பின்னர்ச் சங்கம் ஏங்கின; காளம் ஒலித்தன; மாரியெனப் பேரிகை யதிர்ந்தன; இன்னியம் இயம்பின. அந்தப்புர மகளிர்தம் சட்டம், அரசரது கூட்டம், வாலிபர் குழாம், மாந்தர்தந் தொகுதி அனைத்தும் ஒன்று கூடிக் களிப்பெனுங் கடலி லாழ்ந்தன.

'தாராபீடன், மைந்தனது இன்முகங் காணவேண்டி, விரைந்து நன்முழுத்த மொன்றில், சுகநாஸரையும் உடன் அழைத்துக்கொண்டு, பிரஸவ அறை சென்றான். ஆண்டு, வேதியர் பலர் கூடி மந்திரங்கள் ஓதி, சாந்தி நீர் தெளித்து நின்றனர். முதுமைப் பருவத்து மகளிரிற் சில்லோர் அக்காலத்துக் கிசைந்த பாடல்களை இன்னிசையுடன் பாடிக்கொண்டிருந்தனர். சிலர், திருமாலின் ஆயிர நாமங்களையும் ஓதி நின்றனர். அரசன், விதிப்படி உள்ளே சென்று விலாஸவதியின் மடியிசை மட்டிலா மகிழ்ச்சிக்கு மூலமான இளங்குழவியைக் கண்டான். அக்குழந்தையினிடம் பெரியார்க்குரிய

இலக்கணங்களெல்லாம் நிரம்பிக் கிடந்தன. காவலன் அக்குழவியைக் கண்ணிமையாமற் பார்த்துப் பார்த்துப் பெருமகிழ்வடைந்தான். அமைச்சரான சுகநாஸரும் குழந்தையைக் கண்டு, அது பெற்றிருக்கும் உத்தம விலக்கணங்களையெல்லாம் அரசற்குப் பன்முறை சுட்டிக் காட்டி ஆனந்தமடைந்தார்.

'அப்பொழுது மங்களகன் என்னும் தூதுவன், வெகு வேகமாய் அங்கு ஓடிவந்து, மன்னவனை வணங்கி, 'அரசரே, என்ன பாக்கியம்! அமைச்சர் சுகநாஸரது தேவியாராகிய மனோரமையம்மையார், ஓர் அருமைப் புதல்வனை யீன்றனர்!' என்று கூறி அகன்றனன். அச்செய்தியைக் கேட்ட தாராபீடன், 'ஓ! ஓ! இஃதென்ன இன்பப் பெருக்கு! எல்லாம் ஈசன் திருவருள். துன்பம் துன்பத்தை விடாது பின்பற்றிச் செல்லும் என்பதும், இன்பம் இன்பத்தையே இனிது தொடரும் என்பதுமாகிய முன்னோர் முதுமொழி முற்றும் உண்மையே!' எனக் கூறிச் சுகநாஸரைக் கட்டித் தழுவிப் பேருவகை கொண்டான். பின்னர் இருவரும், சுகநாஸரது கோயிலுக்குச் சென்று, பிறந்த குழந்தையைக் கண்ணுற்றுக் கண்டு களித்தனர். பின்பு சாத கருமங்கள் இனிது நிறைவேறின.

'வேந்தன், தன் மைந்தனுக்குச் சந்திராபீடன் எனப் பெரியோரைக்கொண்டு பெயரிடுவித்தான். அந்தணர் பெருந்தகையாரான சுகநாஸரும் தம் குலத்துக்கேற்ப, மைந்தனுக்கு வைசம்பாயனன் எனப் பெயரிட்டார். இவ்விரு குமாரரும் நாளடைவில் குழவிப் பருவம் நீங்கி வாலப் பருவம் எய்தினர்.

'தாராபீடன், நகருக்கு வெளியே சிப்ரா நதிக் கரையில், பெரிய கல்விக் கழக மொன்றைக் கட்டுவித்தான். அக்கழகம் அரைக் குரோச தூரம் பரவியுள்ளது; வெண்சுதை தீற்றிய

மாளிகைகள் பல கொண்டது ; மஞ்சுதோய் மதில்களை நாற்புறமு முடையது ; கலை பயிலுமிடம் ஒருபாலும், சிலம்பக்கூட மொருசாரும், ஆடிட மொருசிறையும் கொண்டு விளங்கியது. நான்கு திக்குகளிலிருந்தும் கலை வல்லோரான பெரியோர் அரசனது ஆணையால் அழைத்து வரப்பட்டுக் கழகத்திற் குடியேறினர். மன்னன், தம் குருவின் மைந்தரையே தம் மைந்தர்க்குப் பரிவாரமாகச் செய்தான்.

'பின்பு, சந்திராபீடனும் வைசம்பாயனனும், எல்லாக் கலைகளையும் எஞ்சாது கற்க, நூலோர் சொன்ன நல்லதொரு வேளையில் குரவர்களிடம் ஒப்புவிக்கப்பட்டனர். விலாசவதி தேவி, நாடோறும் கழகம் சென்று, மைந்தனைப் பார்த்து வருவது வழக்கம். கலைகளில் வல்ல பெரியோர்கள், அத்தகைய மாணவர்கள் கிடைத்தமை கண்டு இறும்பூதெய்தி, மிக்க ஊக்கத்துடனும், திறமையுடனும் அவர்க்குக் கல்வி போதித்து வந்தனர். சந்திராபீடன், வேதம், வேதாங்கம், அரச நீதி, சிலம்பம், படைக்கலப் பயிற்சி, தேரோட்டல், யானை யேற்றம், குதிரை யேற்றம், இன்னிசை நூல்கள், பரத முனிவர் அருளிய நாட்டியம், சுரங்கம் காணல், நீந்தல், தாண்டல், குதித்தல், மற்போர் வகை, வாட்போர்வகை, பல மொழி எழுத்துக்கள், பல நாட்டு மொழிகள் முதலிய பலவற்றையும் ஐயந்திரிபின்றிக் கற்று, அவற்றில் இணையற்ற திறமையையும் இனிது பெற்றான் ; இடைவிடாது தேகப்பயிற்சி செய்து வந்தமையின், வீமன் போன்ற பலத்தைக் கொண்டான். வைசம்பாயனன், தேக வலிமை நீங்கலாக, மற்றெல்லாக் கலைகளிலும் வல்லவனானான். சந்திராபீடனுக்கு வைசம்பாயனன் உயிர்த்தோழனாய் அமைந்தான். அவன் ஒரு கணமேனும் சந்திராபீடனைப் பிரிந்திருக்கத் தரியான். வைசம்பாயனனும் அவ்வாறே சந்திராபீடனைச் சிறிதும் அகலாது அவனது நிழலென இருந்தனன்.

'இன்னணம் கலைகளை மறுவறப் பயின்ற சந்திராபீடனுக்கு வாலப் பருவம் நீங்கி யௌவனம் வந்துற்றது; அழகும் அதிகமாயிற்று; மார்பும் அகன்றது. 'கலைக் கடலைச் சந்திராபீடன் கடந்தனன்,' என்ற விஷயம், குரவர்களால் அரசனுக்கு அறிவிக்கப்பட்டது. இதைக் கேட்ட தாராபீடன், தன் சேனைத் தலைவனான வலாஹகனுக்குத் தன் குமாரனை அழைத்து வரும்படி ஆணை தந்தான். அவன் கலைக் கழகம் சென்று, ஆண்டிருந்த குரவர்களை வணங்கி, இளவரசை வாழ்த்தி 'இளவரசரே, சக்கரவர்த்தி தாராபீடர் இம்மொழிகளை உம்மிடம் கூறப் பணித்தார்,' என்று கூறுவானாயினன்:

"மைந்த, எம் எண்ணங்கள் ஈடேறின. நீ கலைகளனைத்தையும் கற்று முடித்தனை; கல்விக் கழகத்தினின்று நீங்கி, அரண்மனைக்குப் போகலாமென உன் குருமாரால் அருளப் பெற்றனை. கலை நிறை மதியை உலகங் கண்டு களிக்குமாபோல நின்னையும் உலகங் கண்டு மகிழட்டும். உன்னைக் காண அந்தப்புர மகளிரெல்லாம் ஆவலோடு காத்திருக்கின்றனர். ஆறாவது ஆண்டின் தொடக்கத்தில், நீ கல்விச் சாலை சென்றாய். நீ கழகஞ் சென்று ஈரையாண்டுகள் கழிந்தன. இப்போது நீ பதினாறாட்டைப் பிராயத்தினன். ஆதலின், ஆசிரியர்தம்பால் விடைகொண்டு அரண்மனை வந்து, அரச போகங்களை நுகர அருகனாகின்றனை. சிற்றரசர்களை யெல்லாம் நீ ஆதரி. பெரியோராய அந்தணர்தம்மைப் பேணு; உறவினரை யெல்லாம் மகிழ்வி; குடிகளைக் காப்பாற்று."

'வலாஹகன் இம்மொழிகளைக் கூறிமுடித்து, இளவரசை நோக்கி, 'தோன்றலே, சக்கரவர்த்தியார் உமக்கொரு குதிரையை அனுப்பியிருக்கிறார். அது, பாரசீக மன்னரால் உம் தந்தையார்க்குக் கொடுக்கப்பட்டது; கடலினின்று தோன்றிய அற்புதப் பிறப்பினை யுடையது; வாயுவையும் கருடனையும் வெல்லும் வேகம் பொருந்தியது. அக் குதிரை வாயிலில் நிற்

கின்றது. அதன் பெயர் இந்திராயுதம் என்பது. அக்குதிரை மீது தாங்கள் ஏறியருள வேண்டும்,' எனக் கூறினன். சந்திராபீடன் இதைக் கேட்டு, 'பரிமாவை ஈண்டுக் கொணர்திர்,' என ஆணை யிட்டனன்.

'உடனே, இந்திராயுதம் இரண்டு குதிரை வீரர்களால் இளவரசன் முன்னிலையில் கொண்டுவந்து நிறுத்தப்பட்டது. சந்திராபீடன் அப் பாய்மாவை நன்னர்க் கண்ணுற்றான்; எல்லா இலக்கணங்களும் ஒருங்கே எய்தப்பெற்ற அக்குதிரை தனக்குக் கிடைத்தமை பெரும்பாக்கியம் என்று எண்ணி யெண்ணி மகிழ்ந்தான்; அக் குதிரையின்மீது ஏறத் தன்னிருக் கைவிட் டெழுந்து, அருகிற் சென்று பார்த்ததும் வியப் படைந்தவனாய், 'ஓ! என்ன ஆச்சரியம்! இது தெய்வத் தன்மை பொருந்தியதா யிருக்க வேண்டும்! அல்லது யாரோ ஒரு பெரியார் சாபத்தால் இப்பிறப் படைந்திருக்க வேண்டும்!' என்று எண்ணினன்; பிறகு, 'அச்சுவ மணியே, நீ எவராயினுமாக. நான் உன்னை வணங்குகிறேன். உன் மேல் நான் ஏறும் பெரும்பிழையைப் பொறுத்தருள்க,' என்று தனக்குள் எண்ணிக்கொண்டான். சந்திராபீடன் எண்ணத்தை யறிந்தது போல இந்திராயுதமும் அவனைப் பார்த்துக் கனைத்தது. உடனே இளவரசன் குதிரையின்மீது ஞெரேலெனப் பாய்ந்து கலினம் கைக்கொண்டு வெளியே செல்லலானன். பிறகு வைசம்பாயனன், வலாஹகன், வாயிலில் காத்திருந்த இளவரசர்கள், சைனியங்கள் முதலியோர் சந்திராபீடனைச் சூழ்ந்து சென்றார்கள். சில நாழிகைகளில் அவர்கள் நகரம் வந்து சேர்ந்தார்கள். நகர மாந்த ரெல்லாரும் சந்திராபீடனைக் கண்டு, கார் பெற்ற தோகையென மகிழ்ந்தனர். இளவரசும், பல மறுகுகளின் வழியே சென்று,

அரண்மனை வாயிலில் வந்து நின்று, குதிரையினின்றும் இறங்

)னாங்தோன்றல் வைசம்பாயனனது கையைப் பிடித்துப் பின்னே செல்ல, வலாஹகன் முன்னே வழிகாட்டிச் சென்றான். இருவரும் உட்சென்று, வெண்மையான கட்டிலில் வீற்றிருக்கும் தாராபீடனைக் கண்டு வணங்கினர். தாராபீடன், மைந்தனைத் தன் இரு கைகளையும் நீட்டி, 'என் செல்வமே, வரவேண்டும் ! வரவேண்டும் !' என்று சொல்லி யழைத்து, மார் புறத் தழுவிக்கொண்டான் ; வைசம்பாயனனையும் தன் மைந் தனைப் போலவே கருதி வரவேற்றான். தம்பலவட்டில் ஏந்தும் ஒரு மாது வெகு விரைவாக இருக்கையொன்று இட்டனள். சந்திராபீடன், ஆசனத்தை மறுத்துத் தரையிலே உட்கார்ந் தான். வைசம்பாயனனும் அவனருகில் அமர்ந்தனன்.

' சிறிதுநேரம் கழிந்ததும், தாராபீடன், சந்திராபீடனைப் பார்த்து, 'குழந்தாய், நீ அந்தப்புரம் சென்று, உன்னிடம் அன்புகொண்ட அன்னையை மகிழ்வி; பின்னர், மற்றைத் தாய்மாரெல்லாரையும் ஆனந்தமடையச் செய்,' என மொழிய, சந்திராபீடன் வணக்கத்துடன் இருக்கைவிட்டெழுந்து, தன் பரிவாரங்களை அங்கேயே நிறுத்திவிட்டு, வைசம்பாயனனை மாத்திரம் உடனழைத்து அந்தப்புரஞ் சென்றான். அங்கு விலாஸவதி தேவி, முதியோளான ஒரு மாது புண்ணிய கதை களைச் சொல்லி வர, அவற்றை ஆதரவுடன் கேட்டுக்கொண் டிருந்தாள். அவளைக் கண்டு சந்திராபீடனும் வைசம்பாயன னும் பணிந்தனர்.

விலாஸவதி தேவி, இரு கைகளாலும் மகனை வாரி யெடுத்து அன்புடன் மார்புறத் தழுவினள்; ஏவற்பெண்டிர் பலர் பக்

கத்திருந்தும் தானே அயினி நீர் சுழற்றினள்; வைசம்பாயன னுக்கும் அங்ஙனமே பல உபசாரங்களைச் செய்தனள்; பின்பு, வணக்கத்துடன் தரையில் உட்கார முயன்ற தன் மைந்தனைத் தன் மடிமேல் இருத்திக்கொண்டனள். வைசம்பாயனனும் விலாஸவதிக்கு எதிரில் உட்கார்ந்தான். விலாஸவதி சந்திரா பீடனைப் பல முறை தன் கைகளால் தடவி, 'அப்பா குழந் தாய், இத்தனை ஆண்டுகளை நீ எப்படித் தனியே கழித்தனை? குருமார்களின் கட்டுப்பாடுகளை எங்ஙனம் பொறுத்தனை? குழந்தைப்பருவத்தி லிருக்கும்போது உன் மனம் விளையாட் டுக்களில் எப்படிச் செல்லாதிருந்தது! நல்ல திருக்கட்டும்; நீ உன் தந்தையாரின் அருளால் எல்லாக் கலைகளையும் கற்று வல்லவனாயினை. சில நாட்களில், உன் அழகு, குணம் முத லியவற்றுக்குத் தகுந்த மனையாளை நீ அடைய, யான் என் கண்குளிரப் பார்க்கவேண்டும்,' என்றாள். இதைக் கேட்ட தும் சந்திராபீடன், சிறிது நாணத்தாற் றலை குனிந்தான்; பின் னர்த் தாயிடம் விடை பெற்றுக்கொண்டு, அந்தப்புர மகளிர் அனைவரையும் கண்டு வெளியே வந்தான்; வந்து, இந்திராயு தத்தின் மீதேறி, வைசம்பாயனன் தன்னைத் தொடர, பரிவா ரங்கள் சிற்றரசர் முதலியோர் புடை சூழ்ந்து வர, அமைச்சர் பெருமான் சுகநாஸர்தம் மாளிகையை அடைந்து, குதிரையை விட்டிழிந்து வைசம்பாயனனது கையைப் பிடித்துக்கொண்டு உள்ளே சென்றான்.

'அங்கே, பல சிற்றரசர்களுக்கு மத்தியில் உயரிய இருக் கையில் இருந்து அரச காரியங்களைக் கவனித்துக்கொண் டிருந்த சுகநாஸரைக் கண்டு இருவரும் வணங்கினர். இளவரசும் வைசம்பாயனனும் வரக்கண்ட மற்றையோரெல்லாரும் எழுந்து நின்றனர். சுகநாஸர் இருக்கைவிட் டெழுந்து, சில அடிகள்

நடந்து சென்று, கண்களில் மகிழ்ச்சி நீர் வார, வைசம்பாயன னோடு சந்திராபீடனைத் தம் மார்பிறுகத் தழுவினர் ; அருகர் இருந்த அரதனப் பீடமிசை இருக்கப் பணித்தனர் அதை 'வேண்டா' என்று கூறித் தரையி லுட்கார்ந்தனன் சந்திரா பீடன். வைசம்பாயனனும் உடனிருந்தான். இதைக் கண்ட அரசரெல்லாம், தத்தம் இருக்கை நீத்துத் தரையில் அமர்ந்தனர். சுகநாஸர் சிறிதுநேரம் கழித்துச் சந்திராபீடனை நோக்கி, 'சந்திராபீட, நீ கலைகளைக் கசடறக் கற்றனை; யௌவ னப் பருவத்தையும் அடைந்திருக்கின்றாய். தாராபீடர், இப்போதுதான் தாம் அரசியற்றும் முழுப் பயனையும் பெற்றார். அவர் முற் பிறப்புக்களிற் செய்த நல்வினைகள் பலித் தன. புண்ணியஞ் செய்யாதார்க்கு உலகமெல்லாம் புகழும் உன்போன்ற மைந்தர் பிறத்தல் மிக வரிதுகாண். உன் வய தெங்கே! நிகரற்ற கலைகளின் பெருக்கெங்கே! எத்தகைய வித்தையையும் எளிதிற் கொள்ளவல்ல நின்னாற்றல் எங்கே! ஓ! இம்பூமி இப்பூது! குடிமக்களெல்லாம் பெரும் பேறு பெற்றனர். பரதன், பகீரதன் இவர்கட் கிணையான நீ, குடிகளைக் காப்பாற்றப் பிறந்தது என்ன ஆச்சரியம்! நீ உன் புயங்களில் இந்நிலப் பொறையைத் தந்தையாருடன் கூடி ஊழியூழிக்காலம் பொறுத்து வருவாயாக,' என்று ஆசீர்வாதம் செய்தபின், மலர், ஆடை, அணிகலன் முதலியவற்றைத் தாமாகவே எடுத்து வந்து, இளவரசனுக்கு ஆதரவுடன் கொடுத்துப் போகவும் விடை தந்தனர்.

'இளவரசன், வைசம்பாயனனுடன், மனோரமா தேவி யின் அந்தப்புரஞ் சென்று, அவளைக் கண்டு வணங்கினன். வேற்றுமை மாற்றிய மனோரமை இருவரையும் அன்புடன் தழுவி ஆசி கூறினள்.

'சந்திராபீடன் அவளிடம் விடைகொண்டு, வெளியேறித் தன் தந்தையால் தனக்கெனக் கட்டப்பட்ட மாளிகை யொன்

றில், அரச குமாரர் பலருடன் சென்று, பகற் பொழுதிற் செய்யவேண்டுவனவாகிய கடன்களை முறைமையே செய்து முடித்தான். பின்பு தான் துயில்கின்ற அறைக்கு அணித்தான ஓரிடத்தில் இந்திராயுதமெனும் குதிரைக்குச் சாலை யொன்று அமைப்பித்துக்கொண்டான். இதற்குள் பகற் பொழுது கழிந்தது.

'சந்திராபீடன் மறுநாட் காலை, தந்தையிடம் விடைபெற்று, இந்திராயுதப் பரிமாவேறிப் படைகள் புடைசூழக் காட்டுக்கு வேட்டையாடச் சென்றான். சென்று, பல மிருகங்களைக் கொன்று திரும்பிவந்து, களையாறிக் கடன்கள் முடித்து, ஆலய வழிபாடு முற்றி, அன்னை அத்தன் முதலியோரைப் பணிந்து, உண்டிகொண்டு, தன் நண்பரான அரசகுமாரர் பலருடனும் வைசம்பாயனனுடனும் அளவளாவி உரையாடி மகிழ்ந்து, பின்னர் இந்திராயுதத்திற்குத் தன் கைகளாலேயே உணவருத்தித் துயில் கொண்டு அன்றிரவைக் கழித்தான்.

'வைகறைப் போழ்தினில் துயிலெழுந்து, தெய்வம் நினைத்து, தேகப்பயிற்சி முற்றிக், காலைக்கடன்கள் ஆற்றிச், சிற்றுணவருந்தி இருக்குமெல்லையில், கைலாஸன் என்னும் கஞ்சுகி, கட்டழகு மிக்க கன்னிகை யொருத்தியை அழைத்துக் கொண்டு சந்திராபீடனிடம் வந்தான். அவன், புவியிற் கை வைத்து இளவரசைப் பணிந்து, 'தோன்றால், முன்னொருகால் நுந்தையார், குலூத வரசன்மேற் படையெடுத்துச் சென்று, அவனை வென்றார். அவனோடு இக்கன்னிகையையுஞ் சிறைப் பிடித்து வந்து, இவளை மாத்திரம் அந்தப்புரத் திருக்க ஆணையிட்டனர். இவள், குலூதேசன் குமரி; பத்திரலேகை யென்பது இவள் பெயர்; அரசகுமரி என்ற மதிப்பினால், நம் மன்னையாரால் புத்திரியைப் போன்று அன்புடன் வளர்க்கப் பட்டவள். இவளை நமக்குத் தம்பல வட்டில் ஏந்தும் பணிக் கென்று நுந்தாயார் அனுப்பி யிருக்கின்றனர். இவளை ஒரு

பணிப்பெண்ணாகக் கருதாமல், குற்றங்க ளியற்றினும், இன் சொற்களால் ஒறுத்து, உயர்வுடன் நடத்தவேண்டுமென்பது தேவியாரின் கட்டளை. ஆதலின், இவளை அன்புடன் ஏற்றருளவேண்டும்' என்றான். உடனே, பத்திரலேகையும் பார்த்திவ குமரனைப் பணிந்து நின்றனள். இளவரசு, அவளை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, 'அன்னையின் பணியை மறுத்தலும் ஒண்ணுமோ? ஏ கைலாய, நான் இவளை ஏற்றுக் கொண்டேன். இச்செய்தியை என் அன்னையார்க் கறிவி,' என்றனன். அதுமுதல், பத்திரலேகை சந்திராபீடனுக்கு அன்புடன் பணிகள் பல ஆற்றிவரத் தொடங்கினாள். அரச குமாரனுக்கு அவளிடம் அன்பும் நம்பிக்கையும் ஓங்கி வளரத் தலைப்பட்டன.

'இன்னணம் சில நாட்கள் கழிந்தன. தாராபீடற்கு முதுமைப் பருவம் முற்றத் தொடங்கியது. ஆதலின், அவன் நெடுநாளாண்ட எச்சிலென அரச வின்பத்தை வெறுத்தான்; பெரியோரைக் கலந்து, தன் மைந்தன் சந்திராபீடற்கு இளவரசுப் பட்டம் சூட்ட நாள் குறிக்குமாறு வேண்டினன். அவரும் அவ்வாறே நாட் குறித்துத் தந்தனர். மன்னன் அதற்கு வேண்டுவன வாகிய ஏற்பாடுகளைச் செய்ய வினை வல்லார்க்கு ஆணை யிட்டனன்.

'சந்திராபீடன் இச்செய்தியை அறிந்து, அமைச்சர் பெருமான் சுகநாஸரைக் காண அவர்தம் மாளிகை சென்றான். இயற்கையிலேயே சந்திராபீடன் நற்குணம் வாய்ந்தவனெனினும், இளவரசுப் பட்டஞ்சூடு மித்தருணத்தில் அவனுக்குச் சில அறவுரைகளும் அறிவுரைகளும் கூறக் கருதிய சுகநாஸர் அவனைப் பார்த்து, 'சந்திராபீட, நீ கல்வியைக் கசடறக் கற்றவன்; அறியத் தகுவனவாகிய பொருள்கள் அனைத்தையும் அறிந்தவன். உனக்குப் போதனை மிகையாம். ஆயினும், நான் கூறுவன சிலவற்றைக் கேள்: கருவிலே திரு, புதிதாய

விளமை, கந்தனை யேய்க்கும் அந்தமில்லழகு, அரிய வினையாற்றும் ஆற்றல் இவை யெல்லாம் அடுக் கடுக்காகத் துன்பந் தருவன. இவற்றுள் ஒவ்வொன்றும் அடங்காமைக்கு அடிப்படை. அனைத்தும் ஒன்றுசேர்ந்தவழி என்னாகு மென்பதை உன்னிப் பார். இளமைப் பருவத்தின் தொடக்கத்தில், சாத்திரங்களெனும் தெண்ணீரினாலே, மதியானது நன்னர்க் கழுவப் பட்டுக் கறைதீர்ந் திருப்பினும், மீளவுங் கலங்கலடையும். இஃது இயற்கை. உறுதிகொண்ட மனத்தரையினும், அவனை மாயை யென்பது வெகு தூரத்தில் வலிய இழுத்துச் செல்லும். உன்னைப் போன்றவனே உபதேசங்கட் குரியவனாகின்றான். மாசொன்றில்லாப் படிகமணியில், சந்திரனின் ஒண் கதிர்கள் செல்லுமாபோல, களங்கமில்லா நெஞ்சத்தின்கண்ணு போதனைகள் சென்று தங்கும்? மைந்த, தீயகுணமுடையார் உயர்குடியிற் பிறப்பினும், வேதங்களை யோதினும், அடக்க முடையா ராவதில்லை. சந்தன மரத்திற் பற்றிய தீயெனினும், எரிக்குங் குணம் அதனிடத்தில்லாது போகுமா? குருவின் உபதேசங்கள், எல்லா மாசுகளையும் அலம்புதற் கேற்ற நீரோட்டம்; நரை, திரை யாதியவற்றால் விகாரமுறுவதாகா மூவா மூப்பு; பொன்னாற் செய்யா நல்லாபரணம். இவை அரசர்க்குப் பெரிதும் இன்றியமையாதன. அவர் தமக்கு உபதேசிப்பவரோ மிகச் சிலர். நன்றெனினும், தீதெனினும் குடிகள் அரசன் உரைகளைப் பின்பற்றுகின்றனர். வேந்தரை நாடி நல்லோர் நல்லுரை கூறினும், செருக்கினால் மூடிய செவிய ராகின்றனர்; ஒருவேளை கேட்பினும், கல்லாப் புல்லர் போல, ஒரு செவியான் வாங்கி மறு செவியான் விடுகின்றனர். சந்திராபீட, நீ நல்வாழ்க்கையை நலமுற நாடி நிற்கின்றனை. முதன் முதலில் இலக்குமியைப் பார். இவள் பாற்கடலின் தோன்றிய பாவை. இவளொடு இளம்பிறையும், கடுவிடமும், வெண்பரியும், மால்மதுவும், ஒளிமணியும் பிறந்தன. பிறையி

லிருந்து முரணும், வெண்பரியிடமிருந்து நிலையற்ற தன்மை
யும், விடத்திலிருந்து மோகமும், மதுவினின்று மதமும்.
மணியினின்று திண்ணிய நிலையும் இவளை வந்தடைந்திருக்
கின்றன. பாற்கடலில் அன்று சுழன்ற மந்தர கிரியினிட
மிருந்து, நில்லாது சுழன்றோடப் பயின்றாள். கலைவல்லானைக்
கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை. சுடர்விட் டொளிரும் விளக்
கென ஒருவனிடம் ஓங்கியிருந்து, பின்னர் அவனுக்கு
ஆறாத அருவினைகளை அளித்துப் போகின்றாள். இவள்.
'நெருநல் ஒருவனிடம் இருந்தாள்; இன்று ஒருவனிடம் இருக்
கின்றாள்; நாளை ஒருவனிடம் இருப்பாள்,' என்று நல்லோர்
சொல்லும் இயல்பினை யுடையாள். கமலையின் அருளால்
காணுஞ் செல்வம், பேராவா வென்னும் நச்சுக்கொடியை நலமுற
வளர்க்கும் நறுநீர்த்தாரை; ஐம்புலன்களெனும், கொடியவிலங்கு
களை மருளச்செய்யும் மறவர் பாட்டு; உண்மைச்சரித மெனும்
நல்லோவியங்களின் நலத்தைக் குலைக்கும் நாமத் தாமம்; மோக
மெனும் நெடுந்துயிலுக்கொரு மாயப்பாயல்; பாவங்களென்
னும் பெரும் பாம்புகட்குப் பதுங்கும் புற்று. இவற்றை யறி
யாத சிலர் துள்ளிக் குதிப்பர்; வேட்டை யாடுதலை தேகப்
பயிற்சி யென்பர்; கவறாட்டத்தைப் பொழுதுபோக்கென்பர்;
மதுபான மொன்றே மகிழ்ச்சி தருவதெனப் பருகி மயங்கு
வர்; மூத்தோர் மொழிகளைப் புறக்கணிப்பது சுதந்திர மன
முடையார் கொள்கை யென்பர். இன்னோரன்ன தீய
குணங்களோ டமையாது, இவர்கட்கு வஞ்சத் தோழர்
பலர் அமைந்துவிடுவதும் உண்டு. அவர், பொருளென்னும்
புல்லிய இறைச்சியை யுண்பதில் பருந்து போல்பவர்; அரசன்
அவைக்களமாகும் அம்புயக் கயத்தில், வஞ்சனை வல்ல கொக்
குக்களைப் போன்றவர். வஞ்ச நெஞ்சமுடைய இந்நீசர்.
அரசனருகில் அகலாதுறைந்து, கூப்பிய கையராய், இந்திர
னென்றும், சந்திரனென்றும் மாயப் புகழ்ச்சியை ஓயாது

செய்வர்; அரசன், 'வெண்காக்கை யுண்டோ?' என்று கேட்ட பின், 'ஆம் அரசரே, இப்பொழுதுதான் அவை கூட்டங் கூட்டமாய்ப் பறந்து செல்வதைக் கண்ணுற் கண்டோம்,' என்பர். இத்தீயரின் புகழ்ச்சியை உண்மையெனக் கொண்டு, அரசன் அவ்வாறே நடக்க முயற்சி செய்கிறான். அதனால் தீராத இன்னல்கள் வருகின்றன. துரைத்தனத்தை நடத்து வது எளிதான தன்று; மிகவும் அரிய காரியம். யௌவனப் பருவம் விவேகிகளையும் மதி மருளச் செய்யும். நீயோ, அப் பருவங் கனிந்து விளங்குகின்றனை. ஆதலால், நின் குடிகள் நின்னை அவமதிக்காமலும், சாதுக்கள் வெறுக்காமலும், சூரவர் கள் இகழாமலும், நீ வஞ்ச நெஞ்சில்லா நண்பர்தம் நிந்தனை யைப் பெறாமலும், சிற்றின்பங்களால் கட்டுண்ணாமலும் இருந்து வர முயலவேண்டும் உனக்கு இயற்கையான வீர மொரு புற மிருக்க, நின் தந்தையாலும் நீ பயிற்றப்பட் டிருக்கின்றனை. நில்லா மனமும், இல்லா மதியுமுடைய ஒரு புல்லனையே இப்பொய்த்திருப் பிடித்தாட்டும் என்று கொள்ளுதல் பெரும் பிழை. அறனிரம்பிய அருளுடையார்க்கேனும் பெறலருந் திருப் பெற்றபின் சிந்தனை பிறிதாம். இது பண்டிதனை யும் ஒரு கை பார்க்கும்; கூரிய மதியினனாயினும் சீறும்; எறாழ்வலி யுடையானையும் கலக்கும்; நற்குடியில் வந்தோனையும் நலியும்; வீரனையும் வெருட்டும். ஆதலால், நான் உனக்கு அதிகமாய்க் கூறுவது ஒன்று மில்லை.

'நுந்தையார் நினக்குச் செய்ய விருக்கும் இளவரசுப் பட்டாபிடேகம் பெற்று நுங்கள் குலத்து வழிவழி வந்ததும், முன்னோர்கள் ஆண்டு வந்ததுமான இவ்வரசைத் தாங்கிச் செங்கோலைச் செவ்வனே நடாத்துக; பகைவரை என்றும் வணங்கி யிருக்கும்படி செய்க; சுற்றத்தை ஆதரிக்க; முடி தரித்த பின்னர்த் திக்குவிசயம் செய்தல் வேண்டும். நுந்தை யாரால் முன்னர் வெல்லப்பட்டன வாயினும், நீயும் எல்லாத்

திசைகளினும் சென்று வென்றி கொள்க. நின் பராக்கிரமத்தை உலகமறியச் செய்ய இதுவே தகுதியான காலம்,' என்று கூறி முடித்தார்.

'சந்திராபீடன், அமைச்சர்தம் உபதேச மொழிகளாற் கழுவப்பட்டவனுகவும், கண் திறக்கப்பட்டவனுகவும் தன்னை மதித்து, மட்டிலா மகிழ்ச்சியோடு சுகநாஸரை வணங்கி விடைபெற்றுத் தன் மாளிகை சென்முன்.

## 4. சந்திராபீடன் கோமுடி சூடலும் திக்கு விசயமும்

, சில நாட்கள் கழிந்தன. சந்திராபீடன் முடி சூடும் நாளும் வந்துற்றது. ஆயிரக்கணக்கான அரசர் கூடினர். முடி சூடுவதற்கேற்ற சுபச் சடங்குகளெல்லாம், மன்னர் புடைசூழச் சக்கரவர்த்தியால் நிறைவேற்றி வைக்கப்பட்டன. நாற்றிசைகளிலிருந்தும் புண்ணிய தீர்த்தங்கள் பொற் கலயங்களில் கொண்டு வரப்பட்டன. அக்கலயங்களைக் கையேந்திப் புரோகிதரை முன்னிட்டுத் தாராபீடனும், சுகநாஸரும் சந்திராபீடற்குத் திருவபிடேகம் செய்தனர். மாதர் புடை சூழ வந்து, தேவி விலாஸவதியும், மைந்தற்குத் தானுகவே சந்தன மாதிய வற்ருல் அணி செய்தாள். சந்திராபீடன் அரசர் அமைச்சர் முதலியோர் முன்னே செல்லப் பரிவாரங்கள் புடை சூழ்ந்து வர, இன்னிய மியம்ப, மாதர்கள்வாழ்த்தச் சென்று, மேருவின் சிமயத்துத் தண்கதிர் மதியெனப் பொன்னு ணியன்ற சிங்கஞ் சுமந்த செழுமணி யணைமிசை ஏறி யமர்ந்தான்.

'அரிமாவேந்திய அணைமிசை யேறிய சந்திராபீடன், ஆண்டிருந்த அரசர்களுக்குப் பல வரிசைகள் செய்தான். செய்து முடித்ததும், திக்கு விசயம் செய்யப் புறப்படுதலைக் குறிக்கும் புறப்பாட்டுப்பறை முழங்கிற்று; மக்களெல்லாம், 'வழிவழி சிறக்கநின் வலம்படு கொற்றம்,' என அவனை வாழ்த்

தினர். பின்னர் அவன் அரசர் புடை சூழ, ஆசனம்விட்டெழுந்து வெளியே வந்தான். ஆண்டுப் பட்டத்தியானை அலங்கரிக்கப்பட்டு நின்றது. அவ் யானைமீது முன்னே பத்திரலேகையும், பின்னே சந்திராபீடனுமாக ஏறியிருந்தனர். நாற்புறமும் முத்துமாலைகள் நாலவிட்ட வெண்குடைகள் வெயிலை மறைத்தன. முன்னே இந்திராயுதமெனும் பரிமாவை, வீரர் நடத்திச் சென்றனர். சந்திராபீடன் முதன் முதலில், கீழ்த்திசை நோக்கிப் புறப்பட, வைசம்பாயனனும், நல்லணி யணிந்து, வெண்பட்டுடுத்தி, மலையென மருளும் களிற்றின்மேல் ஏறிச் சேனைகள் புடைசூழ, வேதியர் வாழ்த்தொலி காட்ட மற்றோர் இளவரசன் போலச் சந்திராபீடனுடன் கலந்துகொண்டான். எங்கும் கொடிகளின் நிரை திகழ்ந்தது. களிறுகளை இருபுறமும் அணிஅணியாக நிறுத்தி, அவற்றின்மீது இருக்கும் வீரர் கவரி வீசினர். காலாட்படை முன்னே வழி விலக்கிச் சென்றது. எங்கும் குடைகள் நிறைதலின், கதிரவன் கதிர் புக இடமில்லை. சேனைக்கு முன்னே, 'நான் முன்! நான் முன்!' என்றோடும் சனத்திரளின் ஆரவாரத்தாலும், காகளமென்ற வாச்சியத்தின் பேரொலியாலும், குதிரைக் குளம்புகளது அடிவைப்பின் துழனியாலும், களிற்று நிரைகளின் பிளிறொலியாலும், முரசுகளின் முழக்கத்தாலும், கால்கொண்டெழுந்த கடல்போல அச்சேனை மெள்ளச் செல்வதாயிற்று.

'சிறிது நேரத்தில் சந்திராபீடன் நூற்றுக் கணக்கான படவீடுகள் நிறைந்த புதியதோரிடம் சென்றடைந்தான். தாய் தந்தையரைப் பிரிந்த துக்கம் அவனுக்கு மிக்கு இருந்ததெனினும், அவன் தன் உயிர்த்தோழனும் தோழியுமான வைசம்பாயனன் பத்திரலேகையுடனும் பிறருடனு முரையாடி, பகற்பொழுதைக் கழித்தான்; நெடுநேரம் துயில் கொள்ளாமல் விழித்திருந்தும், சிறிது நேரம் துயின்றும் இரவைக் கழித்தான்; வைகறையில் துயிலெழுந்து, சேனைகளுடன் பிரயாண

மாகிச் சென்றான்; பல பல அரசர்கள்மீது படையெடுத்துச் சென்று, அவர்களை வென்று, அவர்தம் சேனைகளைத் தன் சேனைகளோடு சேர்த்துக்கொண்டான்; கானகங்களை யெல்லாம் அழித்தான்; மேடு பள்ளங்களைச் சமன் செய்தான்; இன்னணம் பல தேயங்களைச் சுற்றி வென்றியே கொண்டான்; தருக்கிய தரணிபரை யெல்லாம் தலை வணங்கச் செய்தான்; தஞ்சமென வந்தவரை, 'அஞ்சல்!' என ஆதரித்தான்; காமக் கள்ளாட்டயரும் கயவர்களைக் கொன்றொழித்தான்; தன் சீரிய அடிகளை முடிமிசைச் சூடிய இளவரசர்களுக்குப் பட்டங் கட்டி மகிழ்ந்தான்; அரும்பொருள்களைப் பெருமுயற்சியுடன் சேகரம் செய்தான்; சில மன்னர்களிடமிருந்து திறைப்பொருள்களை வாங்கிக்கொண்டான்; கட்டுப்பாடும் அமைதியு மில்லா நாடுகளிற் சென்று சட்டதிட்டங்களை ஏற்படுத்தினான்; அங்கெல்லாம், தன் நினைவுக் குறிகுறியாகப் பற்பல சின்னங்களை நிறுவுவித்தான்; பல சாஸனங்களைக் கற்களிற் பொறித்து வைத்தான்; அருமறை பயின்ற அந்தணர் பலர்க்கு, இன்முகங் காட்டி அன்பு செய்தான்; முனிவர்தம் அடியிணைகளை முடிமிசைக் கொண்டான்; நாற்பாற் பட்ட கல்லாச்சிரமங்களை கனிவொடுகப் போற்றினான்; மக்கள் உள்ளமெல்லாம் தன் பாலில் அன்பொடும் வித்திட்டு ஒற்றுமை யென்னும் ஒள்ளிய விளையுளை விளைத்தான். சந்திராபீடனது வியல் சிவக்கச் சிவக்க அவனது கீர்த்தி வெளுத்துப் பரந்தது.

'அவன் முன்னர்க் குணதிசையையும், பின்னர்த் தென்றிசையையும் வென்று, அதன்பின் குடதிசை வடதிசைகளிற் சென்று வெற்றியை முகந்துகொண்டான். ஒரு மூன்று ஆண்டுகளில் தீவங்களனைத்தையும் தன்னடிப் படுத்திப் பூமியை ஒரு முறை வலம் வந்தான். பிறகு, கைலயங்கிரியை நெருங்கிச் சென்றான். அங்கே சுவர்ணபுரம் என்றொரு நகரம் உண்டு. அந்த ஏமகூடம் என்னும் குன்றில் வாழுங் குறவர்க்குரியது.

கீழ்க் கடற்கரையை யடுத்துள்ள அந்தகரையும் சந்திராபீடனை தன்வய மாக்கி, நெடுநாள் அலைந்து திரிந்தமையான் நேர்ந்த களை தீரும்பொருட்டுச் சில நாள் தன் சேனைகளுடன் அங்கே தங்கியிருந்தான்.

---

## 5. கின்னர மிதுனமும் அச்சோத வாவியும்

'ஒரு நாள் சந்திராபீடன், இந்திராயுதப் பரிமா விவர்ந்து, காட்டகஞ்சென்று வேட்டமாடித் திரிகையில், மதி பதிகளாகிய கின்னர ரிருவரைக் கண்ணிற் கண்டான். அவர் ஒரு பாதி யாக்கை குதிரை வடிவும், மற்றொரு பாதி மனி தரின் உருவமும் தாங்கிய வற்புதப் பொற்பினர். அவர்களைப் பற்றக் கருதிய அரச குமாரன், அவாமீக்கூர்ந்து கிட்டிச் சென் றான். அக்கின்னரர், இதுகாறும் மனிதப் பிறவியைப் பாராத நீர்மையராதலின், பெரிதும் வெருஉக்கொண்டு காற்றினுங் கடு கிச் சென்றுகொண் டிருந்தனர். கானற் சலத்தைப் பருகக் கரு திய மானின் கணமென, மானவ குமரனும், குதிகால் கொண்டு குதிரையையெற்றித் தூண்டிச் சென்றனன். அவ்வச்சுவ மணி யும், தலைவன் குறிப்பை நன்னர்த் தெரிந்து, பாய்ந்து சென்று பதினைந்தியோசனை வழியைக் கடந்தது. கடந்துமென் பயன்? கின்னரர், அரச குமரன் கண்ணெதிரிலேயே, ஒரு குன்ற மீதேறி எங்கோ மறைந் தொழிந்தனர்.

'பாவம்! அரச குமரற்குக் கவற்சி பெரிதாயிற்று. அக்கின் னர மிதுனங்களைப் பார்த்துப் பற்றக் கருதிய அவன்றன கண் ணும், மனமும் தோல்வி யடைந்தன. மேற்செல்ல அவனால் இயலவில்லை. வாயிலே நுரைப் பெருக்கையும், உடலிலே வியர்வை வெள்ளத்தையுங் கொண்ட இந்திராயுதத்தை ஒரு முறை நோக்கித் தன்னையும் நோக்கினன்; வாடிய நெஞ்சமும், விளர்த்த முகமு முடையனாய்ச் சிறிது நேரம் மோனமுற் றிருக்

தான். இப்பயனில் செயலை உன்னுந்தோறும், தன்னந் தனிய னெனினும் நன்னகை கொண்டு எண்ணுவா னாயினன் :

'என்னே யிது! பிள்ளைமைத் தனத்தாற் பேதுற்றேன் யான். இத்தகுதியில் செயலால் நேர்ந்த வுடற் றளர்வு, அம்ம! பெரிது! இவற்றைப் பற்றுதலால் எற்குவரும் பயன் யாது? பற்றாக்கால் வரும் இழிவு யாது? பயனும் இல்லை; இழிவு மில்லை. இஃதென்ன அறியாமை! கண்ட கண்ட செயல்களை யெல்லாம் முற்றக் கருதுவது என் போன்றார்க்குத் தகுமோ? திக்குவிசயத்தை அறவழியில் ஆற்றக் கருதி வெளிவந்த யான், அதனையன்றோ முட்டின்றி நிறைவேற்றவேண்டும்? என் தானை துறந்து, வெறிகொண்ட வீணன்போல, இத்தனை வழியையும் கடந்துவந்தது மதியிலாச் செயல்! சேனையிருக்கும் இடம் இங் கிருந்து எத்தனை தூரமோ வறியேன். பாய்மாவோ, பல நூறு காதங்களைக் கடிதிற் கடந்துவிட்டது. திரும்பிச் செல்லலா மெனின், மரமும் புதலும் பொதுளிய காடும், கல்லும் முள் ளும் நிறைந்த மேடும் இடையிட்டுக் கிடப்பதால், வழிவருத்தம் மிகும். கின்னர மிதுனங்களின்மீது வைத்த கண்ணுறுங் கருத்து மாய் வந்தேனாதலின், வழியின் தன்மைகளைக் குறிக்கொண்டே னில்லை. 'சுவர்ணபுரம் போகும் வழி யீது?' என்று காட்டக் கூடிய எவரையும் கண்டுக் காணேன். ஆனால், இந்நகர், வட கோடி யெல்லை யென்றும், அதற்கப்பால் மனிதரில்லாப் பெருங்கா டென்றும், காட்டுக்கப்பால் வெள்ளிமலை யென்றும் பெரியோர் வாயிலாகக் கேட்டிருக்கின்றேன். ஆதலின், இதை அடையாளமாகக் கொண்டு தென்திசை நோக்கிச் சென்றால், சுவர்ணபுரம் செல்லலாம். 'தாந்தாமுன் செய்தவினை தாமே யனுபவிப்பர், என்பது பெரியார் வாக்கு அதற் கிலக்கியமாய் யானே அமைந்தேன்,' என்று வருந்திக் குதிரையின் கலி னத்தை இடக்கரத்தா லிழுத்துத் திருப்பினன். அப்பொழுது நடுப்பகலாதலின், கதிரவனது வெம்மையைப் பொறுக்க அவ

னால் முடியவில்லை. குதிரை பெரிதும் களைத்து வருந்துவதை யும் பார்த்தான். ஆதலின், சந்திராபீடன், 'குதிரையைச் சிறிது நேரம் பசும்புன் மேயுமா விடுத்துத் தண்ணீர் காட்டி அதன் களையைப் போக்கி, நானும் சிறிது தண்ணீர் பருகி வேட்கை தணிந்து, மரநிழலில் இளைப்பாறிச் செல்வேன்' என் றெண்ணி நீர் தேடிச் சென்றான். அங்கும் இங்கும் அலைந்து திரிந்துகொண் டிருக்கையில், தாமரைப் பொய்கையின் தண் ணிய புனலில், திண்ணிய மருப்புடை யாரணியக் களிறுகள், பன் முறை படிந்து பத்திப்பிடிப்படி சென்றமையாலே, அவற்றின் கால்களினின்றும் இழிந்து வழிந்தோடிய நீரின் மிகையால், சேறுபட்ட செவ்விய வழியைச் சந்திராபீடன் கண்டான்.

'கைம்மலை சென்ற கானவழியால், 'தண்ணீர் நிலை இவ் வயின் உண்டு,' என நன்கு அறிந்தான்; பல்வகைக் கொடிகளும் வான்றோய் தருக்கள் பொதுளி, அவற்றின் நிழலிற் படிந்த கற் பாறைகளிலே கத்தூரி மான்கள் களிப்புடன் படுத்திருக்கும் ஒளிரிய வெள்ளிமலைச் சாரலின் வழியே சிறிது தூரம் சென்றான்; சென்று, கயிலை மலையின் வடகீழ்ப்பாங்கர், விரிந்து பரந்து கிடக்குமோர் எழிலுடைச் சோலையைக் கண்டான்; அச்சோலை யுள்ளே பொருக்கெனப் புகுந்து பார்க்குமளவில், கடலினும் பெரிதெனும் தன்மையி னமைந்த அச்சோதம் என்னும் தண் ணீர்ப் பொய்கையைக் கண்டான். அது தேனிறை தாமரை மலர்களா னிரம்பியது; சான்றோர் மனமென விளங்கும் தெளிவு சான்ற நீரினை யுடையது. இன்ன மாண்பினையுடைய மாமணிப் பொய்கையைக் கண்ட கண்களை மீட்கமுடியாது அரசகுமாரன் வருந்திப் பின்கூறுமாறு எண்ணுவா னாயினன் :

''ஆ! உலகெலாம் புரக்கும் ஒருதனி முதல்வன் அலகிலா விளையாட் டற்புதம் என்னே! யான் கின்னரங்களைப் பின் பற்றியது பயனிலாச் செயல். ஆயினும், இப்பொய்கையைக் கண்டவிடத்து, அச்செயல் பெரிதும் பயனுடைத்தாயிற்று. அம

குக் கெல்லாம், இப்பொய்கையே எல்லையெனக் கண்டேன். ஐம்புலன்கள் அனைத்தையும் ஒருங்கே மகிழச் செய்வது இதன் நறும்புனல். இது மறுவிலாத் தன்மையால் கண்களுக்கு மகிழ்ச்சியும் தட்பத்தன்மையான் உடலுக்குச் சுகமும் அளிக்கும். பங்கய மலரின் பரிமளத்தால் நாசி மகிழும். அன்னங்களின் இன்னொலி செவிக் கானந்தம் தரும். நன்று! நன்று!! இதனாலன்றோ, இறையவரும், இவ்வெள்ளியங் கிரியைத் தமக்கு நல்லகமாகக் கொண்டனர்?' என்று பலவாறு என்

'சென்று குதிரையினின் றிழிந்து, கலினங் கழற்றிக் கீழே வைத்தான். குதிரை சிறிது நேரம், மண்மிசைப் புரண்டு எழுந்து பைம்புன் மேய்ந்து பொய்கையின் நீரருந்தியது. அவன் குதிரையை நீராட்டி, ஒரு பெருந்தருவின் நீழலில், பொன்னினாலியன்ற சங்கிலியொன்றால் கட்டினான்; பிறகு பொய்கையி லிறங்கிச் சாதகப் புள்ளென விண்புனல் பருகிப் பல தாமரை யிலைகளைப் பறித்துக்கொண்டு கரையேறினன். அங்கொரு பாறையின்மீது இயற்கையா னமைந்த கொடிவீடொன் றிருந்தது. ஆண்டு இலைகளைப் பாயலெனப் பரப்பித் தன் மேலாடையைத் தலையணையாகச் சுற்றிவைத்து, 'இறைவா, நீ எங்ஙனம் உய்த்தியோ உய்த்தி!' என்று படுத்துச் சிறிது நேரம் இளைப்பாறினன்.

'அரும்பெறற் புரவியாய இந்திராயுதம், தனக்கு முன்னே இளவிளை வென்று முளைத்தெழுந்த பசும்புற்களைச் சிறிதும் மேயாது, இரண்டு காதுகளையும் உயர நிமிர்த்திக் கொண்டு, எங்கிருந்தோ வருகின்ற வொரு திப்பிய கீதநாதத்தின் இன்னிசையில் ஈடுபட்டு நின்றது. சற்று நேரஞ் சந்திராபீடனும் அவ்வின்னிசையைக் காதுகொடுத்துக் கேட்டான்; அஃது, உயர்ந்தவொரு வீணையினின் றெழுந்துவரும் திருந்திய பண்ணுடன் கூடிய கண்டப் பாடலென் றுணர்ந்தான். 'ஓ'

இஃதென்னை விந்தை! மனிதரில்லா விக்காட்டகத்தில், இந்த நாதம் எங்கிருந்து வருகின்றது! குரலைப் பார்த்தால், மனிதருடைய தல்ல வெனத் தெரிகின்றது. இருக்கட்டும்,' என்று படுக்கைவிட் டெழுந்து, பாட்டொலிவரும் திசையை நோக்கி நெடுந்தூரம் பார்த்தான். இடம், கண்களுக்குப் புலப்படவில்லை. 'வெகுதூரத் திருந்து வருகின்றதுபோலு மிக்குரல்!' என்று நினைத்தான். இசைநூற் கடலின் கரை கண்ட இளவரசன் இசைவரும் திசையை அறிய விரும்பி, இந்திராயுதத்தின் அருகர்ச் சென்று, சேணமியைத்துக் கலினம் பூட்டி. அதன்மீதிவர்ந்து, இசைவருந் திசையையே குறியாகக்கொண்டு, பொய்கையின் மேல்கரை வழியாய்ப் புறப்பட்டுச் சென்றான்.

'இழுமெனு மொலியுடன் பெருகி வரும் கைலை மலையின் நீரருவிகளிற் படிந்து வீசு மிளங்காற்றுச் சந்திராபீடனுக்குப் பெருமகிழ்ச்சியை யூட்டிற்று. அவன் குறித்துச் சென்ற இடமும் நெருங்கியது. அங்கே விரிந்து பரந்த சோலைகள் பலவற்றைக் கண்டான். அவற்றுள் ஒன்றில், அர்ச்சுனான் நிருமிக்கப் பெற்ற சிவன் கோயில் ஒன்றைக் கண்டு. அதன் பெயர் சந்திரப்பிரபை என்பது. அங்கு மனித சஞ்சாரமே காணப்படவில்லை. எங்கும் நிச்சப்தமா யிருந்தது. சிறிது தூரம் சென்றவளவில், பளிங்கினா லியன்றதொரு நாற்பான் மண்டபத்தினுட்பண், முத்துக்களாலாக்கியதும், நான்கு முகங்களைக் கொண்டதுமான வோரிலிங்கம் பிரதிட்டை செய்யப் பட் டிருப்பதைக் கண்டு, அதனைத் தலையால் வணங்கிக் கையா னருச்சித்து, நாவாற் றுதித்தான்.

'அச்சன்னிதி தெற்கு நோக்கியது. அதற்கு எதிரில், ஒரு திப்பியக்கன்னிகை பிரமாசனமிசை வீற்றிருந்தாள். அவள் பாசுபத நோன்பினள்; நீறு பூத்த நெற்றியள்; சங்கு வளை பூண்ட கரத்தினள்; மடியில் யாழொன்று வைத்து, இன்னிசையுடன் பசுபதியைப் பாடித் துதித்துக்கொண் டிருந்தனள்;

இசைக்கலையே இம்மாதுருவம் கொண்டதெனக் கண்டார் கருதும் பான்மையள்; அணங்கெனும் தன்மையால் இத்துணை ஆண்டினள் என அளந்தறிந்து சொல்ல முடியாதெனினும், பத்தும் எட்டும் கடந்த ஆண்டினள் போலக் காணப்பட்டனள்; அறக்கடவுளின் இதயத்திலிருந்து வெளிவந்தாள் போலவும், நன்முத்துக்களிலிருந்து வெண்ணிறம் வாங்கித் தோன்றினளெனவும், சங்கிலிருந்து கடைந்தெடுக்கப்பட்டாள் போலவும், வெண்ணிறத்திற்கோரெல்லை போலவும் தோன்றினள்; சிவபெருமானது பெயரை எழுதி, அவர்தம் திருவடிகளையும் பொறித்து வைக்கப்பட்டதொரு சூளாமணியையே, முடியில் தரித்திருந்தாள்.

'அக்காரிகையை இளவரசன் கண்ணுற் கண்டான். குதிரையை விட்டுக் கீழிறங்கி, அருகே யிருந்ததொரு மரத்திற் குதிரையைக் கட்டினான்; அவளருகிற் சென்று, சிவபெருமானை யொரு முறை திசை நோக்கி வணங்கினான். தெய்வப் பெண்களை இதுவரையும் கண்ணுற் கண்டிராத சந்திராபீடன், அக்கட்டழகியை நீண்டுநின் இமைகொட்டாமற் பார்த்தான்; அவள்தன் அந்தமில் வழகையும், நந்தமில் காந்தியையும் கண்டு வியந்தான். 'இன்பங்கள் எதிர்பாராமலே அடுக்கடுக்காக வருகின்றன. துன்பங்களும் அவ்வாறே. எல்லாம் ஈசன் செயல். திடீரென்று தோன்றியதொரு வெறியால் கின்னரங்களைப் பின்பற்றி வந்தேன்; அதனால், புத்தேளிர் உலவும் புனிதமான இவ்விடங்களைக் காணும் பெரும்பேறு பெற்றேன்; விடாய் தணியத் தண்ணீர் தேடிச் சென்றதால், அச்சோதமெனும் அணிமலர்ப் பொய்கையைக் கண்டேன்; கீதநாதத்தா விழுக்கப்பட்டு வந்து, இக்காரிகையைக் கண் குளிரப் பார்த்தேன். இவள் தேவ கன்னிகையே யாவள்; மனித மாதல்லள். அதற்கு இவள் வடிவமே சான்று; அன்றியும், மனிதர்க்குத் தவமியற்றியும் வாய்க்கப் பெறாத இசைப்புலமை இக்கன்னிக்

இயல்பில் அமைந்துளது; இக்காரிகை நான் கண்ணுற் பார்த்துக்கொண் டிருக்கும்போதே, ஒரு கால் மறைந்தாலும் மறைந்துவிடுவாள்; கைலையின் சிமயங்களில் ஏறிச் செல்லினும் செல்லுவாள்; அன்றி, வானோக்கி எழினும் எழுவள். ஆதலின், பாங்கர்ச் சென்று இவள் வரலாறனைத்தையும் தெரிந்து கொள்ளவேண்டும்,' என்றெண்ணி, அம்மண்டபத்தில் ஒரு தம்பத்தருகில் உட்கார்ந்து, கீதத்தின் முடிவை எதிர்பார்த்த வண்ண மிருந்தான்.

'பொன்னையும் வென்ற பொற்புடைய அக்குமரி தன் இன்னிசைக் கீதத்தை நன்னர்ப் பாடிமுடித்து எழுந்து, பசு பதியை மும்முறை வலம் வந்து, நிலந்தோயப் பணிந்தாள். பணிந்த காரிகை, பின்னால் திரும்பிப் பார்க்குமளவில் கந்தனை மானும் சந்திராபீடனைக் கண்டாள். கண்டு, 'ஐய! வருக! வருக!! நும் வரவு நல்வர வாகுக. நுமது வருகையால் அடியேனது ஆச்சிரமம் புனிதமாயது. யானும் பெரும்பேறு பெற்றேன். எனைத்தானும் சேய்மைக்கண் விளங்கும் இவ்விடத்திற்கு நீவிர் எங்ஙனம் வந்திரோ! எழுக, என் பூசனையைப் பெறுக. அதிதிகளைப் பூசியாத நாளெல்லாம் அவமே!' என்று வேண்டி நின்றாள். அகமும் முகமும் மலர்ந்து கூறிய அவ்வடிவழகியின் இக்குவும் கைக்கும் இன்மொழிகளாலேயே சந்திராபீடன் பெரிதும் அனுக்கிரகத்தை யடைந்தவனாக எண்ணினான். பின்னர் இளவரசன் பத்தியுடன் எழுந்து பணிந்து, 'தமது ஆணையின்படியே நடப்பேன்,' எனக் கூறி, ஒரு நற்சீடன்போல் அவளைப் பின்பற்றிச் செல்வானான். காரிகை முன்னே செல்லக் குமரன் பின்னே சென்றான். செல்லும்போதே அவ்விளந் தோன்றல், 'என்னே வியப்பு! என்னைக் கண்டதும், இம்மடமாதரான் மறைந்து சென்று விடவில்லை. இவள் வரலாறுகளைச் சிறிதும் விடாது அறிவதில், என் மனம் முனைந்து நிற்கின்றது. ஆ! தவ வடி

வம் தலைநின்றாள். வடிவழகோ, சொலற்கரிது! அன்பு, கண்ணோட்டம் முதலிய அருங்குணங்கள், இவள் திறத்துப் பெரிதும் காணப்படுகின்றன. நான், 'உன் வரலாற்றைக் கூறுக,' எனக் கேட்பினும் விடாது மொழிவாள் போலும்! எனத் தனக்குள் முடிவு செய்துகொண்டான்.

'இன்னணம் இருவரும் ஒரு நூறடி தூரம் சென்றதும் ஆண்டு நின்றனர். அவ்விடத்தில் குமரன் குகை யொன்று கண்டான். அதில், ஒன்பான் மணிகளும் குயிற்றிச் செய்த மணிமயக் கமண்டலங்கள் நிரல்பட வைக்கப்பட் டிருந்தன. ஒருசார், மரக்கோற் பட்டை தூங்கி நின்றது. ஒரு புறம் தெங்கினது மட்டைகளா னியன்ற அடி நிலைகள் இரண்டு கிடந்தன. ஒருசிறைச் சங்கினா னியன்ற பிட்சைப் பாத்திரம் இருந்தது. மற்றோரிடத்தில் வெண்ணீறு நிறைத்த சுரைக் குடுக்கை யொன்று கிடந்தது. சந்திராபீடன், அக்கற்குகையின் வாயிலில் இருந்த சிலாதல மொன்றில் உட்கார்ந்தான்.

'காரிகை அக்குகையினுட் புகுந்து, தனது கையினிற் றாங்கிய வீணையை மரவுரிப் பாயலின் பாங்கர் வைத்தாள்; வைத்து, இலைகளாற் செய்த கல்லை யொன்றில், அருவி நீர் கொணர்ந்து, அரச குமரற்கு அர்க்கிய நீராக வளித்தாள். அவன், 'பெண்ணருங்கலமே, சிறிது தயை செய்வீராக; வேண்டா; வேண்டா; இவ்வளவு மரியாதைகள் எனக்கேன்? உமது அன்பும் அருளும் கனிந்த நோக்கமே எல்லாப் பாவங்களையும் போக்கி என்னைப் புனிதனாக்குமே! ஆதலின், போதும்! போதும்!' என்றான். எனினும், காரிகையின் வற்புறுத்தலானே ஒருவாறு அதிதி பூசையை அவன் ஏற்றுக்கொண்டான். இவ்வாறு பூசை முடிந்ததும், அருகிருந்த சிலாதல மொன்றில் அத்திப்பியக் காரிகை உட்கார்ந்து, சிறிது நேரம் மோனமாயிருந்து, சந்திராபீடனது வரலாற்றை முன்னர்க் கேட்

டாள். அரச குமரன், தான் திக்கு விசயம் செய்ய எழுந்தது முதல் கின்னரங்களைப் பின்பற்றி அங்கு வந்த நிருகக் கடன் மடை விண்டெனக் கூறி முடித்தான்.

'உடனே அவள் எழுந்து, குகையினுட் புகுந்து, பிச்சைப் பாத்திர மொன்றைக் கையகத் தேந்தி, அருகிலிருக்கும் கனி மரங்களின் அடிகளிற் சென்று, இங்கு மங்குமாய் உலவச் சிறிது போழ்தினுள், கனிகள் தாமாகவே பாத்திரத்தில் மோதிய அளவுக்கு வீழ்ந்தன. அவற்றைக் கொணர்ந்து சந்திராபீடன் முன் அன்புடன் வைத்து, 'உண்க,' என்றாள்.

'அரச குமரன், 'தவஞ் செய்வார் செயற்கரிய செய்பவரன்றோ? தவத்தா லாகாதது இவ்வுலகில் என்ன இருக்கிறது? இந்த ஆச்சிரமத் தருக்களும், தாமாகவே இப்பெண்ணணங்குக்குக் கனிகளைக் கொடுத்தனவே! இஃதன்றோ விந்தையினும் விந்தை!' என்று கூறி, இந்திராயுதப் பரியின் சேணமகற்றிக் கலினங் கழற்றி, அருகே நின்றதொரு தருவினில் அதைக் கட்டி, அருவி நீராடச் சென்றான். நீராடியபின், காரிகை கொணர்ந்த தீஞ்சுவைக் கனிகளை அகடார வுண்டு, பசி தீர்ந்தான். அவளும், சந்திராபீடன் காய் கனி கிழங்குகளைப் புசிக்கும் வரையில் தனியே ஓரிடத்தி லிருந்தாள். பின்னர் மாலைக் காலச் சடங்குகளை நிறைவேற்றிய அப்மாதராள், ஒரு பாறையின்மீது வந்துட்கார்ந்தாள். அரசகுமாரன், சற்று நெருங்கி யுட்கார்ந்து, பின்கூறுமாறு கேட்கத் தொடங்கினான்:

'பெண்ணருங்கலமே, யானொரு மனிதன்; நும்மினும் இழிந்த பிறப்புடையேன். அத்தகைய என்னைப் பெரிதும் பெருமைப்படுத்திவிட்டீர். உயர்ந்தோர் தாழ்ந்தோருக்குச் சிறிது அருள் புரியினும், அதனால் தாழ்ந்தோர்க்குத் துணிவு ஏற்பட்டுவிடும். இஃதியற்கை. அங்ஙனமே எனக்கும் துணிவு ஏற்பட்டுவிட்டது. தங்கள் வரலாற்றை யறிய என் மனம்

முனைந்து நிற்கின்றது. அதைக் கூறுவதால் தங்கட்கு எவ்விதத்திலும் வருத்தம் ஏற்படாதிருந்தால், அவாமிகுந்த எனக்குத் தங்கள் வரலாற்றைக் கூறியருள வேண்டும். உம்முடைய பிறப்பினால் தெய்வ கணத்துள் எவர்தம் மரபு ஈடேறியது? மலரின் மென்மையும் அழகுமுடைய இப்பருவத்தில், நீவிர் மனமொடுக்கி, அரிய நோன்புகளைக் கொண்டு தவமியற்றக் காரணமென்? ஏன் தன்னந்தனியராய் வசிக்கவேண்டும்? ஆ! இளமைப் பருவம்! ஈறிலா வழகு! ஐம்புலக் கள்வரை அடக்கியாளுந் தவம்! இவற்றைக் காணுந்தோறும், என் மனம் வியப்படைகின்றது! உம்முடல், எண்ணுதற்கும் இயம்புதற்கும் அரியதாய் வெண்ணிறம் பெற்றுத் திகழ்வதேன்? கண்ணொளி பறிக்கு மிவ்வெண்ணிறத்தை யானிதுவரை கண்டது மில்லை; உண்டெனப் பிறர் கூறக் கேட்டது மில்லை. இகழ்ந்தனரோ பாங்கிகள்? இழந்தனிரோ அரும்பொருளை? அம்மையீர், இவற்றுக்கெல்லாம் மறுமொழி கூறி என் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டுகிறேன்,' என்று வணக்கத்துடன் கேட்டுக் கொண்டான்.

---

## 6. மகாசுவேதை சந்திராபீடற்குத் தன் வரலாறு கூறல்

'இளவரசன் இவ்வண்ணம் கேட்டதும், இயற்கையாகவே வெண்ணிறமுள்ள மகாசுவேதையின் முகம், சோகத்தால் விளர்த்தது. அவள் ஆழ்ந்த சிந்தனை யுடையார் போலச் சிறிது போழ்திருந்தாள். அவள் கண்கள் வெண்முத்துக்களை யுதிர்த்தன. செயலற்று ஏங்கினள்; விம்மினள்; வெய்துயிர்த்தனள்; வாய்க்குள்ளேயே புலம்பினள்.

'இந்நிலையை இளவரசன் கண்ணுற்றான். 'ஓ! நான் கேட்ட செய்தி, ஆற்றொணாத் துயரத்துக்கு மூலம் போலும்! இத்தகை யுருவங்களையும் துன்பங்கள் விடாது பற்றி வருத்துகின்றனவே! ஆம்! இப்பாழுந் துன்பப் படைகள் எவரைத்

தான் வருத்தாது விட்டுவிட்டன? ஆனால், இவற்றுக்கு அஞ்சி எவரும் அழிந்துவிட மாட்டார்கள். இடியேற்றின் வீழ்ச்சியால் புவிப்பாவை வருந்துவளோ? வருந்தாள்,' என்று எண்ணினன். பிறகு நொரேலென அவ்விடம் விட்டுப் பெயர்ந்து, அணித்தாக விருக்குமோர் அருவிக்கேகி நீர் கொணர்ந்தான். கொணர்ந்து, 'அன்னையீர், என் பிழை பொறுக்கருளுதிர். அந்தோ! நான் கேட்ட செய்தி உமக்கு இத்துணைத் துயரமூட்டுமென்று சிறிதும் அறிந்திலன் கண்டீர். துயருறுதிர். போதும். இதோ அருவி நீர் உளது. முகங் கழுவித் துயர் மாற்றுக,' என்று இறைஞ்சினன்.

'அன்புடன் கூறிய அரச குமாரன்றன் இன்மொழிகளாற் கட்டுண்ட காரிகை, அவன் மொழிகளைத் தள்ளாது துன்ப நீர் கலங்கிய தன் கண்களைத் துடைத்து மரவுரியின் தலைப்பினால் முகந் துடைத்து, நெட்டுயிர்ப் பெறிந்து, இன்மொழி கலந்த மெல்லிய குரலால் மறு மாற்றங் கூறுவா ளாயினள்:

'அரச குமரரே, பாக்கிய மிழந்த பாவியான்! இரும்பினும் வலியதென் னெஞ்சம்! நான் பாசுபத நோன்பெய்தியவள் தன் வரலாற்றைக் கேட்பதாற் பயன்யாது? அது குறித்தாலும் கூறுதற் கரிது; கூறினும் கேட்டற்கரிது. மனம் பொறுத்தாலும் பொறுத்தற் கரிது. பொறுத்தற் கரிதாயினும் புகலுவேன் கேண்மின்:

''அண்டர்தம் உலகில், அரம்பையர் என்று அவனி புகழும் சில மாதர்கள் உண்டு. அவர் குலங்கள் பதினான்கு வகைய. அவைதம்முள், ஒரு குலம் அயனிடத்துப் பிறந்தது; ஒன்று மறைவழித் தோன்றியது; இன்னொன்று அமுதங் கடைந்த கடலினின்று வந்தது; நிலன், நீர், வளி, தீ எனுமிவற்றிலிருந்து முறையே ஒவ்வொரு குலம் போந்தது;

மதியிடத் தொன்றுமாக இரண்டு குலம்

கள் எழுந்தன ; காமன் ஒரு குலம் படைத்தான் ; தருமன் ஒரு குலம் தோற்றுவித்தான் ; மின்னல் ஒரு குலம் தந்தது ; தக்கன் மக்கள் பலருள், முனி, அரிட்டை எனும் கன்னியர் கந்தருவக் கலவியால், இரு குலந் தந்தனர். ஆக இப்பன்னொன்கு குலங்களுள், முனி, அரிட்டை யெனும் கன்னியர் தந்த இரண்டுமே கந்தருவ மரபுகள். முனி என்பாளுக்குச் சித்திரஸேனனை முதலாகக் கொண்ட ஈரெண் புதல்வர் பிறந்தனர். அவருள், இறுதிக் குமரன் சித்திரரதன் என்பான். இவன், தன் தமயன்மார் பதினைவரினும், அறிவானும் நீதி நெறியானு மிகப் பெரிய னானன் ; இந்திரனை நண்புகொண்ட பண்பினன் ; இளமைப் பருவத்தேயே, எல்லாக் கந்தருவருக்கும் தலைவ னானன்.

"ஐயன்மீர், இதற்குச் சற்றுத் தூரத்தில், இப்பாரத வருஷத்தின் எல்லை முடிகின்றது. அதற்கப்பாலுள்ளது கிம்புருட வருஷமெனுந் தேயம். ஆண்டிருக்கும் ஏமகூடமெனும் அணி வரையை நகரி யாக்கிப் பல கந்தருவர்களை யதன்மிசைக் குடியேற்றிச் சித்திரரதன் என்பான் தன் புயவலியாற் பரிபாலித்து வருகின்றனன். சைத்திரரதமெனும் இம் மலர்க்காவும் அவன் செய்ததுவேயாம். அவன் செய்ததுவே அச்சோதப் பூம்பொய்கையும். இப்பசுபதி கோயிலும், அவனெடுத்ததே. பல பன்னுவதென் ? கந்தருவ வுலகமே யவன் தோள்வலிப்பட்ட தென்னலாம்.

"இனி அரிட்டையைப் பற்றிக் கூறக் கேண்மின்: அவளுக்கு மகார் எழுவர் பிறந்தனர். அவர்தம்முள் மூத்தவன் பெயர் அம்ஸன் என்பது. சித்திரரதன், அந்த அம்ஸனை இரண்டாவது கந்தருவ குலத் தலைவனாக முடி சூட்டி, அவற்குப் பெருமை பல செய்தான். அவன் கோல் கோடாது அதேகுன்றமிசை அரசு புரிந்து வந்தான்.

"அமுத மதிக் கதிரில் ஒரு குலம் பிறந்ததென்று முன்னே சொன்னேன் அல்லவா? அக்குலத்தில், தவளநிறம் பெற்றுப் பேரழகு வாய்த்த கௌரி எனும் மடந்தையொருத்தி பிறந்தாள். அவளை அம்சன் மணம்புரிந்து, முதற்றேவி யாக்கிக்கொண்டான்.

"ஒப்பரிய அப்புருடனுக்கும், செப்பரிய கௌரிக்கும், ஒரே மகளென்னுந் தன்மையில், எல்லாத் துயரங்களையும் சேர்ந்தனுபவிக்க யான் பிறந்தேன். சொல்லரிய என் வெண்ணிறத்தைக் கண்டு, மகாசுவேதை என்னும் அரிய பெயரை என் தந்தை எனக்கிட்டான். யான் துன்பங்களைக் கனவிலுங் கண்டறியேன். ஓர் இன்னிசை வீணையைப்போல, கந்தருவர் மடிகளிலும், அவர்தம் தூண்கள் போன்ற தோள்களிலும், துடையிலும் மார்பிலுமே இருந்து, சீராட்டிலும் பாராட்டிலும் வளர்ந்து வந்தேன். வளர்ந்து வருநாளில், தளிரிடையே மலர் தோன்றி, மலரிடையே தேன்றோன்றி வருவதென, ——— —யே எழில் இளமைச் செவ்விக் கோலம் வந்து

"கரையிலா மகிழ்ச்சிக்குக் காரணமாய இளவேனிற் காலம் மெள்ள வந்துற்றது. மயில்கள் ஆடின. குயில்கள் கூவின. தென்றற் காற்று மெல்லெனத் தவழ்ந்தது. எங்கும் மலர்த்தூளி பரந்து மணற்குவை யெனக் குவிந்தது. பகலைக் காணுவதெனப் பங்கயமும், இருளை வாவிடுப்பதென விரையார் நீலமும் மலர்ந்தன. இக்காலம் எல்லார் மனத்தும் இன்பம் விளைத்தது. அதுகாலை ஒரு நாள் யான் என் அன்னையுடன் இம்மலர்ப் பொய்கையில் நீராட வந்தேன். வந்து கரையருகொளிரும் பாறைகளின் பாங்கர், மலைமகள் தன் வளைக்கையால், எழில் மிக வெழுதித் தொழுத வெம்பெருமானது திப்பிய மலரடியைத் தொழுதும், சந்தனமென் சோலை

களையும், தழைத்த கொடி மண்டபங்களையும் பார்த்தும்

"நிற்கும்போதே, அற்புதமாய், திப்பியமாய், உலகோர் முகர்ந்தறியா வொன்றாய், ஒரு நறுமணம் காற்றுடன் ஒல்லென வீசியது. இம்மணந் தேடி வண்டுக ளெல்லாம், ஒன்றினை யொன்று முந்திப் பொம்மென விம்மி விரைந்து பறந்து சென்றன. 'இந்நறுமணம் எவ்விடத்திருந்து வருகின்றது!' என்று அறிய ஆவல்கொண்டு, மணம் வரும் திக்கு நோக்கிச் சிறிது தூரம் சென்றேன். சென்ற அளவில், ஈசனார் காமனைக் காய்ந்தெரித்தாராக அதனால் மிகவருந்தி மெய்த்தவத்தை மிக மேற்கொண்டு வந்த வசந்தன் போலத் தோற்றிய ஒரு முனி குமாரனைக் கண்டேன். அவன் செந்நிற வேணியன்; செந்தாமரை மலர்ந்தென வொளிவிடுங் கண்ணன்; இருதோளில் வீழ்ந் தலையுங் குழையன்; மறைமொழி நாவன்; வெண்ணகையன்; அழகொழுகு திருமுகத்தன்; மானின் உரிவையும் முப்புரி நூலு மிலங்கு மார்பன்; கமண்டலமும் மணிமாலையும் பிடித்த கையன்; [illegible] வடிக்கையன்; அறத்திறனுருவமும் பிரமசரியத்தின் அலங்காரமும் போன்றவன். அவன்பருவமே கொண்ட மற்றொரு முனிகுமாரன், பூசைக்குவேண்டும் புதுமலர் பறித்து அவன் பின்னே வந்துகொண்டிருந்தான்.

"நீராடல் காரணமாய், வாவிக் கண்புடனே அடிபெயர்க்கும் அம்முனிகுமாரன், தன் திருச்செவியில் கார்த்திகை மீனின் கூட்டம் போல்விளங்கும் பூந்துணரை அணியென வணிந்திருந்தான். அப்பூங்கொத்தில் பல கோடி அளியினங்கள், பண் முழற்றிச் சுகமாய்த் திரிந்தன. இதைக் கண்ட மாத்திரையில், யான், இந்த மலர்ப் பரிமளமே அந்த நறுங் கந்தமெனக் கருதினேன்.

"உததியிடைக் கடவு மரகதவருண குலதாரக வுபலளித கனகரத சதகோடி சூரியர்கள் உதயமென வொளிவிடுமக் குமார

னது வடிவழகை, என்னிரு கண் பெற்ற பெரும்பேறெனை யான் பருகியபின், இவ்வா றெண்ணலுற்றேன்:

"ஆ! எத்துணையும் எஞ்சாது, உலகிலுள்ள பேரழகை ஒருங்கே திரட்டி யியற்றும் நான்முகனார் கைவன்மையே வன்மை! எழில்மதியின் அமுத கலைகளை இராவி கவர்கின்றான் என்பது பொய். அவை முழுதும் இம்முனியே கவர்கின்றான். ஐயமிலை; மெய்யே! அல்லாது, முனிவெங்கானில் அறவுலர்ந் துலர்ந்து தவஞ் செய்வார்க்கு இவ்வழகு எங்ஙனம் உண்டா கும்?' என்று கருது மேல்லையில், என்வய மிழந்தேன். உயிர்ப் பையும் மறந்தேன். கண்ணிமைத்தலும் நீர்ந்தது. பின்னர்ச் சிறிது நேரங் கழித்து என்வய மானேன். 'ஓ! என்னையிது! உயர் குலத் துதித்த ஒண்டொடி நங்கையர்க் கிச்செயல் அடுக் குமோ? என்னினைத்தேன் ஏழையேன்! என்செயத் துணிந் தேன் பேதையேன்!' என்றெண்ணியும், புலன்களை அடக்கி யாளுந் திறமை என்னிடத்து எள்ளளவும் இல்லாது என்னை மீறிச் சென்றது.

"தற்போத மிழந்து, சுவரோவியமென நின்று, அவரது வடிவழகைக் கண்களாற் பருகினேன். இயற்கைப் பண்பான நாணம் எங்கோ பறந்து சென்றது. எனினும், 'எனக்கு இத் துணைப் பேதைமை அடாது. முன்னே நிற்போன் ஐவரை அருஞ்சிறையில் அடைத்த முனிவன். இவன் எனது மீறிய நிலையைக் கண்டு, இகழினும் இகழ்வன்; அன்றிச் சபிப்பினும் சபிப்பன். இவனிதை யறியா முன்னம், இவ்விடம் விட்டு நீங்கிவிடவேண்டும்,' என்று எண்ணினேன். எண்ணியவெனக்கு, முனிவனைக் கண்டும், பணியாது போதல் பெரிதும் தீதென்ற வொரு புத்தெண்ணம் பிறந்தது. ஆதலின், அவனருகிற்சென்று அடி பணிந்தேன். பணிந்த வென்னிலையைக் கண்டு, ஐம்புல னடக்கி யருந்தவம் தலைநின்ற வம்முனியும் தற்போத மிழந்

தான். அதைக் கண்ட வென்னிலையை என்னென்பேன்! மனத் தான்மாத்திரம் உணரப்பட்டு, வாயாற் கூறமுடியாத வோரவத் தைக் காளானேன்.

"பிறகு, அம்முனி குமரனைப் பின்பற்றி வரும் இருடி குமரன தருகிற் சென்று பணிந்து, 'ஐய, உன் நண்பனின் பெயர் யாது? தாய்தந்தைய ரெவர்? அவன் காதிலணிந்த பூந்துணர் எம்மரத்தினது?' என்று கேட்டேன். அவன் என் வினாக்களைக் கேட்டுக் குறுநகை செய்து, பின் கூறுமாறு கூறி னன்:

"நங்காய், சுவேதகேதுவெனப் பெரியவோர் மாமுனிவர் விண்ணுலகிலுளர். அவர் ஓர் அழகிய வடிவினர். அவர் ஒரு நாள் கடவுட் பூசைக்காகத் தாமரை மலர் கொய்துவரக் கங் கைக்குச் சென்றார். ஆங்குள்ள மலரொன்றில் வீற்றிருந்த இலக்குமி, அவரது வடிவங் கண்டு காதல் கூர்ந்தாள். அக் கணமே யதன் பயனாக வொரு மைந்தன் பிறந்தனன். பின் னர், இலக்குமி, பிறந்த மைந்தனைக் கையகத் தேந்தி, முனிவ ரிடம் வந்து, 'மாமுனிவரே, இவன் நமது திருக்குமரன்; ஏற்றருள்க,' என மொழிந்தனள். முனிவரும், 'ஓம்!' என அம்மைந்தனை வாங்கி எடுத்துச் சென்று, சாதகன்ம மாதியவற் றைச் செய்து, தாமரையி லுதித்த காரணத்தானே அவற்குப் புண்டரீகன் எனப் பெயரிட்டனர்; பிரமசரிய விரதத்தில் மைந்தனை நிறுத்தி எல்லாக் கலைகளையும் எளிதிற் பயில்வித்த னர். அப்பூந்துணர், பாற்கடலிற் பிறந்த பாரிசாதமெனுந் தரு விற் பூத்தது. அதைக் காதில் வைத்திருப்பது, நைட்டிக நோன்புக்கு மாறெனினும் அவன் இதைத் தானே வலியக் கொள்ளவில்லை. இன்று சதுர்த்தசி நாள் ஆதலின், பார் வதி தேவியைப் பணிய யாமிருவரும் கைலை சென்றோம். அவணுற்றுத் தேவியை வணங்கி, நந்தன வனத்துக் கருகில்

மீண்டு வருகையில், அவ்வனத்துத் தேவதை, தன் கைகளி லிப் பூங்கொத்தை யேந்தி, 'ஐயா, நீ யிப்பூந்துணரைச் செவிக் கணியெனக் கொள்ளின், பாரிசாத மரம் பெரிதும் பயனடை யும்,' என்று இறைஞ்சி வேண்டினள். ஆதலின், யான், 'நண்பனே, ஏத்தி வருகின்ற இவள் ஆதரந்தீர இதனைச் சாத்தி யருள்க,' என்று, அவள் கையினின்றும் அதனை வாங்கிச் செவித்தாராக வணிந்தேன். இவையே நீ கேட்க விரும்பிய வற்றின் வரலாறுகள். அறிந்தனையோ?' என்றான்.

'' இவற்றைக் கேட்டுக்கொண்டிருந்த முனி குமாரனைப் புண்டரீகன் புன்முறுவல் செய்து, 'புனையிழாய், இதற்கோ யித்துணை வினாக்கள்! விருப்பமேல் நீ இதனைப் பெறலாம்,' என்று, தானே வந்து என் செவிமேல் தன் செவியினின் றொளிர்ந்த மண நாறும் பூந்துணரைச் சேர்த்தினன். என் கன்னமிசைப்பட்ட அவனது கை நடுங்கியது. உடனே அவன் இலச்சை யிழந்தான். அம்மட்டோ! அவன் கரத்தி லிருந்த அக்க மணி மாலையும் நழுவி விழுந்தது. அதை அவன் அறிய வில்லை. அச்செபவடம் பூமியில் விழுவதன் முன்னரே, யான் எளிதிற் கையேந்தி யென் கண்டம் சேர்த்தினேன்.

'' இதற்குள், தன்குடை யேந்தும் பணிப்பெண்ணொ ருத்தி என்னிடம் வந்து, 'அணங்கே, மாதேவியார் மஞ் சனமாடி, நின் வரவை யெதிர்பார்த்து நிற்கின்றனர்,' என்று விரைந்து கூறினள். யான் முனி குமாரன்மேற் பதித்த கண் களை மீட்க முடியாமல் மீட்டுக்கொண்டு, நீராடக் கருதி ஓரிரண்டு அடிகள் எடுத்து வைக்கலானேன். அப்பொழுது புண்டரீகன், தடுமாற்றங்கொண்டு தைரிய மிழந்தான்.

'' கபிஞ்சலன் என்னும் அவனது நண்பனிதைக் கண் டான். கண்டதும் அவன் சிறிது சினங்கொண்டு, புண்ட ரீகனைத் திருத்த முயன்றான். மிகுதிக்கண் மேற் சென்று இடித்தற்பொருட்டன்றோ நட்பு?

' 'அவன், 'புண்டரீக, என்னினைந்து என் செய்கின்றனை? இஃதுனக்கடாது. உன் போன்றார்க்குத் தைரிய மென்பது பெருந்தனங் கண்டாய்! பேதை மதி படைத்த ஒருவனைப் போலவன்றோ உன் வயமிழந்து நிற்கின்றனை! உன் தைரியம் எங்கே ஓடி ஒளித்தது? வழி வழி வந்த பிரம்மசரியம் பறந்து சென்றதோ? குருவின் உபதேசங்களைக் கோது வீசினையோ? கரையற்ற கல்வியின் பயன் இதுதானோ? ஓ! நின்னறிவு பஃறி றத்தும் பயனற்று ஒழிந்ததே! நின்போல்வார் நிறையழியின், நற்குணங்கட்குப் புகலிடம் யாது? நான் இதற்கு இனி என்ன சொல்வேன்! காதிலிருந்து நழுவி வீழ்ந்த கண்டிகை மணி மாலையையும் இந்நங்கை கவர்ந்துவிட்டனள் என்பதை நீ அறியாது போயினையே! உண்டி சுருக்கல் முதலிய நின் நியமங்கள் நன்று! நன்று!! அறிவிருந்தும் அறிவிழந்தனை. உறங்குதியோ உறங்காதாய்? தவத்தினையெண்ணினும் அவத்தினை யுடையினை. வேண்டா! விட்டொழிதி! இழிந்த பெண்ணால் இழுக் கப்பட்டுப் போகாதொழிக!' என்று இடித் திடித்துக் கூறினன்.

' ' இதைக் கேட்ட புண்டரீகன், வெட்க மடைந்தவன் போல், 'கபிஞ்சலா, என்னையோ இப்பொழுது நீ கூறுவது! எனது செபமாலை கொண்டு இக்கன்னியை நான் போக விடேன் காண். இதோ பார்!' என்று புருவங்களை நெற்றி மிசையேற வளைத்து, இதழ் துடிப்ப, சினங் கொண்டானைப் போல என்னைப் பார்த்து, 'பேதாய், என் செபமாலை தந்தலா தேகலையாய் நீ! சகிதன்றனை!' என்றான். அம்மாலையை யான் எனதாகக் கொண்டு, எனது மார்பிடைப்புரளும் முத்த மாலையைக் கழற்றி மின் செறி மேனி முனி கையிற் கொடுத்துப் பொன் செறி கமல வாவியி னீராடச் சென்றேன்; பின்னர் நீராடிப் பாங்கியர் புடை சூழ வென் கன்னிமாடஞ் சென்றேன். சென்றும் பெண்! என்னறிவு என்னிடத்தில்லாது, அச்

சோதக் கரையிலேயே சென்று நின்றது. மாடத்தும்பர் ஒரு தனியிடஞ் சென்று, சாலகத்தினூடு பொய்கைக் கரையையே பார்த்து நின்றேன். இத்தருணத்தில், வெள்ளிலை யளிக்குந் தரளிகை யென்பாள், என்னை நோக்கித் தயங்கித் தயங்கி மெல்ல வந்துகொண் டிருந்தாள்.

‘‘வந்த தரளிகை, ‘எம்பெருமாட்டி, செய்தியொன் றுண்டு : சிந்தனை யொழித்துக் கேட்டருளவேண்டும். பொய்கைக் கரைக்குச் சென்றிருந்தபோது நாம் கண்ட முனி குமாரரிருவருள், உனக் கிந்த செவித் தார் தந்தவன் நண்பனின்றித் தன்னந் தனியனாய் வந்து, அடியேன் வருநெறி யருகே பதுங்கி நின்று, என்றனை அழைத்து, ‘தையால், இங்கிருந்தாள் உன் தோழி யார் மகள்? அவளது பெய ரென்னை? ஊரெது?’ எனக் கேட்டான். யான், வையகம் புரக்கும் கந்தருவாதிபதி அம்சன் மகளெனவும், மகாசுவேதைப் பெயரின ளெனவும், வாழும் பதி ஏமகூட மெனவும் உரைத்தேன். உரைத்ததும் அவன் சிறிது திகைத்து நின்றான். ஏதோ வொன்றைக் கூற வருபவன்போல் வந்து உளங் கூசி ஒடுங்கி நின்றான். என் முகத்தைப் பல முறை நோக்கினான். நெட்டுயிர்ப் பெறிந்தான். பின்னர், என்னருகில் வந்து, ‘பெண்ணே, நீ பெரிதும் அன்புடையாள் போலக் காணப்படுகின்றனை! உன்னால் எனக்கு ஆகக் கூடிய காரியம் ஒன்றுளது. உரைக்கவோ? ஒழியவோ?’ என்றான். யான் அப்பொழுது அவனை வணங்கி நின்று, ‘எந்தையீர், நும் கண் பார்வை யொன்றே யெங்கள் தீவினை யாவு மகற்றுமே! ஆதலின், தாங்கள் அருளுங் கருமம் எதுவோ, அதுதான் எனது செய்கை. சங்கையா தருள் செய்வீராக,’ என்றேன். உடனே யம்முனி குமாரன், அங்கு நின்றதொரு பச்சிலை மரத்தி லரும்பிய கொழுந்துகளை யெல்லாம் பறித்துச் செங்கையாற் பிசைந்து ஒரு பாறை

யிற் பிழிந்து, தான் போர்த்த வற்கலையின் தலைப்பிற் சிறிது கிழித் தெடுத்து, அதன்கண் நகத்தைப் பச்சிலைச் சாற்றிலே தோய்த்துக் கடிதமொன் றெழுதி, 'இதனை அம்மங்கையர் மணியின் செங்கையில் ஒருவரும் அறியாவணம் நீ கொடு,' எனத் தந்தான்,' என்று கூறி, அதனை எடுத்து என் கையிற் கொடுத்தாள். யான் அதனை அன்புடன் வாங்கிப் பிரித்துப் பலகா லுவந்து படித்தேன். அதிலிருந்த வாசகங்க ளிவை :

' தனக்கிரை யான தாமரை வளையந்
தானெனத் தாளமா லையினை
நினைத்துடன் கௌவி வெள்கிய வன்ன
நெடுந்துய ருழந்திருந் ததுபோற்
சினைக்கயல் விழியார் முத்தமா லையினைச்
செபவட மென்றுகேட் டுண்டு
மனத்திடர் பெருகா நாணுறு வருந்தா
மயங்குகின் றனெரு முனியே !' —காதம்பரி

" இவ்வாசகங்களைக் கண்டபின், அசதியிற் பெருகிவரும் பெருவெள்ளம் யாற்றைக் கலக்குமாபோற் கலங்கிய தென் னுள் ளம். குருடர்க்கு நிறையிருள் வந்த தெனவும், மன்னுகா னிடையே வழி தப்பினர்க்குத் திப்பிரம முற்றதெனவும், ஊம னுக்குள்ள பழைய நாவும் சிதைந்த தெனவும், முன்னமே யின் னலால் மயங்கிய வெனக் கின்னமும் இன்னலே மிக வளர்ந்தது. பிறகு தனியிடம் சென்று தரளிகையை அழைத்துப் புண்டரீக னிலை யெலாங் கேட்டு, அன்று பகற்பொழுதை அரிதிற் கழித் தேன்.

# 7. கபிஞ்சலன் வரவும் மகாசுவேதையின் புறப்பாடும்

"கதிரவன் மேலைப் புணரியில் மூழ்கினன். பொய்கைக்கு என்னோடு குடையேந்தி வந்த பணிப்பெண் ணொருத்தி என்முன் வந்து, 'மாதராய், குளக் கரையில் கண்ட முனி குமாரரிருவருள் ஒருவன் வாயிலில் வந்து, நின்னிடமிருந்து செபமணிமாலை வாங்கிச் செல்லவேண்டு மென்று நிற்கின்றான்.' என்றாள். 'முனி குமாரன்' என்ற மொழி என் செவிப்படு முன்னமே யான் ஒரு கஞ்சுகியை அனுப்பி அவனை உள்ளே அழைத்து வரச் செய்தேன். புண்டரீகன் இதயம் போன்ற கபிஞ்சல முனிவன், என்னை நோக்கி வந்துகொண் டிருந்தான். அவனைக் கண்ட யான், சிறிது முன்னே சென்று எதிர் கொண்டழைத்து, வணங்கி, ஆசனத் திருத்தினேன்; அவனது முளரியந்தாள் கழீஇ, முந்தானையாற் றுடைத்து, அவன் பக்கத் துத் தரையில் உட்கார்ந்தேன். அந்த மாமுனிவன் மனக்கருத் தெல்லாம் வந்த கோலத்தினா லறிந்தேன்.

"இருந்த முனி சிறிதுபோ தொன்றையு மருள் செயாது வாளாவிருந்து, ஏதோவொன் றுரைப்பவன்போல என் முகம் நோக்கும்; உரை செய்யான்; தரளிகைதன்னைப் பல முறை பார்த்துக் கொண்டே யிருக்கும். இதை நோக்கிய யான், முனிவன் கருத்தை யுணர்ந்து, 'மெய்த்தவனே, ஐயுறல் வேண்டா! இவள் எனக் குயிர்த்தோழி; ஆதலின், சொல்லக் கருதிய செய்தியனைத்தையும் சொல்லி யருளவேண்டும்,' என்று வேண்டினேன்.

"யான் கூறியது கேட்ட கபிஞ்சலன் என்னை நோக்கி, 'வரு கழலரசர் வான்குல வித்தே, என் சொல்வேன்! வாக்கும் எழு கின்றதில்லை நாணத்தால்! நான் வந்த காரியம், என் கோலச் சடைமுடிக் கேற்றதோ? அன்றி யிம்மேகலைக் கேற்றதோ? மா வுரிக்குத் தகுமோ? அந்தோ! என்னைத் தெய்வம் இப்படிச்

செய்ததே! இதுபோலப் பெருத்த அவமானம் எங்கட் கேது? எனினும், வேறு உபாய மில்லை. உரைத்தே தீரவேண்டும். உரைசெயா திருக்கில் இக்காரிருளிற் பெரும்பிழை யொன்று விளையும். ஆவியை நீத்தும், நண்பனைக் காப்பதே கடன். ஆதலிற் கூறுவன; கேள்:

"பொய்கைக்கரையில், என்னண்பனை நின் கண்முன்னகைக் கடிந்து, அறவும் கொடுமொழிகள் கூறியதை நீ அறிவை. பிறகு பன்முறையும், 'வேண்டா; தப்பிது. தவிர் நீ,' என்றிடித்துக் கூறிப் பூசைக்குப் புதுமலர் கொய்யச் சென்றேன். நீயும் நீராடி வந்துவிட்டனை. அதன் பின்னர், இவன் என்ன செய்கின்றா னென்றறியத் தனியிட மொன்றில் மறைந்து நின்று பார்த்தேன். என்னண்பனைக் கண்டிலேன். அதனால் அற வருந்திய யான், உன்னைப் பின்பற்றித் தனியே சென்றனனோ! அன்றி யென்னை யிவ்விடத்துக் காணப் பொறாது நாணி யெங்கேனும் மறைந்தானோ! என்றிவ்வாறெல்லாம் எண்ணியெண்ணி யேங்கிச் சென்றேன். 'நாணத்தால், முடிவில் ஏதேனும் மனமொவ்வாக் காரியமொன்றைச் செய்தாலும் செய்துவிடுவான்; இவனை யின்று இனித் தனியே விடுதல் நன்றன்று,' என்று கொண்டு, நெருங்கிய சோலை, வாவி, கிரி, சுனை முதலிய இடங்கள் எங்கணும் தேடினேன். புண்டரீகனைக் காணவில்லை. அதனால், நெஞ்சழிந் தேங்கு மப்போது, பொய்கைக் கரையில் உளவாகிய கொடி வீடுகளை ஒவ்வொன்றாய்ப் பார்த்துச் சென்றேன். ஆண்டு, ஓரிடத்தில், இயற்கை யழகெலாந் திரண்டு வடிவெடுத்ததோ வெனுந் தன்மையதான கொடிவீடு கண்டேன். அஃது இளவேனிற் காலத்தின் பிறப்பிடமென விளங்கியது. அதைக் கிட்டிச் சென்று எனது நண்பன் புண்டரீகனைப் பார்த்தேன். மதி முகத்தாய், அவன் அடைந்திருந்த நிலையை என்னென்பேன்! அவன் தன இரு கண்களும் நீரினை வெண்முத்தென வுதிர்க்கத் தன் என்

ணத்தை யெல்லாம் ஏதோ வோரிடத்திற் பதித்து, சுவரோவி யப்போ லிருந்தான். வைகறை மதிபோல் அவனது உடம்பு விளர்த்திருந்தது. நாவில்லா ஊமன் போலவும், இடிக் குரலறி யாச் செவிடன்போலவும், பேயினு லடிப்புண்டவன் போலவும் காணப்பட்டான். பாவியேன் அவனைக் கண்ட வளவில் என் னெஞ்சம் பதைத்தது ; உடல் நடுநடுங்கியது. அறிவாலும், ஒழுக்கத்தாலு நிறைந்த அவனைத் தேவர்களும் கொண்டாடி னிற்க, அவன் இந்நிலை யடைந்தது வியப்பன்றோ ?

‘‘யான் அவனருகிற் சென்று, தோண்மேல் மெல்லக் ‘உயிர்த்துணைவ, நன்றிது ! நன்றிது ! இஃதென் கொல் அவத்தை ? கண் விழித்துப் பார் ! உனக்கு என்ன நேர்ந்தது ? என்னிடத்து மறைக்காமற் கூறுதி,’ என்றேன். அவன் பெரிதும் முயன்று, மெல்லெனக் கண் திறந்து, சிறிது நேரம் என்னை உற்று நோக்கினன் ; பெருமூச் செறிந்தான்; பின்னர்த் தழுதழுத்த குரலில், மொழி தடுமாறப் பன்முறை புலம்பி, ‘துணைவ, நேர்ந்தவெலாம் அறிந்திருந்தும் கேட்கின் றனையே !’ என்றான். ‘இனி யிவனை மீட்டுதல் சாலாது,’ எனக் கண்டு, ‘இத்தருணத்து நம்மா லியன்ற வளவு முயன்று பார்ப்போம்,’ என்றெண்ணினேன். ‘வழியலா வழிமே லேகிய பொழுது கடிந்து மீட்காம லிருத்தல் நண்பின் பண்பன்று,’ எனக் கருதி, அவனை நோக்கி இவ்வாறு கூறலுற்றேன்:

‘‘நண்ப, புண்டரீக, நீ கருதியது குருபதேசமோ ? நீதியோ ? தருமநூ னெறியோ ? அருநர களிக்கும் அணங்க ணூர் போக மாதரித் தொழுகல் அறமன்று. அது நச்சுமென் கொடிக்குத் தண்புனல் சொரிவது போலுங் கண்டாய் ! பரிமள நீலமாலையென் றிருண்ட பாம்பினைக் கழுத்தில் அணிவது கண் டாய் ! விரிசுட ரழலைச் செம்மணி யென்று மெய்யினோ டணைப்பது கண்டாய்! ஆதலின், நெறியலா நெறிபோய் அயரும்

ஐம்புலன்களை மீட்க ; மருட்கை மாறித் தெளிக,' என்று யான் கூறிவரு மெல்லையில், அவன் என்னைத்தடுத் தென்கரம் அன் பினாற் பற்றி, 'துணைவ, பலபட மொழிந்தென்? யானுரைப்பது கேள்: என்கருத்து அறவும் ஒழிந்தது. அறிவுரை கூற நீவல்ல வன் என்பதில் ஐயமில்லை. இவையெல்லாம், சென்று தங்கும் நெஞ்சமுடையார்க்கன்றோ பயன்றரும்? இனிமேல் என்னைத் திருத்தவும், அறநெறி யுபதேசஞ்செய்யவும் உன்னா லியலாது. என்னவத்தையைக் கண்கூடாகக் கண்டாய். அதற்குத் தக்க வாறு முயற்சி செய்,' என்று கூறித் திரும்பவும் தன கண்களை யிமைப்பற மூடிப் பொன்றினர் போலே யிருந்து விட்டனன். அப்போதும் யான், பல பல முகத்தாற் கன்றியும், உவந்தும், இரந்தும், கலைகளாற் றேற்றியும் பார்த்தேன்; ஒன்றிலும் தெளியக் கண்டிலேன்; என் செய்வேன் ! பின்னர், எதையும் என் மனம் எண்ணவில்லை. நேரே நின்னிடம் வந்திரந்து

னென். 'நன்றாறாங் கருமம் செய்க நீ,' என்று கூறி,

பள் என்ன மறு மாற்றம் கூறப்போகின்றனளோ !' என என் முகத்தையே நோக்கி ஆதரித்திருந்தான்.

"'கபிஞ்சலன்றன் துன்பியன் மொழிகளைக் கேட்டதும் என் மனம் இன்பத்தி லாழ்ந்தது. யான் என் எண்ணம் நன்கு பலித்ததென வெனக்குளே மகிழ்ந்தேன் ; நாணத்தாற் றலை குனிந்தேன். என் கண்களில் களி நீர்த் தாரைகள் பெருகின. 'இனி யெனக்குக் குறையேதுமிலது. ஆயினும் கபிஞ்சலற்கு எங்ஙனம் மறுமொழி கூறுவது?' என்றெண்ணி யிருக்கையில், வாயிற் காக்கும் பணிப்பெண் ணொருத்தி ஆண்டுப் போந்து, 'அணங்கே, நீ நோயால் வருந்துகின்றனை யெனக் கேட்டு, நின் அன்னையார் உன் இன்முகங் காண வாயில் வந்துற்றனர்,' என்று கூறினள்.

"'முனி குமாரன், சன நெருக்கம் பல்கிவிடுமெனத் தேறிப் பொருக்கென் றெழுந்து, 'மாதராய், மிகுதியும் நேரம்

கடந்தது! கதிரவனும் குடகடலிற் ரேயுங் காலம் நண்ணியது. நண்பனது நிலையை நன்கு தெரிந்தாய். இனி யான் சொல்வ தென்?' எனக் கூறி வெளிச் சென்றனன்.

"பிறகு, அன்னையும் வந் தெனதருகி லிருந்தாள். அப் போது, அவள் இன்னது செய்தாள், இன்னது சொன்னா ளென்ற எவற்றையும் அறியேன். மன்னிய நெஞ்சு அறைபோகி வாடி அயர்ந்திருந்தேன். பின்னை யென்னன்னையும் என்னைப் பார்த்துச் சென்றாள்.

"கதிரவனும் அத்தகிரியின் மறைந்தான். உலகெலாம் என் மனத்தைப்போல் இருணிறைந்தது. அப்போது, என் னுயிர்ப் பாங்கி தரளிகையுடன் பின் கூறுமா றியம்பலுற்றேன்: 'என் மனம் படும்பாட்டைப் பார்த்திலையோ வென்பாங்கி? யான் என்னுடைய நிலையிற் செய்வ தெதுவெனத் தேறாவுளத் தேன் கண்டாய். ஆதலின், யான் செய்வினை ஈதென்று நீ எனக் கறிவித்தல் வேண்டும். கபிஞ்சலன் கூறிய மொழிகளை நீயும் இருந்து கேட்டாயன்றோ? ஆனை மீறியவொரு கன்னி யென, நாணந் துறந்து, தைரிய மிழந்து, அடக்கம் விட்டு, அலர்மொழி பாராது, ஒழுக்கம் மீறிக் குலத்தைக் கருதாது, தந்தையின் ஆணையும், தாயின் விருப்பும் பெறாது, மனம் போனபடி, யானே தனித்துச் சென்று ஒருவரை மணப்பதா? செய்யின், பெரியோரை மீறிய பெரும்பாவமென்னைச் சூழ்ந்து கொள்ளுமே! அன்றி, அறத்துக் கஞ்சி, உயிர் துறக்க ஒருப்படு வேனாகில், தானேவந்து நம்மைப் பெருமைப் படுத்திய கபிஞ் சலனை ஏமாற்றியவ ளாவேனே! நான் அங்குச் செல்லாத காரணத்தான், ஒரு வேளை, புண்டரீக னுயிர் நீங்கினும் நீங்கும். அச்செயல் நிகழுமாயின், முனிவரைக் கொன்று ஆருயிர் போக் கிய அரும்பாவம் அகலாது சூழ்ந்துகொள்ளுமே!' என்று பலவாறு வினவிக்கொண் டிருந்தேன்.

''பின்னர், மெல்ல மெல்லக் கீழ் வானம் வெள்ளென விளர்த்தது. கலைமதியும் களிப்புட னெழுந்தான். நான், மனக் குழப்பத்தான் மயங்கி வீழ்ந்தேன். வீழ்ந்த வென்னைத் தரளிகை தாங்கிச் சிகிச்சை பல செய்தாள். அதனாற் சிறிது கண் விழித்துப் பார்த்தேன். என்னைத் தரளிகை நோக்கிப் பின் கூறுமாறு கூற லுற்றாள்:

''மகாசுவேதாய், நீ எதற்கு நாணுகின்றாய்? செல்லும் நிமித்தமாகப் பெற்றோ ரனுமதி வேண்டா. ஏத மொன்றும் விளைந்து விடாது. நீ விரும்பினை யென்னின், யானிதோ போய் முனி குமரனை அழைத்து வருகின்றேன். இல்லையேல், எழுந்திரு; இருவரும் போவோம்,' என்று சொன்ன வளவில், யான் தரளிகையோடு புறப்பட இசைந்தேன். உடனே தரளிகை, மலர், சாந்தம், வெள்ளிலை, வண்ணம், சுண்ணம் முதலிய வற்றை யொரு கட்டினில் வைத்து எடுத்துவர, யான் பைம்பட் டொன்றால் என்னை மறைத்துக்கொண்டு எவரு மறியாமல் வெளிப் போந்தேன். போந்த எனக்கு, வலக் கண் துடித்தது. அதனால் மனங் குழம்பிய தெனினும், தேறிச் சென்றேன். வழியிற் படிந்து கிடந்த மலர்த் தாளிகள் என் கால்களிற் பற்றி யிருந்தமையால், கைலை மலையி னோருவியிற் சென்று கால் கழுவிக்கொண் டிருந்தேன். அச்சோதப் பொய்கையின் மேல் கரையில் முனிகுமரன் இருக்குமிடத் திருந்து, 'ஓ ஓ!' என்றவோர் அழுகுரல், என் செவியில் காய்ந்த நாராசம்போ னுழைந்து, எனது நன்னெஞ்சை வாட்டியது. இந்த அழு குரலே, முன்னே என் வலக் கண் துடித்தமைக்குப் பொருள் என்றுணர்ந்தேன்; என்னுடைய எண்ணங்களை யெல்லா மெண்ணினேன்; தரளிகையைப் பார்த்து, 'பாங்கி, இஃதென்னை?' என்று கேட்டு, உடல் நடுநடுங்க, வெகு விரைவினில் அங்குச் சென்றேன். இரவு வேளை யாதலின், தூரத்திலிருப்பி

னும், நன்கு கேட்குமாறு கபிஞ்சலன் கதறுவது என் காதில்

" ஆ! கெட்டேன்! அம்மவோ! என் நண்பன் பிரிந்தான். ஓ! விதியே! இதுவோ நின்னுளம்! மன்மதப் பேயே! வாழ்ந்தனைபோலும்! இவன் உன்திறத்துச் செய்த தீங்குகளும் உளவோ? பட்டே கிடந்தனையே! பாவி மயன் நண்பாவோ! விட்டேன் இனி வாழ்வு! வேண்டேன்! வேண்டேன்!! அந்தோ! நெஞ்சம் வெந்ததே! என்றலைமேல் இடி விழுந்ததே! கமலை பெற்ற குமரா! நான் உன்னைப் பிரிந்து ஒரு கணமும் உயிர் வாழே னப்பா! உயர்ந்த கலைப் பயிற்சி! என்ன தவம்! என்ன ஒழுக்கம்! இவை யெல்லாம், என்னப்பனே, உன் திறத்துப் பொய்த்தனவே! மாதுயர்காணு மாசுவேதாய்! பழி வாங்கி விட்டாயே! படுபாவீ! உனக்கென்ன பிழை செய்தானம்மா! ஓ! நேயமுடைச் சுவேதகேதுவே, நின்மகன் ஆயுளைக் காமன் பறித்துக்கொண்டான். நீ ஏது மறிந்திலை! இந்தத் தனியிடத்தில் நான் என்ன செய்வேன்! நண்ப, உன்னுயிர் பிரிந்துபோகவும் அதைப் பார்த்திருந்த என் கண்கள் பெரும்பாவம் செய்தனபோலும்!

" சாற்றுந் தவமே! சத்தியமே! அறமே! இனி நீங்கள் ஏற்றமுடன் எங்கே ஒதுங்குவீர்? கோற்ற கலை மகளே! தாலி வாங்கிவிட்டனையே! வன்னெஞ்சப் புண்டரிக! என்னை மறந்தாயே! உனக்கிந்த கன்னெஞ்சு எவர் தந்தார்! நீ பிறக்க இன்னஞ் சாகாதிருந்தேன்! நன்று! உன் பின்னே அஞ்சாது வருவேன். பின் பார்த்துப் போகாய்! ஆரோ டினி திருப்பேன்? ஆரோ டினி மகிழ்வேன்? ஆரோடு மனத்துற்ற வெல்லாஞ் சொல்வேன்? ஐயையோ! எனக்கு யாரே துணை யாவார்? யாரே என் தஞ்சம்? மகாசுவேதைதன்னைச் சிறிதும் கினைந்திலையே!' என்று பலபடக் கன்றி இரங்கி யேங்கி யேங்கிக் கதறுகின்ற குரலைக் கேட்டே

"ஆ! இதைக் கேட்ட என் நெஞ்சம் மறுகியது; நாத் தடுமாறியது; உண்ணின்ற உயிர், ஊசலாடத் தொடங்கியது. வெகு தூரத்தி லிருப்பினும் வாய் விட்டு அலறி அழுதேன். எனது மேலாடை பொய்கைக் கரையின்கணுள்ள கொடிகளிற் சிக்குண்டுகிழிய, மேடும் பள்ளமும் அறியாமல் விழுந்தும் எழுந்தும், பதறித் தள்ளாடி, எவரோ வென்னைத் தூக்கி யெடுத்துப் போய் விட்டதுபோல, ஒரு நொடியிற் கொடி மண்டபத்தை யான் அடைந்தேன்.

"அந்தோ! பொய்கைக் கரையின் பாங்க ரிருக்கும் அக் கொடிமண்டபத்தில், சந்திர காந்தச் சிலையொன்றில், தாமரைக் கொடிகள் பரப்பிய மெல்லணையில், புண்ணிய வுருவினன் புண்டரிகனது உயிரிலா உடலைக் கண்டேன். அவன் இதழ்கள் சிறிது திறந்திருந்தன; பற்களின் பரவிய ஒளியால் முகம் விளர்த்துக் காணப்பட்டது. என் வருகையைக் கபிஞ்சலன் கண்டான்; கைகளை யோச்சிக் கண்ணிலும் மார்பிலும் புடைத்துக்கொண்டு, 'ஓஓஓ!' எனக் கதறிப் புண்டரிகன் உடலைத் தழுவினான். இதைக் கண்ட யான், இடியேறுண்ட மரமென மண்ணிற் சாய்ந்தேன். உயிர்ப்பு அடங்கியது. நான் என்ன செய்தேன், என்ன எண்ணினேன், எங்குச் சென்றேன் என்ற எதுவுமே எனக்குத் தெரியாது. அப்போது, இத்தகைய பெருந் துன்பத்தை அனுபவிக்க வேண்டுமென்பதாலோ, நெஞ்சம் இரும்பினும் கல்லினும் திண்ணிதா யிருந்தமையாலோ, அல்லது யாதாலோ, என்னுயிர் சிறிதும் பிரிந்து போகவில்லை. நான், வெகுநேரஞ் சென்றபின் இழந்த உயிர்ப்பைப் பெற்றேன். பெற்று விழித்துப் பார்க்குமளவில், அனலிலே பட்ட புழுவெனப் பூமியிற் புரண்டு புரண்டு புலம்பிக் கொண் டிருந்தேன். பின்னர், அவன் பக்கலில் எழுந்து சென்று, இவ்வாறு வாய்விட் டலறினேன்: 'ஆ! என் அன்பே! என்னுயிரே! பிரிந்தனையே! ஒரு முறையேனும்

என்னுடன் பேச விரும்பிலையோ? உலக மறியாச் சிறுமியான்! அநியாயங் கண்டாயே! ஆவா! உன்னை யிழந்தேன்! ஒழுக்கம் ஒழிந்தது! சுற்றந் துறந்தேன்! பாகதி தீர்ந்தது! இனி யெனக்கு வீட்டினுற் பயனென்னை? அன்னை யேன்? தந்தை எற்றுக்கு? உறவினரா லென்ன பயன்? பரிசனங்களும் வேண்டுமோ யாழ்த்த வெனக்கு? இறைவா, இரங்காய்! விதியே! திக்கற்ற பெண்ணைக் காத்தருள்!' என்று பலவாறு பேய் கொண்டவளெனப் புலம்பினேன். அருகில் உட்கார்ந்து, மெல்லிய வென் கைகளால் உயிரொழிந்து கிடந்த உடலினைத் தைவந்தேன்.'

'இன்னணம் கூறி வரும்போதே, மகாசுவேதை தான் கண்ணெதிரில் இத்துன்பம் அனுபவிப்பவள் போன்று, நினைவிழந்து, பாறையிற் சாய்ந்தாள். சந்திராபீடன், ஒரு பணிப்பெண்போல அவளைத் தாங்கி மரவுரியால் இளங்காற்று முகத்தில் மெல்லெனத் தவழுமாறு வீசி அறிவு பெறச் செய்தான். பின்னர் அவளைப் பார்த்துச் சந்திராபீடன், 'அன்னையீர், நும் பழைமையான துன்பத்தைப் புதிதாகச் செய்த வென் பிழை பொறுத்தருள் புரிமின்! இனி யிக்கதை போதும். கேட்டுவரும் எனக்கும் ஆறாத் துயரந் தருகின்றது!' என்றதும், மீண்டும் அவள் இங்ஙனம் கூறினள் :

"'இளவரசரே, கணவனை யிழந்து கதறிய வப்பாழும் இரவிலேயே வென்னுயிர் நீங்காது நின்றது? இப்போது, அஃது என்னை விட்டுப் பிரியுமோ? என்னைக் கொடிய கூற்றுவனும் கண்ணெடுத்துப் பாரான். என் செய்வேன்! இந்நிகழ்ச்சிக்குப் பிறகு நேர்ந்ததோர் அருஞ்செயலைக் கேளும் : ஆசையெனும் கானற்சலத்தில் பற்றுவைத்து, பாழுந் தசைச்சுமையை யின்னமும் தாங்குகின்றேன். அதுவே யானுயிர் துறவாமைக்குக் காரணமாகும். பின்னர் யான், எரி மூழ்க எண்ணித் தரளிகையை விளித்து, 'ஆருயிர்ப்பாங்கி, எரி மூட்டு,' என்றேன்.

"யானங்ஙனங் கூறிய அளவில், வெண்பட்டினு னியன்ற பாகை யொன்றினைத் தலையி லணிந்து, வெள்ளிய நிறமும் உயர்ந்த மேனியுமுடைய வொரு மாபுருடன், சந்திர மண்டிலத் திருந்து பொள்ளென விறங்கி வந்து, வெளிறிக் குளிர்ந்த தன புயங்களிற் புண்டரிகனது புண்ணிய வுடலைத் தாங்கி, என்னை நோக்கி, உயர்ந்த குரலால், 'குழந்தாய், மகாசுவேதாய், நீ உயிர் விடல் வேண்டா; மீளவும் இவன் உன்னைச் சேர்வன்,' எனக் கூறி, விசும்பாறாக எழும்பிச் சென்றான். எனக்கு அச்சமும், மகிழ்ச்சியும், நடுக்கமும் ஒருங்கே உண்டாயின. கபிஞ்சலனை, 'இஃதென்னை?' எனக் கேட்டேன். அவன் விடையெதுவும் தந்திலனாய், எழுந்து மிகச் சினந்து, 'அடா! தீயோய்! என் செய்தாய்? என் நண்பனை எங்கெடுத்துப் போகின்றனை?' என உரப்பிக் கூறி, தன்மே லிருந்த சீரையை யிடையிலே வரிந்து கட்டி, அவ்வெள்ளையனைப் பின்பற்றி வானத்தாடு கிளர்ந்து எழுந்து சென்றான். என் கண் முன்னேயே அவரனை வரும் தாரகை மண்டிலத்துப் புகுந்து மறைந்தனர்.

"'புண்டரிகன் உயிரிழந்தான். அவனது நண்பன் அவனைப் பின்பற்றி மறைந்தான். எனக்குத் துயர் பன்மடங் காயது. செய்வதின்னதென்று மறிந்திலேன். என் பாங்கி தரளிகையை என் செய்வதென்று கேட்டேன். அவ்வேழைப் பாங்கி யும் நடுநடுங்கி, வாய்திறவாது நின்றாள்; ஒருவேளை நான் உயிர் துறந்துவிடுவேனோ என்றஞ்சினாள். பின்னர்ப்புழுங்கிய நெஞ்ச மும் வாடிய முகமுமுடைய தரளிகை என்னை நோக்கி, 'அர சிளங்குமரி, இவ்விந்தையால் எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. விண்ணினின்று வந்தவன் தேவாமிசம் பெற்றவன்போலும்! அவன் திரும்பி யேகுகையில், உள்ளங் கனியுமாறு ஆறுதலும் கூறிச் சென்றனன். இஃது கனவும் அன்று; நனவேயாம். நம் மெண்ணம் எளிதிற் கைகூடும். இதில் எட்டுணையும் ஐயமில்லை.

அவன்றன் வாய்மொழியைப் பொய்யெனக் கொள்ளுகிற்போ மெனினும், பொய் பேசுதலால் அவன் பெறும் பெரும்பயன் யாது? ஆதலின், உயிர்விடும் முயற்சி ஒழிக. இதுவே தகுதி யுடைச் செயல். இந்நிலையில் இன்னொன்று பார்: கபிஞ்சலனும் அவனைப் பின்பற்றிச் சென்றிருக்கின்றான். அவன் மீளவும் ஈண்டு வருவான். வந்து, அம்மாபுருடன் எவனென்பதும், அவன் புண்டரிகனை யெடுத்துச் சென்றதன் நிமித்தமும், அவன் நினக்குத் தேற்றரவுகூறிய மொழிகளினுண்மையும் இத் திறத்தன வென மொழிவான். அதன்பின்னர், இரண்டிலொன் றைத் துணிந்து நீ செய்யலாம். கபிஞ்சலன் மீண்டு வருமளா வும் நின்னுயிர் தாங்கி நிற்பாய்,' என என் கால்களில் வீழ்ந்து

"நான் தரளிகையின் மொழிகளாற் கட்டுண்டு, அங்ஙனமே செய்யத் துணிந்தேன். அன்றிரவை நரகத் துன்பந் தரும் அவ் விடத்தே யிருந்து கழித்தேன். வைகறையில் பொய்கையில் இறங்கி நீராடி, இத்தவக் கோலத்தோடு காலங்கழிக்கத் தீர்மா னித்துக்கொண்டேன். புண்டரிகன் கமண்டலத்தை அன்பின் பெருக்கினால் நீரருந்தவும், அவன்றன மரவுரிகளை ஆடையாக வும், மணி மாலையினைக் கழுத்தணியாகவும் கொண்டேன். கொண்டேற்கு, இல்லறந் துன்பந் தருவதெனவும், அன்பின் மிகுதி துன்பின் மூலமெனவும் தோன்றின. தந்தை, தாய், தமர், பணியாளர் முதலியோரைத் துறந்து, நைட்டிகவிரதங்கொண்டு காலம்போக்கத் துணிந்தேன். முக்காலமும் இக்குளத்து மூழ்கு வேன். காய்கிழங்குகளே எனக்கு நல்லுணவு. இடைவிடாமல் ஈண்டு எழுந்தருளியிருக்கும் பசுபதியை நோக்கி, 'என்னைக் காத்தருள்க,' என விரந்து நின்று, தரளிகையுடன் நெடு நாட்களாக இக்குகையில் வதிந்து வருகின்றேன். பிராமண னைக் கொன்ற பாவியாகிய வென் சரிதத்தை அரசகுலத்திற்

பிறந்த நீர் கேட்டதா லடைந்த பயன் என்னை?' எனக் கூறி, மரவுரியாள் முகத்தை மூடிக் கண்ணீர் ஆறாய்ப் பெருக, 'கோ ஒஒஒ!' எனக் கதறி யழுதாள்.

## 8. சந்திராபீடன் எமகூடம் போதல்

'என்று சந்திராபீடன் மகாசுவேதையைக் கண்ணுற்றானோ அன்று முதலே, அவன் அவளது பேரழகாலும், நல்லொழுக்கத்தாலும், அன்புடைமையாலும், அருந்தவத்தினாலும் அவளிடத்தில் பெரியதொரு மதிப்பினைச் செய்து வந்தான். அவளது செய்தியைக் கேட்டறிந்தபின், அவள்பால் அவனுக் கிருந்த அம்மதிப்புப் பன் மடங்கு பெருகியது. அதனாற் சந்திராபீடன், அம்மாதரசியை நோக்கி, 'அன்னையீர், துயர் கண்டு துளங்குவோரும், நன்றி கொன்றாரும், இன்பத்திற் பற்றுள்ளங் கொண்டாருமாய இழிதகை மாந்தர், அன்பின் தன்மையை அறியாது, கண்ணீர் விடுவ தொன்றினாலேயே அன்பின் பெருக்கைக் காட்டுவதுபோல வீணிற் கரைந்தழுகின்றனர். நீவிர் செயல் வகையானே அனைத்தையும் ஆற்றி வருகின்றீர்; அன்பின் தன்மைக்குத் தக்கவாறு நீர் செய்யாத செயலே யில்லை. ஆதலின், நீவிரும் புலம்புவதோ? தோன்றிய நாள்தொட்டு அன்புடன் கலந்து பழகிய சுற்றங்களை யெல்லாம் அயலாரெனக் கருதித் துறந்தீர்; இன்பங்கள் அணிமை யனவா யிருப்பினும், அவை துன்பந் தருவனவென வொழித்தீர்; எவராலும் பெறமுடியாத செல்வமிருந்தும், அதனை யுகரு மின்ப மிழந்தீர்; எழி லொழுகு திருமேனி இளைத்து வாட, ஆற்றுதற் கரிய நைட்டிக நோன்பினைக் கைக்கொண்டீர்; அருந்தவ மாற்றினீர்; அபலையீ ராயினும், பலமுள்ளார் போலக் காடுறை வாழ்க்கையைத் தனியே கொண்டீர்.

“துன்பப் பெருக்கை அடைந்த சிலர், தமது ஆவியை மிக எளிதிற் கழியும்படி மாய்த்துக்கொள்ளுகின்றனர். அவர் தம் பெருமுயற்சி உயிர் பெருந்துன்ப மடைவதற்கே. உடன் கட்டை யேறல் எனுங் கொடிய வழக்கம் பெரிதும் பயனற்ற செயல். கணவன் முதலியோர் துஞ்ச, தாமும் அவருடன் வீழ்ந்து துஞ்சுவது எத்துணை மதியீனம்! தன்னியல்பிற் பிரியாத ஆவியை, முயன்று பிரித்துப் போக்குதல் பெரும்பிழை. இதை நன்னர் ஆராயுமிடத்து, ஆற்றரிய மனத் துன்பத்தைப் பிறிதொரு வகையில் ஆற்றி யிருப்பதற்காகவே இக்கொடுவினை செய்யப்படுகின்றது. ஆதலின், இது தன்னயங் கருதிச் செய்யும் செயலேயாம். இவ்வாறு செய்வதான் இறந்தார்க்கு எட்டுணையும் பயனில்லை. அவர்தமைக் கண்கூடாகப் பார்த்த லுஞ் சாலாது. ஆற்றிய அருவினைகட் கேற்ப, மீட்டும் இம்மண் ணில் நம்முயிர் கொண்டுவந்து சேர்க்கப்படுகின்றது. இவ் வுயிரிடைத் தற்கொலை செய்த பாவமும் விடாது பற்றிக் கொள்ளும். உடலுயிர் விடாது உயிர்த்திருந்தால், இறந்தார்க் குச் செய்யவேண்டுவனவாகிய நீர்க்கடன் முதலியவற்றைச் செய்து நம்மையும் அவரையும் மகிழ்விக்கலாம். தற்கொலை செய்தாரோ, இருவருக்கும் பயனின்றி வீணிற் கழிவர்.

“இனி, நடந்த செய்தியைப் பற்றிச் சில கூறுவேன்: புண்டரீகர் மீண்டு வருவதிற் சிறிதும் ஐயமில்லை. அவ்விஷயம் தேவ புருடனாலும் உமக்குச் சொல்லப்பட்டது. ஆதலின், புண்டரீகர் உயிர்பெற் றெழுவதற்கே தேவலோகம் சென் றிருக்கிறார். விண்ணினின் றிழிந்த பெரியாரின் திருவருளும் இதற்குப் பெருந்துணை செய்யும். இஃதெங்ஙனமென்று தயங்க வேண்டா. இத்தகைய விசித்திர சம்பவங்கள் முன்னையும் நடந்திருக்கின்றன: முன்னர், அருச்சுனன் பரிமேத வேள்விப் பரியைத் தொடர்ந்து போகையில், அவன் புதல்வனான பப்புரு வாகனன் என்பான், அம்புகளை அவன்மேலேவி அவனது

ஆவியை வாங்கிவிட, உலூபி என்ற நாக கன்னிகை மீளவும் அவனைப் பிழைப்பித்தா ளல்லவா? அச்சுவத்தாமன் என் பானது ஆக்கினேயாஸ்திரத்தால் இறந்தவாறே பிறந்த அபி மன்னியுவின் பிள்ளையான பரீட்சித்துவுக்குக் கண்ணபிரான், உத்தரையின் புலம்பொலியைக் கேட்டுத் திருவருள் சுரந்து பெறுதற் கரிய வுயிரையும் அளித்தருளா வில்லையா? ஆதலின், விதி வலிது. நமதிச்சையின்படி உயிர்த்தலுங் கூட முடியாது. ஆதலின், நீவிர் எதுபற்றி உம்மை வெறுத்துக்கொள்கின்றீர்? தைரியம் வேண்டும். தைரிய முள்ளோரே எத்துணைப் பெருந் துன்பத்தையு மெளிதிற் கடப்பர்,' என்று இத்தகைய மொழி களால் மகாசுவேதையைத் தேற்றி, அருவி நீர் கொண்டளித்து, முகங் கழுவுமாறு செய்தான்.

'இவ்வரிய நிகழ்ச்சியைக் கண்ட இரவியும், வாடிய முகத்தினனாய், ஒளி குன்றி, மேலைக் கடலிற் றோய்ந்தனன். மகாசுவேதை அவ்விடம் விட்டெழுந்து, கால் கைகளைச் சுத்தி செய்து, மாலைக் கடன்களை முடித்து, சோகத்தால் நெட்டு யிர்ப் பெறிந்து, மரவுரிப் பாயலின்மீது வந்துட்கார்ந்தாள். அரச குமரனும் எழுந்து சென்று, மாலைக் கடன்கள் முற்றி, மற்றொரு பாறையினைசத் தளிரினான் ஓர் அணை செய்து, அம்மெல்லிய அணையில் உட்கார்ந்துகொண்டு, மகாசு வேதையின் வரலாற்றைப் பல முறை எண்ணுவா னாயினன். அவன் மீட்டும், அவளைநோக்கி, 'மகாசுவேதையீர், நீவிர்கூறிய அத்தாளிகை யெனும் ஆருயிர்ப்பாங்கி யாண்டையள்?' எனக் கேட்டான். பின்னர், அவள் அரச குமரனைப் பார்த்து, 'நல் வினையீர், அமுதத்துப் பிறந்த அரம்பையர் குலமொன் றுண் டென யான் உமக்கு முன்னே கூறினனன்றோ? அம்மரபில் மதிரையெனும் பெயரிய நல்லா ளொருத்தி பிறந்தாள். அக் கட்டழகியைச் சித்திரரதன் எனுங் கந்தருவ ராசன் மணந் தான். அவர்தமக்குக் காதம்பரி எனுமோர் எழிலுடை மாது

தோன்றினாள். அவளும் யானும், குழவிப் பருவந்தொட்டு ஒரு தொட்டிலில் வளர்ந்தோம். அவளே எனக்கு மற்றோர் இதயம். அவளே எனக்கு இன்னுயிர்த் தோழி. இசைக் கலை யனைத்தையும் நாங்கள் ஒரு சாலை மாணவியராகவிருந்து, ஒரு குருவினிடம் கற்றோம். எனக்குநேர்ந்த விப்பெருந்துயரத்தை மனத்தில் எண்ணி, அவளும் கணவனை நாடுங் கருத்திழந்து நிற்கின்றாள். 'ஒரு வேளை, என் கருத்துக்கு மாறாய் என் தந்தையார் மணம் முடிக்கக் கருதுவரேல், உயிரிழப்பேன்,' எனத் தன்தோழியர் முன்னே பல தரம் வஞ்சினம் கூறி யிருக்கின்றனள். இச் செய்தியைச் சித்திரரதனும் அறிவான். இதைக் கேட்டது முதல் சித்திரரதனுக்கு மனத் துயர் பெருகிற்று. காதம்பரியும் மணப்பருவத்தை அடைந்தாள். அவள் மனத்தைமாற்ற அவள் தந்தை செய்த பல சூழ்ச்சிகளும் பயனின்றிக் கழிந்தன. ஒரு நாள் சித்திரரதன், கீரோதன் எனும் கஞ்சுகியினிடம் எனக்குச் செய்தி யொன்று சொல்லி யனுப்பினன். அது,

'மகாசுவேதாய், உன்னுடைய கோலத்தால் ஒருபுறம் பெரிதும் யாங்கள் துன்ப மடைந்துவர, காதம்பரியின் வஞ்சினம் இன்னொரு புறம் எங்களை வருத்துகின்றது. பழித்தும், இழித்தும், புகழ்த்தும், இரந்தும் பல வுரை கூறினம். அவள் வழிக்கு வந்திலள். ஆதலின், நீ இவண் வந்து அவளைத் தேற்றிப் போதல் வேண்டும்.'
என்பது.

''பெரியார் மொழியில் பெரிதும் மதிப்பும், தோழியின் நன்மையிற் கருத்தும் இயல்பாகவே எற்குத் தோன்றி நின்றமையின், அக்காதம்பரிக்கு, 'உயிர்த்தோழி, நான் முன்னமே பெருந்துன்ப மடைந்தவள். அஃது உனக்கு நன்கு தெரியும். ஆக, நீ மேன்மேலும் என்னைத் துயருக்கு ஆளாக்குதல் நீதி யன்று. என் உயிர் நினக்கு அருமையுடைய தெனின், நம் பெரியார் மொழிக்கிணங்கி, அவர்தம் விருப்பம் முற்றுமாறு நடக்க,' என்ற செய்தியை நேரில் மொழிந்து வரும்படி, தரளிகையைக்

கிரோதனுடன் போக்கினேன். அவள் சென்ற சிறிது நேரத்தில், நீவிர் ஈண்டு வந்தீர்,' என்றனள்.

'பின்னர்க் கீழ்த்திசையில் இந்துவும் தோன்றினன். மகாசுவேதை மெல்லென வணையிற் சாய்ந்து துயில்கொண்டாள். அரச குமாரனுக்குத் தன் சேனையைப்பற்றிய கவற்சி அப்போதுதான் தோன்றியது. 'ஆ! இந்நேரம் என்னுருயிர்த் தோழன் வைசம்பாயனன், என் னினைக்கின்றானோ! பேதைப் பத்திரலேகை என் செய்கின்றனளோ! மற்ற அரச குமாரர் என்னுயினரோ!' என எண்ணிக்கொண்டே அணையிற் சாய்ந்து அருந்துயில் கொண்டனன்.

'பொழுது விடிந்ததும், மகாசுவேதை தன் படுக்கைவிட்டெழுந்து, அருவி நீராடிக் காலையிற் செய்யும் அனுட்டானங்களை முற்றித் தனியே யொரு பாறையின்மிசை யிருந்து, அலையா நெஞ்சினளாய், பாவமொழிக்கும் புனித மந்திரங்களை யோதிக் கொண்டிருந்தாள். சந்திராபீடனும், துயினீங்கித் தன் தெய்வம் வாழ்த்தி, இந்திராயுதத்தி னருகு சென்று, அதன் முதுகில் மெல்லெனப் புடைத்துத் தைவந்து, அதனைப் பொய்கையின் மேயுமா விடுத்து, நானமாடிக் கடன் முற்றிச் சிலா தலமிசை யிருந்து, மகாசுவேதை வரவு நோக்கினன். ஆண்டுத் தரளிகை யெனுந் தோழியும் ஏமகூடமிருந்து வந்து சேர்ந்தனள். அவளோடு செவ்விய மேனியன், வெள்ளிய யாக்கையன், உயரிய தோற்றத்தினன், பதினாறிட்டைப் பிராயத்தினன், ஒரு கந்தருவத் தோன்றலும் வந்தான். வந்த அவ்விருவரும், சந்திராபீடனது அந்தமில்லழகை அள்ளிப் பருகினர். பருகி, மகாசுவேதையின் பாங்கர்ச் சென்று, வந்தனை வழிபாடு முற்றி, தரளிகை தரையிலும், கந்தருவன் கற்பாறையிலுமாக இருந்தனர்.

'மகாசுவேதை தனது செபத்தை முடித்துக்கொண்டு எதிரிருக்கும் தரளிகையை நோக்கி, 'தரளிகாய், காதம்பரி

சுகமோ? நான் சொல்லியனுப்பிய செய்தியின்படி நடக்கத் துணிந்தனளோ?' என்று கேட்டனள். தாளிகை சிறிது தலை வணங்கி, 'இறைவி, நின்தோழி காதம்பரியைக் கண்டேன். அவள் நீதிலள். என் வாயிலாக நீ போக்கிய செய்தியினைச் சொன்னேன். அவற்றைக் கேட்டதும், அவள் கயற்கண்ணீரைப் பலபலவென வுதிர்த்து, மொழிந்த சில மறுமாற்றங்களை அவளது யாழ் தாங்கும் கேயூரகன் உனக்குக் கூறுவான்,' என்றாள்.

'பின்னர்க் கேயூரகன் மகாசுவேதையை நோக்கி, 'மங்கையர் திலகமே, காதம்பரியார் தங்கள் திருமுன் இவ்விஷயங்களைத் தெரிவிக்கின்றார்:' என்று கூறிப் பின் கூறுமாறு சாற்றினன்: 'தாளிகை வாயிலாகப் போக்கிய செய்தி யென்னைப் பரிகசிக்கும் தன்மையுடையது. அங்ஙன மல்லாக்கால், அஃது என் தவற்றைச் சுட்டிக் காட்டும் வஞ்சப் புகழ்ச்சியே யாகும். உன் மீது இயற்கை யன்புகொண்ட என்னிதயத்தை நீ நன்கறிவை. இன்சொற் பேச மியல்புடைய நீ, இங்ஙனம் வன்சொற் கூற எவரை யடுத்துக் கற்றனை? என்னுருயிர்ப் பாங்கியாய நீ, காதலனை யிழந்து சோகக் கனலிடை நின்று, உடல் வாடி யருந்தவ மாற்றுகின்றனை. யான் மாத்திரம், இன்பக் கருத்துடன், நாயக னொருவனை நாடி மணஞ் செய்துகொள்வது தலெங்ஙனம்? நின்னைக் கை கூப்பி வணங்குகின்றேன். எனதுயிருடன் நீ காட்டிற் சென்றிருக்கின்றனை. ஆதலின், கனவிலும் இக் கருத்து உனக்கு வேண்டா.'

'இங்ஙனங் கேயூரகன் கூறிய காதம்பரியின் மொழிகளைக் கேட்ட மகாசுவேதை நெடுநேரம் ஏதேதோ எண்ணி, 'நான் நேரிற் காதம்பரியைக் கண்டு பேசி அதற்குத் தக்கபடி ஏற்பாடு செய்கின்றேன்; நீ போகலாம்,' எனக் கேயூரகனை விடுத்தாள்.

'பின்னர், மகாசுவேதை சந்திராபீடனை நோக்கி, 'தோன்றல், ஏமகூட மென்பது பேரெழில் வாய்ந்ததொரு நகரம்.

உமக்கு அஃது எவ்வகையினும் மகிழ்ச்சி விளைக்கும். அங்குள்ள கந்தருவர் மிக்க அழகினர். காதம்பரியோ, ஈறிலா வழகும், இளமையும், இன்மொழியும், நல்லிதயமு முடையள். சித்திரரதன் தலை நகரையும், கிம்புருடர்களையும் பார்த்து மகிழ வேண்டுமென்று நும்மனம் விரும்புமாயின், அங்கு வருவதால் அரச காரியங்கள் தடைபடா வாயின், இதுவரை நீர் எங்கும் கண்டிலாத காட்சிகளைக் காண விரும்புவீராயின், நீர் என்னுடன் ஏமகூடம் வரவேண்டும். எனது வேண்டுகோளை மறாதிர். ஏமகூடத்துக் கென்னுடன் வந்து, என்னினும் சிறிதும் வேறுபாடில்லாக் காதம்பரியைக் கண்டு, அவள் மனத்துக் குடிகொண்டிருக்கும் அறியாமையெனும் நிறையிரு ளகற்றி, ஒரு பகல் அங்குத் தங்கிப் பின்னர்த் திரும்பி விடலாம்.

' 'நீவிர் எனக்குக் காரண மில்லாமலே சுற்றமாயினீர். உம்மைக் கண்டது முதல், நீண்ட காலமாக என் மனத்திலிருந்த துயர்ப் பெருக்கெல்லாம் ஒழிந்துவிட்டது. என் செய்திகளை உமக்கு வாய்விட்டுக் கூறிய தன்மையால், என் உள்ளம் அமைதி எய்திற்று. ஆதலின், எனதிந்த வேண்டுகோளை மறாது, என்னுடன் புறப்பட்டு நீர் வரவேண்டும்,' என்றாள்.

' சந்திராபீடன், ' அன்னையீர், நான் உம்மைக் கண்டது முதல் உமக்கு அடிமையாய் விட்டேன். ஆதலின், நுமது ஆணைப்படி நான் நடப்பேன்,' எனக் கூறி எழுந்து, மகாசுவேதையுடன் ஏமகூடஞ் செல்லப் புறப்பட்டான்.

' சிறிது நேரத்தில் இருவரும் ஏமகூடம் வந்து சேர்ந்தனர்; கந்தருவ மன்னனது பொன் மயமான தோரணவாயில்களையும், மற்ற வாயில்களையும் முறையே கடந்து காதம்பரியின் கன்னிமாடம் வந்தடைந்தனர். மகாசுவேதை வரக்கண்ட வாயிற் காக்கும் பணிப்பெண்கள், 'அம்மையீர், வருக! எம் இறைவி

யீர், வருக !'' என வழி காட்டிச் சென்றனர். காதம்பரியின் கோயிலும் கிட்டியது. அதன் வாயிலில், கதிரொளி காலும் காரிகையர் கணக்கிலர் காணப்பட்டனர். உள்ளே புகுந்து பார்க்குமளவில், கண்டவர் கண்ணையும் மனத்தையும் பிணிக்கு மியல்பினதான ஸ்ரீமண்டபம் என்னும் இடம் காணப்பட்டது. அதன் நாப்பண் ஆயிரவர் மகளிர் புடை சூழ்ந்து நிற்க, நீல நிற விதானத்துடன் ஒரு சிறு மஞ்சம் தோன்றியது. அதில் வெண்பட்டினுனியன்ற தலையணைமிசைச் சாய்ந்துகொண்டிருந் தனள் காதம்பரி யெனுங் கந்தருவப் பெண்களின் திலகம். ஆண்டுள்ள மணிகள் குயிற்றிய தூண்களிலும், சுவர்களிலும் காதம்பரியின் உருவமே காணப்பட்டுச் சித்திரக் காதம்பரிக்கும் சித்திராதக் காதம்பரிக்கும் வேற்றுமை தெரிவது மிகவரிதா யிற்று. அவளருகில் கேயூரகன் இருந்து, சந்திராபீடனுடைய எழினலங்களை வியந்து, மகாசுவேதையுடன் அவன் கிள்ளா நட்புப் பூண்ட தன்மையையும் கூறிக்கொண்டிருந்தான்.

'மாசறு மதியென நிலவும் தேசுறு காதம்பரியின் நன் முகங் கண்டான் சந்திராபீடன். அவன் மனம், இந்துவின் கதிர்கண்டு மேன்மேலு முற்றெழுந்து வான்கரை கடந்தேறும் சிந்துவின் அலைகளென அலைந்தது. இவள் போன்றதொரு வடிவைச் சந்திராபீடன் என்றுங் கண்டிலன். என் செய் வான் ! காதம்பரியும் அரச குமரனைக் கண்டாள். கந்தருவமா தெனினும், அவனைக் கண்டவளவில் அவள் திகைத்துப் போயி னள். 'கேயூரகன் கூறிய வடிவம் இதுவேயாதல் வேண்டும் !'' என மனத்தெண்ணினள். நெடுநேரம், சிறிதும் இமைப்பின் றிச் சந்திராபீடனைப் பார்த்தாள். அண்ணலும் அவளை யன்ன னமே நோக்கினன்.

'மகாசுவேதை தன் பக்கத்தில் வரவும், காதம்பரி பொருக் கெனத் தன்னிருக்கைவிட் டெழுந்து, கெழீஇ தன்னைப்

பிரிந்திருந்த உயிர்த் தோழியை மார்பு நெருங்கப் புல்லினள்.
பின்னர், மகாசுவேதை தன் பாங்கியைப் பார்த்து, 'காதம்பரி,
பாரத வருடத்தில் தாராபீடர் எனப் பெயர் கொண்ட
மன்னவரொருவருளர். அவர்க்குச் சந்திராபீடர் என்னும்
பெயர் கொண்ட மைந்தர் ஒருவர் உண்டு. அவரே யிவர்.
இவர் உலம்பொரு தோள்களின் வலியால் உலகி னுறுதுயர்
களைந்தோர். திக்கு விசயம் செயக் கருதிப் புறப்பட்டு எல்லா
அரசர்களையும் வென்று தம்மடிப்படுத்தி, இறுதியில் என்னி
டம் வந்தவர். இவரை நான் என்று கண்டேனோ அன்றமுதல்
காரணமின்றியே இவர் என் சுற்றத்தினராயினர்; கலைகளின்
இருப்பிடமானவர்; கண்ணோட்டமுடையவர்; இகல்வெல்லும்
எழுவுறழ் தடந்தோளர்; வஞ்சமில்லா நெஞ்சினர். இன்ன தன்
மையரான மாபுருடரை உலகிற் காண்டல் அரிதினு மரிது!
அயனார்தம் படைப்பில் இத்துணை அழகை நான் என்றும்
எங்குங் கண்டதில்லை! இவர் குணனும் திருவும் நிறைந்தவர்.
இவரது பிறப்பினால், நானிலமும் மேனிலமும் மேன்மையுற்
றன. நான் இவரை அறிந்தது போலவே நீயும் அறிதல்வேண்டு
மென, யானே வலிய அழைத்து வந்தேன். இன்னுயிர்ப் பாங்கி,
நின்னியல்பனைத்தும் முன்னரே இவ்விளைஞர்பால் வருத்
துக் கூறி யிருக்கின்றேன். இவர் நொதுமலாளர் என்ற நாணம்
நீங்கி, என்னிடம்போலவே, இவரிடமும் நீ நடந்துகொள்ள
லாம்,' என்று கூறினள்.

'மகாசுவேதை இங்ஙனம் கூறி முடித்ததும், சந்திரா
பீடன் காதம்பரிக்கு வந்தனம் செய்தான். காதம்பரியும்,
முதிர்ந்த அன்பினால் சேர்ந்த மனக் குழப்பத்தாலும், நாணத்
தாலும் அவனைப் பணிந்து, மகாசுவேதையுடன் தனதிருக்கையி
லிருந்தாள். குறிப்பறிதலில் வல்ல பணிப்பெண்களி லொருத்தி,
பொன்னினா லியன்றதோர் இருக்கையைப் பொருக்கென

வோடிக் கொணர்ந்து இளவரசற்கிட, அவனும் மதன்மிசை யிருந்தான்.

'மகாசுவேதையின் உட்கருத்தைக் குறிப்பினு னறிந்த காதம்பரி, சிலதிப் பெண்டிரைத் திருமி ஒருமுறை நோக்கலும், அவரெல்லாரும் தத்தம் வாய்பொத்தி, ஒலியடக்குங் குறி காட்டினர். காட்டியதும், திங்குழ லோசை தீர்ந்தது ; யாழினது இன்னொலி நின்றது ; கண்டப் பாடன் மங்கைய ரொலி ஒய்ந்தது ; வாழ்த்தொலி கூறும் வனப்புடை மங்கையரும் ஒய்ந்தனர். பின்னர்க் காதம்பரி, உழையர் கொணர்ந்த நன்னீரால் மகாசுவேதையின் திருவடிகளை மண்ணி, தன் மேலாடையின் தலைப்பாற் றுடைத்து, மஞ்சமிசை யிருந்தனள். இருந்ததும், காதம்பரியின் இன்னுயிர்ப் பாங்கியாய மதலேகை யெனும் மாண்புறு மாதராள் தண்ணீர்கொண்டு தோன்றலின் திருவடிகளை யலம்பினள். மகாசுவேதை, தன் தோழியின் தோண்மிசை மென்கரம் வைத்து, சேமம் விசாரித்தனள். தனது பாங்கி தனியே யிருந்து தவமியற்றுவதன் நிமித்தம் துயருழப்பதையும், தான் கன்னி மாடத்தில் இன்பம் நுகர்வதையும் மனத்தில் நினைத்துத் தனது சேமச் செய்தியை அரிதி லியம்பினள். சிறிது நேரங் கழித்துக் காதம்பரி, தன் தோழியாய மகாசுவேதைக்குத் தாம்பூலத்தை எடுத்துக் கொடுக்க முயன்றாள். அது கண்ட மகாசுவேதை, தோழியைப் பார்த்து, 'காதம்பரி, புதியராக வந்தோரையே முன்னர் உபசரிக்கவேண்டும். ஆதலின், இதைச் சந்திராபீடர்க்கு முன்னர்க் கொடு,' என்றாள். இதைக்கேட்ட காதம்பரி, நாணத்தால் தலைகுனிந்தாள். அவள் உடலம் வியர்த்தது. அவள் குனித்த முகத்துடன், மகாசுவேதையை நோக்கி, சிறிதும் பழகி யறியாத வாலிபர்க்கு நானே தாம்பூலங் கொடுப்பதென்றால் அது பெரிதும் எனக்கு நாணத்தைத் தருகின்றது. அன்றியும், என் மனமும் துணிய வில்லை. ஆதலின், நீயே அவருக்குக் கொடுத்துவிடு,' என்றாள்.

எனினும், மகாசுவேதை, 'நீயே கொடுக்கவேண்டும்,' என்று பல தாமும் வற்புறுத்தியதன்மேல், காதம்பரி தனது தோழியின் வேண்டுகோளை மறுத்தற்கஞ்சி, தாம்பூலத்தைக் கையிற் கொண்டு, மகாசுவேதையை நோக்கியவாறே சந்திராபீடனெ திரே தன் கையை நீட்டினாள். அவனும், மிக்க நாணத்துடன் கை நீட்டி வெள்ளிலையைப் பெற்றுக்கொண்டான். பின்னர் மகிழ்ந்த மனத்துடன் மகாசுவேதையும் தாம்பூலம் பெற்றனள்.

' இத்தருணத்தில், கஞ்சுகியொருவன் கடுகிவந்து, காதம்பரியை வணங்கிப் பின்னர் மகாசுவேதையைக் கை தொழுது, ' அன்னையீர், மகாசுவேதையீர், வாழிய! வேந்தர் பெருந்தகையார் சித்திராதரும், கோப்பெருந்தேவியார் மதிரையாரும் நும்மைக் காணப் பெரிதும் விழைகின்றனர்,' என்றனன். அவர்தமைக் காண வங்குநின்று மெழுந்து போக வெண்ணிய மகாசுவேதை காதம்பரியைப் பார்த்து, 'நங்கையர் திலகமே, நான் மீண்டுவருமளவும் சந்திராபீடர் எங்கிருக்கலாம்? ' என்று கேட்டனள். அதைக் கேட்ட காதம்பரி, நிலனுறு பார்வையுடன் இளநகை யரும்பி, ' மகாசுவேதாய், மறுவில்லாய், நன்று கூறினை! என் கண்கள் எப்பொழுது இளவரசர் முகமலரிற் பதிந்தனவோ, அப்பொழுதே யென்னுடற்குத் தலைவராயினார் அவர். மற்றவைகட்குக் கேட்பதெவன்? அவரது மனம் எங்கிருக்க நினைக்கின்றதோ, அங்கு அவர் இருக்கலாம். அன்றி, நீ கூறும் இடத்திலும் அவரிருப்பதில் எனக்கு விருப்பமே,' என்றனள். உடனே, மகாசுவேதை, காதம்பரியின் கன்னிமாடத்தருகிலுள்ள உய்யானத்தில், ஒரு செய்குன்றினுச்சியில் நின்று நிலவும் மணி மாளிகை யொன்றில் சந்திராபீடனை இருக்கப் பணித்து, அரசனைக் காணச் சென்றனள். இளவரசனும் எழுந்து அவளைப் பின் தொடர்ந்தான். உடனே, கேயூரகன் முன்னே வழி காட்டிச் சென்றான். சதிரிள மங்கையர் வீணையை மீட்டிக் கிதம்பாடி இரு மருங்கரும் சென்றனர். சில

மகளிர் வேய்ங்குழ லென்னும் தீங்குழ லிசைத்து முன்
சென்றனர். சிலர், பெரியார் முதுமொழிகளையும் அறவுரை
களையும் இயம்பிச் சென்றனர். இன்னணம் இளந்தோன்றல்
சந்திராபீடன் மணி மாளிகையை யடைந்தான்.

'காதம்பரி, தனக்கு இன்றியமையாத சில பாங்கியரையும்
பணிப்பெண்களையுமே உடனழைத்துத் தன் மாடத்துப்பாச்
சென்றனள்; சென்று, ஆங்கொரு மெல்லணையில் தற்போத
மிழந்தவளாய்ச் சாய்ந்து கிடந்தனள்; இதைக் கண்ட உழை
யர், பாங்கர்ச் சென்று தேற்றத் தேறினள். பின்னர்த் தனக்
குள் தானே, தன் மனம் குழப்ப மடைந்ததைப் பற்றிப் பல
வாறு எண்ணி நாணங் கொண்டாள். 'என்னே யிது! நான்
பேராசையால் பிடிபட்டேன். முன் பின் அறியாது காரியங்
களைச் செய்கிறேன். இந்த இளவரசரை இதுவரை யான்
கண்டதில்லை. மனம் எத்தன்மையதோ! ஒருவேளை நான்
எண்ணிய எண்ணம் நிறைவேறாது ஒழியின், வருந்தி உயி
ரிழக்க நேருமே! நான் தலையன்பு செய்தேனென்று தந்தைய
ரறியின் என்னினைப்பாரோ! இளவரசரை என் கண்கள்
கண்டன. கண்டவும், என்மனம் மகாசுவேதையின் துன்ப
த்தை மறந்தது. நேற்றுங்கூடக் கேயூரகன் மூலம் அந்தகைய
மொழிகளைக் கூறிவிட்டேன். இன்று நடந்த செய்கையோ,
விபரீதம். 'வேண்டா,' என்று வெறுக்கவோ இடமில்லை. நான்
எப்படி மகாசுவேதையின் முகத்தில் விழிப்பேன்? முன்னர்ப்
பேசினதொன்று! பின்னர்ச் செய்ததொன்று! என் பேதிய
ஒழுக்கத்தைக் கண்ட ஊரார் நகைப்பரே! 'வஞ்சினம் பொய்த்
தாள் காதம்பரி!' என் றேசுவரே! என் செய்வேன்? ஐம்புலக்
கள்வர் என்னிடத் தியற்றிய கொடுமையை என்னென்று
கூறுவது? ஓ! பாழுந் தெய்வம், என்னை வஞ்சிக்கவே சந்திரா
பீடனை இங்கனுப்பியது. அவரும் ஒரு பெருங்கொள்ளைக்
காரர்போல என்னுள்ளத்தைப் பகற் பொழுதிலே, பலரறிக்

கும்போதே கொள்ளை கொண்டார். இப்பொல்லாக் கள்வை எவரை யடுத்து அவர் கற்ருரோ அறியேன்!' என்று பலவாருகத் தனக்குள்ளேயே எண்ணமிட்டுக்கொண் டிருந்தனள்; பல வடக் கயிறுகள் கொண்டு மீறியோடும் மனத்தைக் கட்ட முயன்றனள். எனினும், அது காதம்பரியைச் சாளரத் தருகில் இழுத்துப்போய் விட்டது. அவள் தன்னை யறியாமல் அங்கேயே நின்றுகொண்டு செய்குன்றையே நோக்கியவண்ண மிருந்தாள்.

'மணிமாளிகைசென்ற சந்திராபீடன், காதம்பரியைப்பற்றிப் பலவாருக எண்ணினுன். அவளுடைய மொழி, இளநகை, குறைவிலா அழகு, மரியாதை முதலியவைகள் அவனை அவசமாகச் செய்தன. பின்னர் அவன் ஒருவாறு தேறி, 'இல்லை! இல்லை! எனது வீணை எண்ணம் இத்தகைய தோற்றங்களை வருவிக்கின்றது. இதனைப்பற்றிய கவற்சி எனக்கேன்? பழுக்கக்காய்ந்த இரும்புத் துண்டுகளே, ஒன்ருேடொன்று ஒன்றாந் தன்மையைப் பெறும்; காயாவிடத்துக் கருமான் கருங்கை நலியும். அதுவேபோல், எனது நினைவும் அவளது கருத்தும், இரண்டும் சிறிதுங் குறையாது ஒன்ருகவே யிருந்தால், இறைவனெனுங் கருங்கைக் கொல்லனதுசெயலன்ரே அவற்றை ஈடேறச்செய்வது?' என் றெண்ணிப் பணிமகளிர் சில்லோருடன், சிலநேரம் இசைவாரியிற் படிந்து, பின்னர், அம்மாளிகையை யடுத்துள்ள உய்யானத்துச் சென்று, அதன் அழகைத் தனக்குள்ளே பலவாறு வியந் தின்ப முற்றனன். அங்கிருந்து புறப்பட்டு அச்செய்குன்றத்தின் உச்சியினின்று, இயற்கையின் எழிலையும், இறைவன் மாண்பையும் எண்ணி யெண்ணி யின்பத்திற் றிளைத்து நின்ருன். இதைக் காதம்பரி கண்டாள். சந்திராபீடனும் மாளிகை மீமிசைத் தன பாங்கிமாருடன் உலவும் காதம்பரியைக் கண்டான். அரசனைக் காணுபு சென்ற மகாசுவேதையும் திரும்பிவர, காதம்பரி மாளிகையினின்று மிழிந்து கன்

ணென்று நாடக் கையொன்று செய்யக் கருத்தொன் றன்னத் தன் இன்னுயிர்ப் பாங்கி மகாசுவேதையோடு நீராடல் முதலிய பணிகளை முற்றினள். இளவரசனும், அச்செய் குன்றத்தி லேயே தன் கடன்களை முற்றி நின்றான்.

'அக்கிரீடா சைலத்தின் முன்னே, மனங் கவர் வனப் பமைந்த மரகதப் பாறை யொன்றன்மிசைச் சந்திராபீடன் வந்து இருந்தான். சிறிதுநேரம் சென்றது. நாற்புறமும் பரவிய ஏதோ ஒளியொன்று தன்னை நோக்கி வருவதைக் கண்டான்; பின்னர், அஃதொரு மகளிர் குழுவாதல் வேண்டுமெனா நன்னர் அறிந்தான். இரு புடைகளிலும் கவரி யிரட்ட, மதலேகை யெனும் காதம்பரியின் பாங்கி, வாயிற் காக்கும் பெண்ணின் கைகளைப் பற்றிவர, அவள், சாந்தக் குழம்பு, வண்ணம், சுண் ணம், பனிநீர் முதலியவற்றைத் தட்டொன்றிற் கொண்டு தளர் நடையுடன்வர, அரவுரியன்ன மென்மையும் வெண்மையும் உடைய வெண்பட்டுடைகளோ ரிரண்டைக் கேயூரகன் எடுத்து வர, பின்னால் தமாலிகை என்னு மிளமாது மல்லிகைப் பிணை யல்களைக் கையேந்திவர, இவர்தமக் கிடையில் தாரளிகை, தாரகையெல்லாம் ஓரிடத்துத் தோன்றினவென ஒளிவிடும் முத்துமாலைக ளிரண்டைக் கையகத் தேந்தி வந்துகொண் டிருந் தாள். இம்முத்துக்களின் ஒளியையே முன்னர்ச் சந்திராபீடன் கண்டான். உடனே சந்திராபீடன் எழுந்து, மதலேகையை இன்முகங் காட்டி அன்புடன் வரவேற்றனன். மதலேகை மரகதப் பாறையின்மிசைச் சிறிது நேரமிருந்து தான் கொண்டு வந்த பொருள்களையெல்லாம் பெருமைப்படுத்த வேண்டு மென்று சந்திராபீடனை வேண்டிக்கொண்டாள். சந்திரா பீடன், சாந்தம் பூசி, பனிநீர் தெளித்த மாலை யணிந்து, பாலாழி முகந்தன்ன பட்டுடைகளையும் உடுத்துக்கொண்டான்.

'மதலேகை தன் கையில் அம்முத்து வடங்களை ஏந்திக் கொண்டு, சந்திராபீடனை நோக்கி, 'செம்மலே, நீர் யானெனும்

தருக்கில்லாதவர்; இளமையும் எழிலும் நிறைந்தவர் ; அடலும் ஆண்மையும் மிகுந்தவர். உம்மைக் கண்ட எவரும் தலையன்பு செய்வர். நீர் பணிவுடைமை என்னும் அருங்குணத்தை அணியாகக் கொண்டீர். உலகெலாம் அடிப்படுத்திய நும்மிடை இவ்வருங்குணம் காணப்படுவதால், எவரும் உம்மைப் போற்றுகின்றனர். நீவிர் இங்கு எழுந்தருளியபின், கந்தருவரது மனத்தையெல்லாம் கொள்ளைகொண்டீர். அவர், பெரும்பேறு பெற்றோரெனத் தம்மை யெண்ணுகின்றனர். எனது தேவியாகிய காதம்பரியும், இவ்விஷயத்தில், நுமக்குத் தன் தலையன்பைத் தெரிவிக்கின்றாளல்லது, அவள்தன் செல்வப் பெருக்கைக் காட்டுகின்றாள் அல்லள். திருவோ, ஒருவருக்கு உரிமைப்பட்டு நிற்பதில்லை. அஃது என்றும் பிறர்பொருள். நும்போன்ற பெரியாரிடத்து, ஓர் அடிமையாகவேனு மிருந்து பணிவிடை செய்தற்குப் பல காலம் தவமியற்றவேண்டும். காதம்பரி தன் உடலையுங்கட்கே உரிமை செய்தாள். அதனால், அவள் எண்ணம் ஈடேறுவதன்றி, வீணாகாது என்பது என் துணிவு. மேன்மக்கட்குப் பெருந்தன்மையென்பது பிறவியிலேயே வாய்த்ததோரருங்குணம். ஆதலின், தம்மிடம் அன்பு செய்தவர்களை என்றும் அவர் புறக்கணியார்.

'குரிசிலே, இதோ பாரும்: இஃதொரு முத்து வடம். அமுதங் கடைந்த அந்நாள், உயர்ந்த பொருள்களனைத்தையும் பிறர்க்குக் கொடுத்து, இதை மாத்திரம் கடல் தன்னிடத்து நிறுத்திக்கொண்டது. ஆதலின், இது சேடன் என்னும் அரும்பெயர் பெற்றது. நதிபதியால் வருணற்குப் பரிசிலாக முதலில் அளிக்கப்பட்டுப் பின்னர், அவ்வருணனால் கந்தருவ மன்னர்க்குக் கொடுக்கப்பட்டது. காதம்பரி, இதைத் தன் தந்தையாரிடமிருந்து பெற்றாள். இம்முத்து வடம் அணியத் தங்கள் மேனியே ஏற்றதென்று, அவள் என்மூலமாக உமக்கு இதனை அனுப்பினாள். நீவிர், உயர் குணங்களையே நல்லணி யெனக்

கொண்டாராதலின், இது போன்ற அணி உமக் கென்செய்யும்? எனினும், காதம்பரியின் அன்பு நிறைவேறுதற்கு இதை நீவிர் அணிதல் வேண்டும். இந்த அருங்கலனை அணிவது, உமது நன்மதிப்பைக் காதம்பரி பெற்றாள் என்பதற்கு அறிகுறி. உமது அன்பைப் பெறக் காதம்பரி தகுதி யற்றவள் என்பது மில்லை. மகாசுவேதையும், இதை முற்றிலும் விரும்பி நிற்கின்ற னள். காதம்பரி தேவியால் முதன் முதலில் தங்கள் திறத் துக் காட்டப்படும் இத்தலையன்பை, நீவிர் எனைத்தானும் பய னில்லாததாகச் செய்தல் கூடாது,' என்று சொல்லி, அம் முத்து வடத்தைச் சந்திராபீடனது அகன்று பரந்த கல்லியன் மார்பில் அணிந்தாள்.

'மாலையைப் பெற்ற மன்னன் மைந்தன், இறும்பூதெய்தி, அவளை நோக்கி, 'மதலேகாய், என் சொல்வேன் யான்! நின் ஆற்றல் கணிப்பரிது. பிறர் மனங் கொள்ளுந் தன்மையில், பொருள் பொதிந்த கட்டுரைகளைக் கூறும் வன்மை நினக்கன்றி வேறு எவர்க்கும் இல்லை. நின் உரைகளிலிருந்து மறுமொழி கூற எனக்கிடமில்லை யெனினும், ஒன்று கூறுவன்; கேள்: நீவிர் அளிக்கும் ஒரு பொருளைப் பெறவும், அன்றிப் பெறா திருக்கவும் உரிமை எனக்கேது? அவ்வுரிமை என்னிடமிருந்து கழிந்து நெடுநேரம் ஆயிற்றே! நுமக்கு யான் ஆட்பட்டேன். நீவிர் கந்தருவர்; எல்லா வகையானும் மனிதரினும் மேம்பா டடைந்தவர். விரும்பியாங்கு, எக்காரியத்தினும் என்னை நீவிர் ஏவலாம். காதம்பரியின் உயர் குணங்கள், எவரைத்தான் அடிமை செய்யா?' என்று மறுமொழி கூறினன். பின்னர் மதலேகையும் அவ்விடம் விட்டு நீங்கினள்.

'கதிரவன் மேற்றிசைக் கடலில் மூழ்கினன். மாலைக்காலம் வந்துற்றது. காதம்பரி, சந்திராபீடனைக் காணச் சில பணிப் பெண்களுடன் புறப்பட்டு, மணி மாளிகை நோக்கி மெல்ல மெல்ல வந்துகொண் டிருந்தாள். கீழ்த் திசையில் தண்மதியும்

உதித்தது. சிறிது நேரத்துக் கெல்லாம், கேயூரகன் காதம்பரி யின் வருகையைச் சந்திராபீடற் குணர்த்தினன். அரசிளங் குமரனும், பொருக்கென வெழுந்து காதம்பரியை வரவேற்ற னன். அவள் அரச சின்னங்களை யெல்லாம் நீக்கி, ஏகாவளி என்ற ஒரே முத்து வடம் பூண்டு, மதலேகையின் கையைப் பற்றிக்கொண்டு, அரசிளங் குமரனுக்கு முன்னுள் வெறுந் தரையில் உட்கார்ந்தனள். இது கண்ட தோன்றலும், மத லேகை, 'வேண்டா,' என்று தடுத்துக் கூறியும் கேளானாய்த் தானுந் தரையின்மீதே அமர்ந்தனன். பாங்கியரும், தரையின் மீது மெல்ல விருந்தனர்.

'சந்திராபீடன், காதம்பரியை நோக்கி, 'யாழிடைப் பிறவா இசையே, நின்னால் யான் வரம்பை மீறிப் பெருமை செயப்பட் டேன் காண். அதைப் பெற்றுக்கொள்ள எனக்குச் சிறிதும் தகுதி யில்லை. உன் அருங்குணங்களும், அன்பும் என்னை அடிமை கொண்டன. யானும், என்னுயிரும், ஐம்புலன்க ளும், உனக்கு ஆட்பட்டிருப்பதால், நீ அவற்றை எவ்வழியா னும் ஏவல் கொளலாம்,' என்றான்.

'இதைக் கேட்ட மதலேகை, சந்திராபீடனை மறுத்து, 'அரசிளங் குமரரே, என்ன சொற் கூறினீர்? உம்மை இவ் வளவு இழிவு படுத்திக் கூறின், காதம்பரியின் மனம் துன் பத்தை அடையாதா? இவற்றா லென்ன பயன்? இந்தச் சொற் களை நீவிர் கூறுமுன்னமே, நீவிர் கூறிய மொழிகளின் உட் பொருளைக் காதம்பரி நன்கறிந்தவள். மீட்டும் மீட்டும் நீவிர் இச்சொற்களைக் கூறின், அவள் மனம் ஐயுற்று ஊசலாடத் தொடங்கும்,' என்றனள். பின்னர்க் காதம்பரி சந்திராபீட னிடமிருந்து, தாராபீடனது பெருமையையும், உச்சயினி, பாரத வருடம் முதலியவற்றின் சிறப்புக்களையும் அறிந்து கொண்டாள். இவ்வண்ணம் நெடுநேரம் பேசிக்கொண்டிருந்து, கேயூரகன் முதலான சில பணியாளர்களை அவ்விடமே யிருக்

கப் பணித்துக் காதம்பரி, தன் பாங்கிகளுடன் சூளிகை யேறி, ஆங்கு வெண்பட்டிறு னியன்றதொரு மஞ்சத்திற் படுத்தாள். சந்திராபீடனும், கேயூரகன் அடிவருடப் படுக்கையிற் படுத்துக் காதம்பரியின் அன்பு, மாசுவேதையின் மறுவற்ற குணங்கள், கந்தருவ உலகின் செழுமை முதலியவற்றை மனத்தில் எண்ணியவாறே துயில்கொண்டு, இரவைக் கழித்தான்.

'மறுநாள் சந்திராபீடன் வைகறையி லெழுந்து, காலைக் கடன்களை முடித்த பின்னர், காதம்பரி தூக்கம் நீங்கினளா வெனப் பார்த்துவரக் கேயூரகனை யனுப்ப, அவன் அங்கே சென்று பார்த்துத் திரும்பி வந்து, 'அரசரே, தேவியார் துயி லெழுந்து, காதம்பரி மந்திரம் எனும் மாடத்து முற்றத்தின்கண் மகாசுவேதையாரோடு வீற்றிருக்கின்றனர்,' என மொழிந்தான். சந்திராபீடனும் பொருக்கென எழுந்து ஆங்குச் சென்றான். அப்போது அங்கே, பல தாபதப் பெண்கள் மகாசுவேதை உபசரித்து நின்றாள். இன்னரார் பின்னிருந்து வேய்ங்குழலை இனிது இசைத்தனர். வேறு சிலர் மாபாரதம் படித்தனர். அதைக் காதம்பரி கருத்துடன் கேட்டுக்கொண் டிருந்தாள்.

'இந்த நிகழ்ச்சிகளைக் கண்ட இளவரசன், அவர்களருகிற் சென்று, மெல்லெனத் தலை வணங்கி, அன்னோர் அமர்ந்திருக்கும் பெரியதொரு தெற்றியி லுள்ள இருக்கையி னமர்ந்திருந்தான்; சிறிது போது சும்மாவிருந்து, மகாசுவேதையின் முக நோக்கி, இளநகை யரும்பினன். அவள் அவனது உட்கருத்தை நன்னர் அறிந்து, காதம்பரியை நோக்கி, 'பாங்கி, தண்மதியின் கதிர்களாற் சந்திரகாந்தக் சிலை கசிவுறுவதென, இளவரசரது மனம், நின் குணமெனும் தண்ணிய கிரணங்களாற் கசிவுண்டதெனினும், தாம் எதையும் கூறமுடியாமலிருக்கின்றார். பின்னே தங்கிய பெரும்படைகள், அரசர் சூழாங்க ளிவையெலாம் இவரது வரலாறறியாது வருந்தி

வாடும். நீவிரிருவிரும், மனத்தானும் நினைக்க லாற்றாச் சேய்மைக்கண் ணிருப்பினும், பரிதிக்கும், பங்கயத்துக்கு முள்ள தொடர்பென என்றும் அறாத அன்பெனும் கயிற்றாற் பிணிக்கப்பட்டவ ரானீர். இதுவும் சேய்மை யாகுமோ?

‘பொன்னுந் துகிரும் முத்தும் மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினுந் தொடைபுணர்ந்
தருவிலை நன்கலம் அமைக்குங் காலை
ஒருவழித் தோன்றி யாங்கு,’ —புறநானூறு

நீவிர் இருக்கின்றீர். ஆதலின், ஆருயிர்ப் பாங்கி, அவருக்கு விடை கொடு,’ என்றனள். காதம்பரி, இதைக் கேட்டு, மகாசுவேதையை நோக்கி, ‘தோழீஇ! யானும், என் பணியாளரும் இவர்தம் உடலும் உயிரும்போல் உரிமைபூண்டு நிற்கையில், யானே இவர்க்கு விடை தருவேன்!’ என்று கூறிச் சில கந்தருவ குமாரர்களைக் கூஉய்ச் சந்திராபீடனை யவன் தேயத் துய்த்து வருமா றாணை தந்தனள்.

## 9. இளவரசன் ஏமகூட நீத்து உச்சயினிக் கெழுதல்

‘இளவரசன் எழுந்து, முன்னம் மகாசுவேதையைப் பணிந்தான். காதம்பரியைத் தன் விழிகளின் அரை நோக்கினானே பார்த்தான். அவளும் நோக்கினள். நோக்கிய காதம்பரியை இளவரசன் பார்த்து, ‘பூங்குழலாய், மிகைபடப் பேசும் இயல்புளாரை உலகம் நம்பாது. ஆதலின், யான் நின்னைக் கேட்டுக்கொள்வது ஒரே விடயம். எப்போழ்தாதல், நின் பணிமக்களைப் பற்றிய பேச்சு நிகழுங்கால், அப்போது, அவர்களில் என்னையும் ஒருவனாக வைத்தெண்ணிக்கொள்,’ என்று கூறிக் கன்னி மாடம் நீங்கி வெளி வந்தான். காதம்பரி அங்கேயே செயலற்று நின்றிட்டாள். பணியாளர், அன்பெனும் நாரினாற்

கட்டுண்டாராய்த் தோரண வாயில்வரை தொடர்ந்து வந்து சந்திராபீடனை வழி விட்டுத் திரும்பினர்.

'பின்னர்க் கேயூரகன் கொணர்ந்த கொய்யுளைப் பரிமா வொன்றன்மிசை யேறிக் கந்தருவ குமாரர் பலர் புடை சூழ்ந்து வர, சந்திராபீடன் ஏமகூடத்தை விட்டுக் காற்றினுங் கடுகிச் செல்ல லுற்றான். போகும்போது காதம்பரியின் நல்லுருவம் அவன் மனத்தை விட்டுச் சிறிதும் அகலவே யில்லை. மனத்தில் மாத்திரமா? அவன் தன் முன்னும் பின்னும், வலமும் இடமுமாக எப்புறங்களினும் காதம்பரியின் உருவெளித் தோற்றங் கண்டான். சிறிது போழ்தினுள், முன்னர் மகாசுவேதை யிருந்த வாச்சிரமத்தை அடைந்தான்; இந்திராயுதமெனும் தன் குதிரையின் அடிச் சுவடுகளைப் பின்பற்றி வந்து தனது சேனை அங்குத் தங்கி யிருக்கக் கண்டான்; கண்டதும், தன்னுடன் வந்த கந்தருவ குமாரர்களுக்கு விடை தந்து, தனக்கென நிருமித்ததொரு படைவீட்டிற் புகுந்தனன். இளவரசனைக் கண்டதும் மகிழ்ச்சி கொண்ட சேனையானது, பேராரவாரம் செய்தது. பின்னர் இளவரசன், சேனையிலுள்ளார் பலர்க்கும் அவரவர்தம் தகுதிக் கேற்ப மரியாதைகள் பலவும் செய்து, இன்னுரை பலவும் இயம்பி மகிழ்ந்தனன்.

'சந்திராபீடன், பத்திரலேகை முதலியவர்களிடம், மகாசுவேதை காதம்பரி யாகியோர் பெருமைகளையும் குணங்களையும் பற்றிப் பேசி, அன்று பகற்பொழுதைக் கழித்தான். அவனுக்கு அரசெனுந் திரு முன்போ லின்பந் தரவில்லை. கந்தருவமாதின் வடிவழகிலேயே அவன் மனம் ஈடுபட்டுக் கிடந்தது. சில இரவுகள், அவனுக்குத் துயிலின்றிக் கழிந்தன. சிலவேளை உணவயிலுதலையும் மறந்தான்.

'காலைப்போழ்தினில், கொலுவீற்றிருக்கு மொரு நாள், காதம்பரியின் பணியாளன் கேயூரகன் தன்னை நோக்கி விரைவினில் வருவதையும், சேய்மைக்கண் வருகையிலேயே தன்னை

நோக்கி வணங்குவதையும், அடிக்கடி காதம்பரி யிருக்கும் திசை நோக்கித் தொழுவதையும் சந்திராபீடன் கண்டான்; கேயூரகன் அருகர்ப் போந்ததும் அவனை வரவேற்று, இன்மொழி கூறி யுபசரித்துத் தன்னருகி லிருந்ததோ ரிருக்கையில் இருக்கப் பணித்து, காதம்பரி யாதியோர் க்ஷேமங்களைப்பற்றி வின

'கேயூரகன், மனமிக மகிழ்ந்து, ஈரத்துணி யொன்றான் மூடிய கல்லை யொன்றை யெடுத்தான். அத்தொன்னை மேலே சந்தன முத்திரை யொன்று பொறிக்கப்பட்டுத் தாமரை நூலாற் கட்டப்பட் டிருந்தது. அதனுள், மரகதமணி யென இலங்கும் நாகிளங் கமுகின் பைங்காய்களும், வெள்ளிலையும், இளம்பிறை மதியெனத் தட்பம் சான்ற பைங்கற்பூரக் கட்டிகளும், கத்தூரி, குங்கும மலர் முதலியவற்றின் குழம்பு கலந்த நறுமணங்கமழும் சாந்தமும் காணப்பட்டன. கேயூரகன், சந்திராபீடனை நோக்கி, 'அரசரே, மாசுவேதையார் மிக்க மதிப்புடன் தங்கட் கனுப்பிய செய்தி யொன்றுண்டு: அது,

'எழிலுடைக் குமரரே, நும்மைக் கண்டு அளவளாவிப் பிரிதலினும் காணாமலே யிருந்திருந்தால் நன்மை பயந்திருக்கும். என் முன்னே, கலைநிறை மதியென எனக்கின்ப மளித்தீர். நீர் என்னையும் என் தோழியையும் பிரிந்த பின்னர், கந்தருவ மன்னனது கோயில், ஊக்கம் நீத்து உறக்கங் கொண்டது. யானொரு துறவி யென்பதையும் நீர் நன்கறிவீர். நும்மைப் பார்க்கவேண்டு மென்ற எண்ணம் எனக் கணுவளவேனும் இல்லாமலிருந்தும் காரண மின்றியே தலையன்பு செய்யும் தண்ணளி நிறைந்த வும்மை யென்னிதயம் காண விழைகின்றது! என்னிலை அதுவாயின், காதம்பரியின் நிலையை யின்னதெனக் கூறவும் வேண்டுமோ? அவள் உம்மையே தன் மனத்துக்கொண்டு வருந்துகின்றாள் என்ற விடயத்தை நானோ உமக்குத் தெரிவிப்பது! ஆயினமையின், மீண்டும் ஒருமுறை நீர் இங்கு வந்து போகவேண்டும்.'

என்பது. அன்றியும், அரசரே, தாங்கள் மணிமாளிகையில் வசித்தகாலை, ஞாபக மில்லாது விட்டு வந்த சேட ஹாரம் என்னும் முத்துமாலையும் இதோ இருக்கின்றது,' என்றுகூறித் தன் உத்தரியத் தலைப்பில் முடிந்திருந்த ஆரத்தை எடுத்துக் கவரி யேந்துபவளிடம் அளித்தான்.

'கேயூரகன் கூறிய மொழிகளைக்கேட்டு அகமிக மகிழ்ந்த இளவரசன், 'காதம்பரியின் அன்புக்கு யான் இலக்காயது, மகாசுவேதையாரின் அடியிணைகளைப் பணிந்ததால் வந்த பெரும்பேறேயாம்,' என மொழிந்து, அவளால் அனுப்பப்பட்ட விரைப் பொருள்கள் அனைத்தையும் அன்போடு வாங்கி, சாந்தத்தை மார்பிற் பூசினன்; முத்து வடத்தைக் கழுத்தி லணிந்தனன்; வெள்ளிலையையும் மென்று தின்றான். சிறிது பொழுது கழிந்த பின்னைச் சந்திராபீடன், கேயூரகன் தோளினைப் பற்றி மெல்ல நடந்து சென்று, கந்தமாதனன் எனப் பெயரிய தன்னரசுவாவிடைச் சார்ந்து, தன கைகளாற் பைம்புற் கற்றைகளை எடுத்து அதற்கிட்டான்; இட்டுக் குதிரைகள் கட்டியிருக்கும் இடஞ் சேர்ந்து, ஒருமுறை தன்னைப் பின்பற்றிவரும் பணியாளர்களைத் திரும்பிநோக்கினன். இக்குறிப்பை யறிந்த அவரெல்லாம், மேற்செல்லா தவ்விடத்தேயே நின்றிட்டனர். சந்திராபீடன் கேயூரகனை மாத்திரம் தனியே அழைத்து, இந்திராயுதமெனும் தனது வாம்பரிமேற் சாய்ந்தவாறு, கேயூரகனை நோக்கித் தான் காதம்பரியின் கன்னிமாடம் விட்டு நீங்கியபின் என்ன நிகழ்ச்சி அங்கு நிகழ்ந்தன வென்றும், அப்பெண்மணிகள் தன்னைப்பற்றி என்ன பேசிக்கொண்டார்க ளென்றும் பருகுவான்போல் ஆர்வங் கொண்டு கேட்டான்.

'இதைக் கேட்ட கேயூரகன், இளவரசனை நோக்கி, 'குரிசிலே, தாங்கள் புரவிமீதேறிக் காற்றினுங் கடுகிச் செல்லிய புக்களிர். அக்கணமே காதம்பரியார் தம பாங்கிகள் புடை சூழச் சூளிகைமீ தேறி, தாங்கள் செல்லும் வழியையே

இமையாமற் பார்த்து நின்றார்; பின்னர்க் கீழிறங்கிச் செய்குன்றஞ் சென்று, நீவிர் இருந்த இடங்களை ஒவ்வொன்றாய்ப் பார்த்து மகிழ்ந்து, அன்றைப் பகலைக் கழித்தனர். மாலை வந்தது. மால் கொண்டார். புழுங்கிய நெஞ்சும் விளர்த்த முகமும் உடையராய்த் துயிலறை சென்று அணைமிசைப் படுத்து, துயிலுதல் சிறிது மின்றி இரவினை ஊழியெனக் கழித்தார்; வைகறையி லெழுந்து, தங்களைக் கண்டு வரும்படி எனக் காணை தந்தார். யானுமீங் கெய்தினேன். செய்தி யிது. இனித் தங்கள் சித்தம்,' என்றான்.

'இளவரசன், கேயூரகன் வாயிலாக இதைக் கேட்டதும், ' வாரீரேவலீர், குதிரை கொணர்மின்! இன்னே கொணர்மின்!' என வெளி வந்தான்; வந்ததும், சேணை மிட்டுச் சித்தமாய் நிறுத்தப்பட்டிருந்த இந்திராயுதத்தைக் கண்டான். அதை யடுத்துப் பிறிதொரு வாம்பரியும் நின்றது. வைசம்பாயனனுக்குத் தன் சேனைகளைப் பார்த்துக்கொள்ளுமா றாணை தந்து, இந்திராயுதமிசை யிவர்ந்தான். பத்திரலேகை பின்புறம் ஏறி யுட்கார்ந்தாள். கேயூரகன் இன்னொரு பரிமீதேறிப் பின்தொடரச் சித்தமாயினன். சந்திராபீடன் கவினங் கைக்கொண்டவளவில், அப்பரிமா காற்றினுங் கடுகிச் சென்று, காதம்பரியின் கன்னி மாடத்து வாயிலில் நின்றது. நின்றதும், காப்பாளர் குதிரையைப்பற்றிச் சென்றனர். பத்திரலேகை, கேயூரகன், சந்திராபீடன் மூவரும் உள்ளே புகுந்தனர். காதம்பரி எப்போதும் இருக்கும் இடத்தில் காணாத கேயூரகன், அவள் இமகிருகத்தில் இருப்பதாக உழையர்களால் அறிந்து, முன்னே வழி காட்டிச் சென்றான். மூவரும் சிறிது நேரத்துக்குள், செய்குன்றின் பாங்கர் அமைந்த இமகிருகத்தை அடைந்தனர். ஆண்டுக் காதம்பரி போது நிறைபொங்கணை யொன்றிற் பாங்கியர் புடைசூழப் படுத்திருந்தனள்; சந்திராபீடன் வருகையைக் கண்டதும், பரபரப்புடன் எழுந்து, நாணத்தால் தலைகுனிந்து நின்

றாள். இளவரசனும், அவர்கட்கு வந்தனஞ் செய்து, பணி யாளனுவிடப்பட்ட தமனியப்பீடத்தையும் வெறுத்து வெறுந் தரையில் உட்கார்ந்தனன். பின்னர்க் கேயூரகன், காதம்பரியை நோக்கி, 'அன்னையீர், இதோ நிற்கும் கட்டழகி, இளவரசற்கு இலை யமுதிடும் அரும்பணி கொண்டவள். இவள் பெயர் பத்திரலேகை என்பது,' என்றான். எனலும், காதம்பரி, அவளை அன்புடன் அழைத்துத் தன் பக்கத்தில் இருத்திக்கொண்ட னள். பத்திரலேகையைக் கண்ட வக்கணமே, காதம்பரிக்கு அவளிடத்தில் அளவற்ற ஆதரவு உண்டாயிற்று. காதம்பரி யின் துன்பத்துக்குக் காரணத்தைச் சந்திராபீடன் வினவ, மகாசுவேதையும் குறிப்புமொழிகளா லுணர்த்தினள். இளவரச னும், தன்னிலையை அவ்வாறே யுணர்த்தி, நெடுநேரம் அவர் தம்மோ டளவளாய், விடை பெற்றுத் தன்னிருப்பிடம் செல் லப் புறப்பட்டான்.

'சந்திராபீடன், குதிரைமீது ஏறுந் தறுவாயிற் கேயூர கன் ஆண்டு வந்து, 'தேவரே, எம் தேவியார், பத்திரலேகை யம்மையை இங்கேயே யிருக்குமாறு வேண்டித் தம் ஆணையை எதிர்நோக்கி நிற்கின்றனர்,' என்றான். சந்திராபீடன், 'நன்று; அங்ஙனமே இருக்க,' எனச் சொல்லிப் பத்திரலேகையை மத லேகையுடன் போகப் பணித்தான். அவளும் சென்றனள்.

'பின்னர்ச் சந்திராபீடன், குதிரை யேறி விரைந்து சென்று தன்னிருக்கையைக் கிட்டுந் தறுவாயில், தன் தந்தை யிடமிருந்து ஒரு தூதுவன் வரக்கண்டு, குதிரையை நிறுத்தி, அவனை வரவேற்று, பெற்றோரின் க்ஷேமங்களை அன்புடன் வினவினன். தூதுவனும், 'எல்லாம் வல்ல இறைவர் மகா காலர் அருளால் அனைவரும் சுகமே,' என்று விடை தந்து, தான் கொணர்ந்த கடிதங்க ளிரண்டினை இளவரசன் கையிற் கொடுத்தனன். சந்திராபீடன் அவற்றை மரியாதையுடன் வாங்கித் தன் தலையிற் சூடிக் கண்களில் ஒற்றிப் பரபரப்புட

பிரித்துப் படித்தான். அவற்றுள் ஒன்று மன்னன் தாராபீட ஞல் எழுதப்பட்டது ; இன்னென்று அமைச்சர் சுகநாஸர் எழுதியது. மன்னன் எழுதிய கடிதத்தில்,

'மகேச்சுவரரான மகாகாலரிடத்தில் மாபத்தி வாய்ந்தோனும், மன்னர் மன்னனும், தாராபீடனுமாகிய யான், எல்லாச் செல்வங்க ளுக்கும் இருப்பிடமாகிய இளவரசன் சந்திராபீடனை, உச்சயினி மாநகரத்திருந்து, அகமிக மகிழ்ச்சியுடன் வாழ்த்துகின்றேன். குடி மக்கள் அனைவரும் க்ஷேமம். நின்னைப் பிரிந்து நாட்கள் பல சென் றன வாதலின், என் மனம், உன்னைக் காணப் பேரவாக்கொண்டு நிற்கின்றது. அந்தப்புரமகளி ரனைவரும், நின் அன்னையாகிய விலாஸ வதி தேவியும் நின்னைக் காணுது மிகவும் வாடிப்போயினர். ஆத லின், இந்த லிகிதத்தைப் படித்து முடிக்கும் நேரத்தையே நின் புறப் பாட்டுக்குரிய காலமாய்க் கொள்ளல் வேண்டும்.'

என்று எழுதப்பட் டிருந்தது. மந்திரியார் சுகநாஸர் கடி தமும், இப்பொருள் பயக்கும் வாக்கியங்களையே தன்னகத் துக் கொண்டிருந்தது. பின்பு சந்திராபீடன், தன் இருப்பிட மடைந்தனன். அடைதலும் வைசம்பாயனன், தனக்கு எழுதப் பட்டிருக்கும் இரண்டு கடிதங்களையும் இளவரசற்குக் காட்டி நின்றுன். அவற்றிலும் இப்பொருளே பொதிந்திருக்கக் கண்டு சந்திராபீடன் குதிரையிலிருந்தவாறே, புறப்பாட்டுப் பறையை முழக்க ஆணை தந்தனன். மாரி நடுங்கப் பேரியு மதிர்ந்தது.

'இளவரசன் தன் தானைத் தலைவனுன மேகநாதனை நோக்கி, 'மேகநாத, யாம் இதோ புறப்பட்டுச் செல்வோம். நீ இங்கு இன்னும் சில நாள் தங்கியிருக்க வேண்டும். அதற்குள், கேயூரகன் பத்திரலேகையை அழைத்துக்கொண்டு வந்து இவ் விடம் விட்டுப் போவான். பத்திரலேகையை அழைத் துக்கொண்டு நீ நகர் வந்து சேரலாம். கேயூரகன் திரும்பிச் செல்லும்போது, நான் கூறியவாகச் சில மொழிகளை நீ அவ னிடம் கூறிக் காதம்பரிக் கறிவிக்க. அவை வருமாறு :

'ம ன நிலையற்றது. நின்பால் வைத்த என் அன்பு வீணானது என்று எண்ணும் தருணம் வந்துவிட்டது. இஃது ஒரு புறமிருக்க, நீ என்மேல் வைத்த அன்பும் வீணாகுமோ என்ற ஐயம் என்னைப் பெரிதும் வருத்துகின்றது. மாசுவேதையாரும் என்னை, 'அன்பில்லாதவன்' என்று வெறுக்க நேரும். என்மீது குற்றம் சிறிதுமில்லை. சான்றோர் ஆணை இதனினும் பெரிது. அஃது என்னைப் பிணித்துவிட்டது. என் செய்வேன்! என்னிதயம் ஏமகூடத்திலேயே வாழ விழைகின்றது. தந்தையார் சொல்லை மீற முடியாமல் இதோ புறப்படுகிறேன். உயிர் உடலிலிருக்குமாயின், எனைத்தானும் நின்னைக் காணாது போகேன். மாசுவேதையாருக்கு என் மனமார்ந்த வந்தனம் உரியதாகுக. மதலேகை யாதியோரையும், முழு மனத்துடன் வாழ்த்துகின்றேன்.'

'சந்திராபீடன் இவ்வண்ணம் மேகநாதனிடம் கூறித் தன் நண்பர்களையும் மற்றையோரையும் அழைத்துக்கொண்டு, படையை நடத்தி மெல்ல நகருக்கு வரும்படி வைசம்பாயனனுக்குக் கட்டளையிட்டு இந்திராயுதப் பரிமேலேறிப் புறப்பட்டான்; கான் யாறும், சிறு குன்றுகளும் நிறைந்த அப்பெரிய அடவியைப் பகலெல்லாம் பிரயாணஞ் செய்து கடந்தான். மாலைக்காலம் வந்தது. அவன் மனம் காதம்பரியை நோக்கிப் பறந்தது. உடல் உச்சயினி நோக்கிச் சென்றது. இங்ஙனம் செல்லும் எல்லையில், அவ்வடவியின் நாப்பண், உயர்ந்ததொரு சந்தன மரத்தின்மீது கட்டப்பட்டுக் காற்றிலசைந்தாடும் செந்நிறக்கொடி யொன்றைக் கண்டான். நாற்புறமும், கம்பு விளை வயல்கள் செழிப்புடன் காணப்பட்டன. அப்பயிரை விலங்குகள் அழித்தொழிக்காதவாறு, அவ்வயல்களின் இடை யிடையே மனிதரெனத் தோன்றும் புல்லுருவங்கள் பல செய்து கட்டப்பட்டிருந்தன. சந்தன மரத்துச் செந்நிறக் கொடியானது, பல சிறுகொடிகளாலும், கருஞ்சாமரைகளாலும்

அலங்கரிக்கப்பட்டு விளங்கியது. அக்கொடியில், இருப்புச் சங்கிலி யொன்றில் கட்டிய மணி யொன்று, 'கணகண'வென வொலித்துக்கொண் டிருந்தது. கொடியின்மீது பொன்னினு னியன்ற மூவிலைச் சூலம், அரிமாவின் பிடரி மயிரா னலங் காரம் பெற்று வானளாவி நின்றது.

'இளவரசன், அக்கொடிவிளங்கும் திக்குநோக்கிச் சிறிதாறு சென்றான். ஆண்டு, மிகப் பெரிய காளி கோயில் ஒன்று இருந் தது. அஃது யானை மருப்புகளா னியன்ற கதவங்க ளிரண்டுடை யது. அதன் முன் வாயிலில், செந்நிறச் சாமரைகள் கற்றையாகத் தொங்கின. முன்புறத்தில், கருங்கல்லாற் கட்டிய பெரியதொரு மேடையில், எஃகினியன்றதும், கண்டார்க்கு அச்சந் தருவது மாய ஓர் எருமைக் கடாவின் உருவம் பிரதிட்டிக்கப்பட் டிருந் தது. சிவந்த கண்களையுடைய அக்கடா, பார்வைக்கு உயிருள் ளதுபோலவே தோற்றியது. அதன்மேல் சந்தனக் குழம்பில் நனைத்திடப்பட்ட கைம்முத்திரைகள் பல காணப்பட்டன இதற்குமுன் பல முறையும், காளிக்குப் பலியிட்டுப் பலியிட் டுப் பல எருமைக்கடாக்களின் நாக்குகளும், ஆடுகளின் நாக்கு களும் அறுத்தறுத் தெறியப்பட் டிருந்தன. கருப்பக் கிருகத்து வாயிற்படியில், புகைபடிந்து காவியேறிய திரைச்சீலை யொன்று குறுக்கே மாட்டிய இரும்புக் கழியில் தொங்கியது. அவ்வாயில் மயிற்பீலிகளாலும், வளையல்களாலும், பனைபோலைச் சுருள்களா லும், வெண்கல மணிகளாலும் கட்டப்பட்ட தோரணங்கள் பல கொண்டு விளங்கியது. சிம்முகம்போலும், யாளிமுகம்போலும் செய்யப்பட்ட பித்தளைக் குழல்கள்மாட்டிய இரட்டைப்புதவம் அவ்வாயிலுக் கிருந்தன. உள்ளே காளி தேவியின் சிலை இருந் தது. அதன் கழுத்தில், வில்வக் கனிகளைக் கோத்த மாலையும், பச்சிலை மாலைகளும் கிடந் தசைந்தன. பைந்தழைமேய்வனவும் அடிக்கடி கதறுவனவும், நீண்ட தாடிகளை யுடையனவுமாகிய யாடுகள் ஒருசார் அணியாகக் கட்டப்பட் டிருந்தன.

'அக்காளி கோயிலில், கரிய கம்பளம் போர்த்துக் கிழத்தனம் மேலிட்ட தமிழ் நாட்டுப் பூசாரி யொருவன் இருந்தான். அவன் தடித்துப் புறமெழுந்த செந்நிற நரம்புகளை உடலெங்கு முடையான்; நீண்டுலர்ந்த காட்டுக் கொடிகளாற் பின்னிய மலர்க்குடலையைத் தோளிலும், மலர்க்கிளைகளைப் பக்கத்திழுக்க வொரு துறட்டைக் கையிலுங் கொண்டிருந்தான். காளிதேவியின் இணையடிகளில், பக்தி யுடையான்போல அடிக்கடி விழுந்து விழுந்து எழுவதால் உண்டான வடுக்கள் அவன் நெற்றியில் நிறைந்திருந்தன. அவன் இரஸவாதம் பயின்று தேர்வதற்கு முன், தனது குறைமதியாலாக்கிய சித்தாஞ்சனத்தைக் கண்ணிற் றீட்டியதால் புடலம்பூவென வொரு கண் அவிந்து கிடந்தது. அவன் எல்லியும் இரவும் ஊன் தின்று மழுங்கி, கொல்லையுழு கொழுவென வெளிவந்த பற்களையுடையான்; நரை திரை மூப்பு நிறைந்த அப்பருவத்திலும், 'தென் தேயத்துக்கு அரசனாகவேண்டுமியான்,' என்று இடைவிடாமல் காளியை இறைஞ்சு நாவன். மந்திரங்களிற் பயின்றவன் என்று அடிக்கடி பறையடித்து வந்ததால், சிலர் பேயோட்ட அவனை அழைத்துப் போவது வழக்கம். போன இடங்களில், பேய் கோட்பட்டார் கைகளால், அடிக்கடி பொள்ளெனப் புடையுண்டு, அவன் கன்னங்கள் குழிந்திருந்தன. அவன் சுரைக் குடுக்கையாற் செய்த தம்பூரொன்றைக் கையகத் தேந்தி, இடையிடையே, கங்கா நதியின் தோத்திரப் பாடல்களை வாய்க்கு வந்தபடி பிதற்றிப் பாடிக் கூத்தாடி மகிழ்வான். அவன் வெடித்த சொல்லினன்; மடித்த வாயினன்; சினத்தீப் பொங்கும் கண்ணினன்; கூன் விழுந்த முதுகினன்; அடிக்கடி காளி தேவியையும், தன் முகத்தைக் கண்டபடி வலித்திழுத்துப் பரிகசிக்கும் தன்மையன். கோயிற் பூசைக்கு வைத்திருந்த கனிகளைக் கவர்ந்துபோக வந்த காடுவாழ் மந்திகளை இட் முயன்றதால், அவை, பூசாரியின் மூக்கைப் பலவாறு

கடித்துவிட்டன. அதனால், பல துவாரங்கள் அவன் மூக்கில் நிறைந்து அதற்கு அழகு செய்தன. அவன் பெயர் திரவிட தார்மிகன் என்பது. அங்கேயே இருந்து அன்றிரவைக் கழிக்கவேண்டுமென்று சந்திராபீடன் எண்ணங்கொண்டான்.

'பின்னர்ச் சந்திராபீடன் குதிரையினின்று மிழிந்து, ியை மும்முறை வலம் வந்து வணங்கி, அமைதியான அவ்விடத்தை ஆவலுடன் பார்த்துக்கொண் டிருக்கையில், அக்கிழப் பூசாரி அங்கே தோன்றிக் கோபத்தாற் கொதித்து, இடியன்ன குரலால், 'நீ இங்கிருக்கக் கூடாது!' என்று இள வரசனை உரப்பி வெருட்டத் தொடங்கினன். அரசிளங்கும ரன் அந்தப் பூசாரியின் தன்மையைக் கண்டு, காதம்பரியின் மேற் சென்ற மனத்தனாயினும், எயிறுகள் துலங்கும்படி நகைத் தான். அவன் நண்பரிற் சிலர், கிழவனைப் பரிகாசம் செய் தனர். சந்திராபீடன், 'வேண்டா' என்று அவர்தமை விலக் கிப் பூசாரியிடம் விநோதமாய்ப் பேசி, பல இன்மொழிகளைக் கூறி அவனைத் தேற்றினன். பூசாரிக்கு எழுந்த கோபம் எங்கோ பறந்தது. இன்சொலால் எவர்தாம் மகிழார்! பின்னர், அப்பூசாரியின் பூர்வோத்தரங்களை யெல்லாம் அரசன் வினவ, அவனும் தற்புகழ்ச்சியோடு பலபடப் பேசினன். அது சந்திரா பீடனது பொழுதுபோக்குக்குப் பெரிதும் துணையாயிருந்தது. முடிவில், அவனும் தாம்பூலம் பெற்று அப்பாற் சென்றான்.

'கதிரவன் மறைந்தான். குதிரைகளெல்லாம் பூமியிற் புரண்டு களைதீர்ந் தெழுந்தன. எழுந்த அவற்றை வரிசையா கக் கட்டினர் உழையர். தனியிடத்தில் இந்திராயுதம் கட் டப்பட்டது. அதற்கருகில், தன் நண்பர் புடைசூழச் சந்திரா பீடன் தனக்கென வமைத்ததொரு மெல்லணையிற் படுத்தான். இரவெல்லாம் அவன் மனம் உச்சயினி செல்வதும், ஏமகூடம் செல்வதுமாகவே யிருந்தது. அவன் வைகறையில் எழுந்து,

பூசாரிக்கு நிறையப் பொருளளித்து, அவ்விடம் விட்டகன்று, சில நாட்களில் உச்சயினி நகரம் சேர்ந்தனன்.

"'இளவரசன் நகர் வந்தான்!' என்ற செய்தியை அறிந்த குடிகள், பெருமகிழ்வுடன் ஆரவாரம் செய்தார்கள். இச்செய்தி அரண்மனை வாயிலையும் அடைந்தது. பரிசனங்கள் ஓடோடியுஞ் சென்று, தாராபீடனிடம் அறிவித்தார்கள். சிற்றரசர்கள், குடை கவரி யேந்திய பணியாளர் முதலியோர் புடைசூழத் தாராபீடன் கால் நடையாகவே எதிர்சென்றழைக்கப் போனான். தந்தையைக் கண்ட இளவரசன், குதிரையை விட்டுக் கீழிறங்கி, முடியினது மணியொளி படியிற் பாயத் தந்தையின் திருவடிகளில் பணிந்தெழுந்து, மற்றுமுள்ள பெரியோர்களையும் வணங்கினான். தாராபீடன், நீண்ட தன்னிரு கைகளையும் நீட்டி, 'என் கண்ணே, குழந்தாய், வரவேண்டும்! வரவேண்டும்!!' என்று அவனைத் தன் மார்பிறுகப்புல்லினான்; பின்னர்ச் சந்திராபீடன் கைகளைப் பிடித்தழைத்து விலாஸவதியின் அந்தப்புரஞ் சென்றான். விலாஸவதி, தன்னருமைக் குழந்தை வந்தானென்று ஓடோடியும் வந்து, கன்றுகாண் காராவென, கார் பெற்ற தோகையெனக் களித்து, அவனைத் தன் கைகளால் வாரியணைத்து, உச்சி மோந்து, அயினி நீர் சுழற்றி மடிமீதிருத்திக்கொண்டனள். இளவரசனும், சிறிது போழ்து திக்குவிசயச் செய்திகளை அன்னையோடு கூறி மகிழ்ந்திருந்தான்.

'பின்னர் அவன் அமைச்சர் பெருமான் மாளிகை புகுந்து, அவர்தமோடு வகையறிந் துரையாடி, 'வைசம்பாயனன் படையை நடத்திக்கொண்டு இன்னுஞ் சிலநாளில் வந்து வருவான்,' என்று கூறினன். அதன் பின்னர், மனோரமை தேவியின் கோயிற் புகுந்து, அவ்வம்மையைப் பணிந்து, சில நிமிடங்கள் பேசிய பின்னர், அன்னையின் கோயில்புக்கு, நீராடலாதியவற்றை முடித்துப் போனக முண்டு களையாறி, மாலையில்

தனது கோயிற் புகுந்தனன். புகுந்தென்? மனத்துன்பம் இரு மடங்காயிற்று. காதம்பரி யில்லாத எவ்விடமும், வெற்றிடமாகவே அவனுக்குத் தோன்றியது; 'ஏமகூடத்திருந்து, என் மனக்கினிய செய்திகொண்டு, மேகநாதன் துணையாகப் பத்திரலேகை என்று வருவாள்?' என்று எதிர்ப்பார்த்த வண்ண மிருந்தான்.

## 10. பத்திரலேகையின் வரவும் காதம்பரியின் செய்தியும்

'இவ்வண்ணம் பல நாட்கள் கழிந்தன. ஒருநாள் தானைத் தலைவன் மேகநாதன், பத்திரலேகையைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு உச்சயினி வந்து சேர்ந்தான். நெடுந்தூரத்திலிருந்த வண்ணம், பத்திரலேகை சந்திராபீடற்கு வந்தனமளித்தனள். காதம்பரியினிடமிருந்து செய்திகொண்டு வருவதாலே, அவளிடம் முன்னினும் இளவரசற்கு அன்பு பெருகியது. ஆதலின், அவளை மட்டிலா மகிழ்ச்சியுடன் வரவேற்றான்; தலை வணங்கிப் பணிந்த மேகநாதனுக்கும், இன்முகங் காட்டி நல்வரவு கூறினன். பின்னர் எல்லாப் பரிசனங்களையும் விலக்கிப் பத்திரலேகையை மாத்திரம் தனியே குதிரை கட்டிடத்துக் கழைத்துச் சென்று, ஏமகூட வரலாறாக ளனைத்தையும் கூறும்படி. அவளைக் கேட்டான். பத்திரலேகையும் பின் கூறுமாறு கூறத் தொடங்கினள்:

''அரசரே, தாம் அங்கிருந்து புறப்பட்டு வந்ததும் யான் கேயூரகனோடு ஏமகூடஞ் சென்றேன். காதம்பரி தேவி, முன்னிருந்த மலரணையையே துணையெனக் கொண்டு இமகிருகத்திலிருந்தாள். யான் அவளருகு சென்று உட்கார்ந்தேன். என்னிடம் காதம்பரி காட்டிய அன்பு கடலினும் பெரிது. மாலைக் காலத்தில் என்னையே துணையாகக் கொண்டு இளமரக்கா

விற்குச் சென்று, ஆண்டுச் சுதை தீற்றிய தெற்றியின்மீது, மரகதத் தூணொன்றிற் சாய்ந்து, சிறிது போழ்து ஏதேதோ ஆழ்ந்து யோசித்து, என்னிடம் சில மொழிகள் சொல்ல விரும்பினள். யானும் அவள் மனமறிந்து, 'தேவி, நாணமேன்? எவையாயினும் வாய் திறந்து கூறுக,' என்றேன். அவள் தன் வலக்காற் பெருவிரலால் நிலங்கீறி நாற்புறமும் மருண்ட நோக்குடன் நோக்கினள். அதுகாலை யவளுக்குப் பேச நாவெழவில்லை. நாணம் பிடரியின்மீது இருந்து அழுத்தியது. கண்களில் நீர்த் துளிகள் களகளவென வுதிர்ந்தன. அத்தருணம், அவளை யான் பன்முறை தேற்றி, 'தேவி, நின் மனக்குறை யாது? என்னிடம் ஒளியாமற் கூறவேண்டும்,' என்றேன். பின்னர் அவள் ஒருவாறு தானே தேறிப் பின் கூறுமாறு மொழிய லுற்றாள்:

"ஆருயிர்ப் பாங்கி, பத்திரலேகாய், நின்னினும் உயர்ந்த சுற்றம் எனக் கிதுபொழுதில்லை. நின்னை என்று கண்டேனோ அன்று முதல், என் மனம் உன்னையே நாடி நிற்கின்றது. காரணமும் அறியேன். நான் கூறப் புகும் செய்தி, எனக்கே வரம்பு கடந்த நாணத்தை யுண்டாக்கக் கூடியது. ஆகலின், அதனைப் பிறரிடத்துக் கூறுவதெங்ஙனம்? உயர்குடியிற் பிறந்த நான், அக்குடிக்கொரு மாசினை உண்டு பண்ணுவதோ? எனினும், ஓராற்றாற் கூறுவேன்; கேட்டி: பத்திரலேகாய், கன்னிப் பெண்கள் செய்யத் தகாத செயலொன்றை யான் செய்தேன்: இளவரசர் சந்திராபீடரது மணவினைச் சார்பாகப் பெற்றோர் அநுமதியைச் சிறிதும் பெற்றேனில்லை. இஃதென்ன அறியாமை! சந்திராபீடரால் யான் அறிவிழந்தவளாயினேன். ஒழுக்கந் தவறிய எனது செய்கையை நின்னிடம் கூறிவிட்டேன். நான் செய்த பிழை, நிலத்தினும் பெரிது! வானினும் உயர்ந்தது! கடலினும் அகன்றது! இதற்குக் கழுவாயும்

உண்டோ? உயிரிழத்தல் ஒன்றே தக்கதொரு தீர்வாகும். ஆதலின், உயிரை விட விரும்புகின்றேன்,' என்றாள்.

"'இதைக் கேட்ட யான், நடந்த செய்திகள் இன்னவென்று அறியக்கூடாதவளாய், புழுங்கிய நெஞ்சுடன் காதம்பரியை நோக்கி, 'சந்திராபீடர் நின்திறத் திழைத்த பெரும் பிழை யாது? அவர் என்றும், எங்கும், எவரிடத்தும், எப்பிழையும் செய்யாரே! நின்மாட்டுப் பிழை புரிந்திருப்பரேற் கூறுக. யான் அவரை அழைத்து வருகின்றேன்,' எனக் காதம்பரி, அன்பு பொங்கிவழியும் தனது பார்வையால் பருகுவாள்போல என்னை நோக்கி, நெஞ்சம் தயங்க, மிக்க நாணத்துடன், 'பத்திரலேகாய், நின் மேலான உள்ளன்பை இன்னதென யானறிவேன். அனிச்ச மலரினும் மெல்லிய தன்மை வாய்ந்த இளமங்கையர்க்குத் தைரியமேது? மனத்திற்கொண்ட கணவர்தம் திறத்துச் செய்தியும் அனுப்பி, அணிமையிலும் செலவிரும்பும் மடவரலார்தமை, 'மீறிய செயலினர்,' என்றலால் வேறென்னுவதெவன்? யான் சந்திராபீடர்க்கு என்னென்று செய்தியனுப்புவது? 'நீர் எனக்கு வரம்பிலன்புடையீர்,' என்பது கூறியது கூறலும், அறிந்ததை அறைதலும் ஆம்; 'உமது அன்பு என்னுருவமன்றோ?' என்று வினவுதல், வெள்ளறிவைப் பொள்ளெனப் புலப்படுத்துவதாகும்; 'நும்மிற்பிரிந்து என்னுயிர்தரியேன்!' என்பது இயற்கை முரணாம்; 'நீவிர் ஈண்டு ஒருமுறை தவறாது வந்து போதல் வேண்டும்,' என்று கூறுவது, என் செல்வம், இளமை, அழகு முதலியவற்றின் செருக்கை விளக்குவதாகும்; 'யானே நும்மிடை வருவேன்,' என்பது பேதைமை கனிந்த பெண்தன்மையாகும்; 'யான் உயிர் துறந்தால் எனது முற்றிய அன்பை அப்பொழுதறிவீர்!' என்று கூறுதலும் நேர்தல் அரிது. இதற்கென் செய்வேன்?' என்றனள்.

"யான் காதம்பரியை நோக்கி, 'தேவி, உனக்கேன் வீணில் இத்துயர்? அரசகுமாரரை அழைத்து ஒருநொடிப் பொழுதில் இவண் வருவேன்,' என்றேன். தங்களது பெயரைக் கூறக்கேட்ட காதம்பரி, கண்களை நன்கு விழித்துப் பார்த்து, மரகதப் பாறையின்மிசை உட்கார்ந்து, 'பத்திரலேகாய், நீ எற்கு அன்புடையை என்று கருதி மாத்திரம் இதனைக் கூறினேனில்லை. நீ என் முன்னே உலவிக்கொண்டிருப்பதுவும், நான் உயிர் தரித்திருப்பதற்கொரு மூலமாகின்றது. எனினும், அரச குமாரரை அழைத்து வருவதில் உனக்குத் துணிவிருக்குமாயின், நின் கருத்தின்படியே செய்,' என மொழிந்து, எனக்குப் போகவும் விடை தந்தனள். யானும் ஈண்டெய்தினன்,' என்றாள்.

## 11. கேயூரகனது வரவும் பத்திரலேகையின் சேலவும்

'இம்மொழிகளைக் கேட்ட சந்திராபீடனுக்குக் கவற்சி மிகப் பெரிதாயிற்று. அவன் காதம்பரியைக் குறித்துப் பலப்பல வெண்ணிப் புழுங்குந் தறுவாயில், வாயிற் காப்பாளொருத்தி அங்கு வந்து, அரச குமாரனையும், பத்திரலேகையையும் விலாஸவதி அழைப்பதாகக் கூறினள்.

'சந்திராபீடன், அவ்வாணையைக் கேட்டு, 'ஆ! என்னுயிர் ஊசலாடுகின்றது! அன்னையார் என்னை ஒரு கணமேனும் பிரியத் துணியாராயினர். காதம்பரியின் ஆணையோ, என்னை ஏமகூடத்திற்கு அழைக்கின்றது! முதுமைப் பருவத்தினரான எந்தையார்க்குப் பணிவிடை செய்யும் அரும்பணியோ, தள்ளற்பாற்றன்று! காலம் போக்கலில் மனம் அமைதிப்படுகின்றதில்லை. செல்லும் வழியோ, துயர் மிக்கது!' என்றெண்ணிக்கொண்டே பத்திரலேகையின் கையினைப் பற்றிக்கொண்டு தன் அன்னையிடஞ் சென்றான். பகற்பொழுது அவ்விடத்துக் கழிந்தது. காதம்பரியை என்றும் எண்ணிய மனத்தனாய் இரவையும் கழித்தான். அன்று முதல் பிறர்க்குச் சொல்ல முடியாப் பொல்லாத நோய்கொண்டு, மிக வருந்தி வந்தான்.

'எல்லியும் பகலும் அல்லல் அடைந்ததால், அவன் உடல் மிகுதியு மிளைத்துக் காட்டிற்று. எனினும், அவன் எந்நிலையினும் தன் நாணத்தை யிழக்கச் சம்மதிக்கவில்லை; 'வீரர்க்கியல்பில் அமைந்த ஆண்மையைப் புறக்கணிப்பதினும், இன்பத்தை இழப்பது மேல்,' என்று, தன்னைத் தானே தேற்றிக்கொண்டு பலநாட்களைக் கழித்தான்; ஒரு நாள், பத்திரலேகையொடும் பாங்கியுடன் நகரிக்கு வெளியே யிருக்கும் சிப்பா நதிக்கரையிற் சிறிது நேரம் உலவிக்கொண் டிருந்தான். ஆற்

றுக்கு அக்கரையில், அறுமுகக் கடவுளின் கோயில் ஒன்று உண்டு. அவன் அதன் பக்கத்தில், ஒரு சிறு குதிரைப் படை வேகமாய் வருவதைக் கண்டான். அப்படை யாருடைய தென்று அறிந்துவரத் தன் பணியாளர்களில் ஒருவனை முன்னர் அனுப்பினான்; தானும் ஆற்றிலிறங்கி அதில் முழந்தாளளவு தண்ணீரே ஓடிக்கொண்டிருந்தமையின், அதனைக் கடந்து முருகன் கோயிலில் உருகியமனத்துடன் காத்திருந்தான். சிறிது நேரத்திற்குப்பின், 'கேயூரகனே வருகின்றான்,' என்றறிந்து, ஆவலோடு காத்திருந்தான். இதற்குமுன் சென்ற பணியாளனால், காதம்பரியினிடத்துக்கொண்ட காதல்காரணமாக அரசகுமாரன் பெரிதும் வருத்தமடைந்திருக்கின்றான் என்ற விடயத்தைக் கேயூரகன் கேள்விப்பட்டிருந்தானாதலின், அவன் முகம் மிக்க துயரோடு காணப்பட்டது. இளவரசன் அவனை அன்புடன் வரவேற்றனன்; வரவேற்று, 'கேயூரக, நீ நெடுந்தூரம் பிரயாணம் செய்து வந்தமையின், மிகக் களைத்துப்போயினை. ஆதலின், நின் களையாறிய பின்னர்ச் செய்திகளைச் சொல்லலாம்,' எனக்கூறி, ஒருயானையின்மீது கேயூரகனையும், பத்திரலேகையையும் ஏற்றி அழைத்துக்கொண்டு, தனது உய்யானஞ் சென்றான். அவ்வுய்யானத்திலிருக்கும் மாளிகையில் அன்று தங்கி, அவரவர் நித்தியக் கடன்களை முடித்துக் கொண்டனர். பின்னர்ப் பத்திரலேகையைத் தன் பக்கத்திருத்திக் கொண்டு காதம்பரியின் சேமச் செய்திகளைப்பற்றிக் கூறும்படி கேயூரகனைச் சந்திராபீடன் கேட்டனன்.

'கேயூரகன் இளவரசனை நோக்கி, 'அரசே, என்னென்றியம்புவேன்! காதம்பரியார் மகாசுவேதையாராகிய இவர்களிடமிருந்து யான் எந்தச் செய்தியையும் கொண்டுவந்தேனில்லை. பத்திரலேகையைக் காதம்பரியினிடமிருந் தழைத்து வந்து, மேகநாதனிடம், மகாசுவேதையாரின் பன்னசாலைக் கருகில் ஒப்புவித்தேன். தாங்கள் கூறிய செய்திகளை யெல்லாம்

மேகநாதன் என்னிடம் சொன்னான். யான், ஏமகூடஞ் சென்று மாசுவேதையாரிடம் தாங்கள் உச்சயினி நகருக்குச் சென்று விட்டீர்களெனவும், மேகநாதன் மூலம் செய்தியனுப்பியிருக் கின்றீர்களெனவும் கூறினேன். இதைக் கேட்ட மாசுவேதை யார், நெட்டுயிர்ப்பெறிந்து, 'இதுவோ செய்தி!' என்று தவ மியற்றத் தமதாச்சிரமஞ் சென்றார். காதம்பரி தேவியாரும், இச்செய்தி கேட்டு, இடியேறுண்ட நாகம்போலக் கலங்கி, மாசுவேதையார் அருந்தவம் புரியச் சென்றாரென்பதையு மறி யாது, 'கேயூரக, இவ்வின்பச் செய்தியை என்னிடம் கூறாதே; இதை மாசுவேதையினிடமே கூறு,' என்று சுளித்த முகத்து டன் எனை நோக்கிக் கூறினர். அருகிலிருக்கும் பாங்கி மதலே கையைப் பார்த்து, 'மதலேகாய், இளவரசர் செய்ததை யறிந் தாயோ? இவரையன்றி வேறெவர் இத்துணிவான காரியத் தைச் செய்பவர்?' என வெறுப்புடன் கூறி, அணையிசை விழுந்து புரண்டு, அன்றைப் பகற்பொழுதைக் கழித்தார்.

'மறுநாள் நான் தேவியார் அருகிற் சென்றேன். அவர் என்னை நோக்கி, 'கூரியமதியும், நினைத்தது முடிக்கும் பேராற்ற லும் வாய்ந்த நீயிருக்கும்போதே நானிந்தப் பெருந்துன்பத்தை யனுபவிக்கவேண்டி யிருக்கின்றதே!' என்று வெறுப்புடன் கூறினார். இம்மொழிகளின் பொருளை உணர்ந்த யான், தேவி யாரிடமிருந்து விடைபெறாமலே இங்குவந் தடைந்தேன். அர சரே, காதம்பரியார் தங்களையே தஞ்சமென்று எண்ணி யிருக் கின்றார். அவ்வம்மையார் அனுபவிக்கும் துன்பங்களுக்கோ, எல்லையில்லை,' என்று கூறி வரும்போதே, சந்திராபீடன், அச் செய்தி கேட்க ஆற்றாறாய், உயிர்ப்பற்றுக் கீழே விழுந்தான்.

'விழுந்த அரசனைக் கேயூரகன் தாங்கப் பத்திரலேகை உபசாரங்கள் பல செய்யச் சிறிது நேரத்துக்குள் அவன் மூர்ச்சை தெளிந்தான்; தெளிந்து, தன்னெதிரில் இருக்கும்

'கேயூரகனைப் பார்த்துத் தைரியங் குன்றிக் கண்களில் நீர் வாரத் தழுதழுத்த குரலுடன் கூறலானான்: 'கேயூரக, நீ கூறிய செய்திகள் அனைத்தும் முன்னமேயே எனக்குப் பத்திரலேகையும் கூறினள். காதம்பரி தேவி இயற்கையிலேயே நற்குணம் வாய்ந்தவள்; ஆனால், தன்னையே அவள் நன்கு தெரிந்து கொள்ளவில்லை. எனித்தனை துன்பங்களை அனுபவிக்கவேண்டும்? இவ்விதம் நடக்கவேண்டுமென அவள் எனக்கேன் கட்டளையிடக் கூடாது? மாதர்க்கு நாணம் இயல்பிலமைந்ததெனினும், என்னிடம் மாத்திரம் அதை ஒழித்திருந்தால் மிக நன்மையாயிருக்கும். தான் கூறாது போனாலும், பத்திரலேகையின் மூலமாவது தெரிவித்திருக்கலாமே! ஏமகூடமென்பது உச்சயினியின் பக்கத்திலா இருக்கின்றது! அங்குச் செல்லப் பன்னாட்களாகுமன்றோ? திடீரென்று நான் என்ன செய்ய முடியும்? எல்லாம் விதியின் செயல்; இன்னம் எத்தகைய துன்பங்களுக்குள் என்னை அகப்படுத்துமோ அப்பாழுந் தெய்வம்! கின்னர மிதுனங்கள் என்னை யிழுத்துச் சென்றதும், யான் அச்சோதங் கண்டதும், கீதநாதங் கேட்டதும், மாசுவேதையாரை வணங்கியதும், அவரோடு ஏமகூடஞ் சென்றதும், அங்குக் காதம்பரியைக் கண்டதும், எனது எண்ணம் எண்ணியாங்கு ஈடேறுமுன் தந்தையாரிடத்திருந்து செய்தி வந்ததும், விதியின் செயல்கள்தாமே! பாழுந் தெய்வம், உயர ஏற்றிவைத்துத் திடீரெனக் கீழே தள்ளுகின்றதே! எனினும், காதம்பரியின் மனத்தை மகிழ்விக்கும் செயல்களைச் செய்தல்வேண்டும்,' என்று கூறி வரும்போதே பகற்பொழுது சாய்ந்துவிட்டது. யாவரும் அவ்வுய்யானத்து மாளிகையிலேயே அன்றிரவைக் கழித்தனர். சந்திராபீடனுக்கு உறக்கம் சிறிதும் வரவில்லை. கடல் அலைகளென அவன் மனத்தில் அடுக்கடுக்காகப் பல எண்ணங்கள் தோன்றின. அவன் தனது படுக்கையிற் புரண்டு புரண்டு, அன்றிரவைக் கழித்தான்.

'மறு நாள் விடியற் காலையில், வைசம்பாயனனால் நடத்தப்பட்டுவரும் தனது சேனை தசபுரத்துக் கப்பால் வருகின்றதென்பதைக் கேள்விப்பட்டான். உரிய காலத்தில், தன் நண்பனது வரவு பெரிதும் துணை செய்யும் என்று தனக்குள்ளே மகிழ்ந்தான். அத்தருணம் கேயூரகன், இளவரச னருகில் வந்து வந்தனஞ் செய்தான். அவனைச் சந்திராபீடன் நோக்கி, 'கேயூரக, இதோ வைசம்பாயனனெனும் என்னுயிர்ப் பாங்கன் வருகின்றான். காரியம் கருதியபடி கைகூடிற்றென்றே எண்ணலாம்,' என்றான். இதைக் கேட்ட கேயூரகன், 'அரசரே, இஃதொரு நற்செய்தியாகும். இதனால், தேவர் மனமும் மகிழ்ந்தது. உமது நண்பர் வந்து, அவருடன் நீர் ஏமகூடத்துக்குப் புறப்படும்வரை நான் இங்கு இருத்தல் கூடாதென்று எண்ணுகின்றேன். உம்முடைய முயற்சியை நோக்குங்கால் நீர் எப்படியும் ஏமகூடம் வருவீரென்பது உள்ளங்கை நெல்லியங்கனியெனத் தெள்ளிதிற் புலனாகின்றது. ஆனால், காதம்பரியாரின் நிலைமையோ கவலைக்கிடமானது. உம்மை மறுபடியும் காணலாமென்ற ஆசையினால் அவர் உயிர் வைத்திருக்கின்றார். நான் முன்னே போய்த் தங்கள் வருகையை அவர்க்கு உணர்த்துவேனால், அவர்க்குத் தேறுதலும் உண்டாகும்; மகிழ்ச்சியும் மிகும். அன்றியும், யான் இங்கிருந்து ஆற்றவேண்டிய வினையும் ஏதுமிலது. ஆதலின், எனக்குப் போக விடை யளித்தல் வேண்டும்,' என்றான்.

'இதைக் கேட்ட இளவரசனது மனம் மகிழ்ந்தது. அவன் கேயூரகனை நோக்கி, 'அன்ப, நன்கு கூறினை! இதுபோன்ற கருத்து நினையன்றி வேறு எவர்க்குத் தோன்றும்! காதம்பரியின் உயிர் நமக்கு அருமையாயின், நீ யின்னே செல்வதுதான் தலையாய செய்கை. நான் இன்னுஞ் சின்னாளில் ஏமகூடம் வருவேன் என்பதற் கறிகுறியாகக் காதம்பரியின் பிறிதோர் இதயம் போன்றவளான பத்திரலேகையை உன்னோடு அனுப்பு

கிறேன்,' என மொழிந்து, பத்திரலேகையைப் பார்த்தான். அவள் ஏமகூடஞ் செல்லச் சித்தமாய் நின்றாள். பின்னர், இளவரசன் மேகநாதன் என்னுந் தன் தானைத் தலைவனை விளித்து மேகநாத, நீ முதன்முதலில் பத்திரலேகையை எவ்விடமிருந்து அழைத்து வந்தனையோ, அவ்விடம் அவளை அழைத்துக் கொண்டு கேயூரகன் முன்னுகச்செல். யான் நெடுநாட் பிரிந்த என் நண்பன் வைசம்பாயனனைக் கண்டு அளவளாவிய பின்னர், உனக்குப்பின் வருகின்றேன்,' என்றான். உடனே, கேயூரகன் எழுந்து வந்தனஞ் செய்ய, அரச குமாரன் அவனை மார்பிறுகத் தழுவித் தன் குழைகளைக் கழற்றி அவன் காதுகளி லிட்டான்; இட்டு, 'கேயூரக, நீ காதம்பரியிடமிருந்து செய்தி யொன்றும் கொணர்ந்தாயில்லை; ஆதலின், யான் மறுமொழி கூறவேண்டுவதும் இல்லை; எனினும், பத்திரலேகை, இன்றி யமையாத சில செய்திகளைக் காதம்பரிக்குத் தெரிவிப்பாள்," என்று கூறிப் பத்திரலேகையை நோக்கி, 'பத்திரலேகாய், என் வரவு ஏமகூடத்துக் கின்றியமையாததாயின், எவரும் பெரும் பேறுபெற்று இன்பந் துய்க்கவேண்டுமாயின், காதம்பரி தன் உயி ருக்கு எவ்விதத் துன்பத்தையும் இயற்றிக்கொள்ளக் கூடாது. நீ தூரதேயம் செல்கின்றனை யாதலின், என்னைப் பிரிந்ததால் நேர்ந்த துன்பம் உனக்கும் வேண்டா. உடலை நன்றாய்ப் போற்றி வளர்த்து வருவதன்றி அனுதாபவு செய்யாதே; கால மறிந்துண்; தனிவழிபோகேல். தேவி காதம்பரியின் உயிரைக் காக்கவே என் னுயிரினும் சிறந்த வுன்னை யனுப்புகிறேன். என் உயிரைக் காக் கும் திறமும் உன்னைப் பொறுத்ததுகாண். ஆதலின், நீ சென்று வருவாயாக,' என்று கூறிக் கேயூரகனை நோக்கி, 'மறிவல்லோய், இன்னும் சின்னாளில் யான் ஏமகூடம் வருவேன். அப்போது, நீயும் பத்திரலேகையும் மாசவேதையாரின் ஆச்சிரமத்துக்கு வந்தென்னை அழைத்துப் போகவேண்டும்,' என்றான். அவனும், 'ம்,' என்று கூறிச் சென்றனன்.

## 12. சந்திராபீடன் வைசம்பாயனனைக் காணச் செல்லல்

'உடனே இளவரசன், சேனைவருஞ் செய்தியை அறிந்து வரச் சேவகனொருவனை விடுத்து, நெடுநாட் பிரிந்திருந்த உயிர்த்தோழன் வைசம்பாயனனை எதிர்கொண்டழைத்துவரத் தந்தையாரின் அனுமதி பெற்றுவரவேண்டுமெனக் கருதித் தாராபீடனிடம் சென்றான். சென்று வணங்கி, அவனருகிருந்ததோர் இருக்கையில் இருந்தான். தாராபீடன், இளமைப் பருவத்து நலமெலாங் கனிந்து நின்ற தன் குமரனைக் கண்டவிடத்து இறும்பூதெய்தி, அணியராயிருக்கும் அமைச்சர் சுகநாஸரை நோக்கி, 'மந்திரத் தலைவீர், யான் பல நாள் அறச்செய லாற்றி இறைவன் திருவருளால் குமரனைப் பெற்றேன். பெற்ற என் மனம், அவனது எழிலுக்கேற்ற கன்னிகை யொருத்தியை நேடி, மணவினை யாற்றிக் களிக்கவேண்டுமென நினைக்கின்றது,' என்றனன். இது கேட்ட அமைச்சர், 'இறைவீர், நன்று கூறினீர். நமது சந்திராபீடன், கலையெலாங் குறைவறக் கற்றான்; குடிகளின் மனத்தையுங் கவர்ந்தான்; அரசையும் ஏற்றுத் திக்கு விசயமும் செய்தான். இனிக் குறையென்? மணவினை ஒன்றே குறை. அதைச் செய்து முடித்து யாம் கண் குளிரக் காண்டல் வேண்டும்,' என்றார். சந்திராபீடன், 'ஆகா! யான் காதம்பரியினிடத்துக் காதல்கொண்டு வருந்துமித் தறுவாயில், எந்தையாரின் மனத்து மணவினைச் செய்தி தோன்றியதும் இறைவன் திருவருளேயாம் ஆயினும், வைசம்பாயனனைக் காணவேண்டு மென்னுங் குறை யொன்று மனத்துக் கிடந்து வருத்துகின்றது. அது நிறைவேறியதும், காதம்பரியை மணம் புரிந்ததாகவே எண்ணிவிடலாம்,' என்று தனக்குள் எண்ணி மகிழ்ந்தான். உடனே வேந்தன் தனது மைந்தனை விலாஸவதியின் அந்தப்புரம் அழைத்துப் போய், மணவினைச் செய்

தியைப்பற்றிக் கூற, அவளும் அதற்கிணங்கினள். பிறகு சந்திராபீடன், தன் நண்பனை அழைக்கப் போகும் செய்தியைச் சுகநாஸர் மூலமாகக் கூறி, தந்தையின் உத்தரவையும் பெற்றான். அன்றிரவு மூன்றாவது யாமத்தில், சந்திராபீடன் புறப்பாட்டுச் செய்தி யறிவிக்கச் சங்க முழங்கின.

'சந்திராபீடன், வைகறையிலெழுந்து, கவின்பெறு கஞ்சுகம் தரித்து,இந்திராயுதமிசையேறிப் புறப்பட்டனன். முன்னே குதிரை வீரர் பலர், தத்தம் வாம்பரிகளின்மேலேறிச் சென்றனர். சந்திராபீடன் சிறிது நேரத்தில் நகரையும் கடந்து, சிப்ரா நதியையும் கடந்தான். கதிரவன் குணக் குன்றில் எழுமுன்னம், மூன்று யோசனை தூரம் படைகள் சென்றுவிட்டன. பரிதி எழுந்து இரண்டு நாழிகைக்கெல்லாம், அவன்கட் கெதிரில், கால் முளைத்து எழுந்து வரும் கடலெனச் சேனைக் கூட்டம் ஒன்று காற்றினுங் கடுகி வந்துகொண் டிருந்தது. அதனை வைசம்பாயனனால் நடத்தப்பட்டு வரும் தன் படையென்று சந்திராபீடன் எண்ணி, எவரும் அறியாமல், திடீரெனச் சேனைக்குட் சென்று, வைசம்பாயனனெதிரில் நிற்கவேண்டுமென்று எண்ணினான். அங்ஙனமே மேலாடையால் தன்னை மறைத்துப் படையிற் புகுந்து தேடிப் பார்க்குமளவில், வைசம்பாயனன் எங்கும் காணப்பட்டிலன். அதனால், அவன் மனமாழ்கிப் படை வீரரை நோக்கி, 'வைசம்பாயனன் எங்கே?' என்று வினவினான். அவர்கள், 'இவர் நம் மன்னர் பெருமான் சந்திராபீடர்,' எனத் தெரிந்து, கண்களில் நீர் ஆறாய்ப் பெருக, கலங்கிய நெஞ்சும், வாடிய முகமும் உடையாராய்ச் சந்திராபீடனைச் சூழ்ந்துகொண்டார்கள். சந்திராபீடன், 'வீரர்காள், வைசம்பாயனன் எங்கே?' என மீண்டும் வினவினான். அவர்களேதும் மறுமொழி கூறிலர். சிற்றரசர்களைக் கேட்டான். அவர்களும், ஒருவர் முகத்தை யொருவர் பார்த்துச் சிறிது யோசித்துப் பின்னர், 'அரசரே, நீவிர் குதிரையி

னிழிந்து, இம்மரத்தடியில் உட்காரும். யாம், யாவற்றையும் விரிவாகக் கூறுகிறோம்,' என்றனர். இவ்வுரை, சந்திராபீடன் செவிகளிற் பழுக்கக் காய்ச்சிய இருப்புச் சலாகையென நுழைதலோடும், அவன் மெய்ம்மறந்து தன் குதிரைமீது சாய்ந்தான். அருகிலுள்ளோர் அவனைத் தாங்கிக் குதிரையி னின்று மிறக்கி மரத்தடியிற் கொண்டுபோய்ச் சில சிகிச்சை களைச் செய்தனர். சிறிது நேரங் கழித்து அவன் ஞாபகம் பெற்றெழுந்து, தன் ஆருயிர்ப் பாங்கனுக்கு என்ன நேர்ந் ததோ என்று எண்ணி யெண்ணிப் புழுங்கினான்; பின்னர், அச்சிற்றரசர்களை, 'இடையில் ஏதேனும் போர் நிகழ்ந்து அதில் என் நண்பன் மடிந்தானோ? கடும்பிணி கொண்டு காலன் வாய்ப் பட்டானோ? சொன்மின்,' என்றனன். அக்குறுநில மன்னரனைவரும், சந்திராபீடன் சொற்கேட்டுச் செவிபுதைத்து, 'மன்னரேறே, வைசம்பாயனரைக் குறித்து இத்தகைய அமங்கலச் செய்தியை யாம் கேட்கவும் துணியோம். தம்மைப் போலவே, வைசம்பாயனர் யாதோ ரிழிவுமின்றி நூறாண்டுகள் வாழட்டும்,' என்றனர். இதுகேட்டு இளவரசன் சிறிது தேறிப் பிறகு, 'அவனுக்கு என்ன நிகழ்ந்தது? கூறுங்கள்!' என, சிற்றரசர்கள் சொல்லத் தொடங்கினார்கள்.

---

## 13. வைசம்பாயனன் நிலையைச் சிற்றரசர் கூறல்

"'மன்னர் மன்னரே, நீவிர் மகாசுவேதையாரின் ஆச்சிர மம் விட்டு மாசிரமத்துடன் புறப்பட்டீரல்லவா? அன்று நமது சேனை புறப்படவில்லை. மறுநாட் காலையிலேயே புறப் பாட்டுப் பறை முழக்கப்பட்டது. அதுபொழுது வைசம் பாயனர், 'அச்சோதப் பூம்பொய்கை மிகச் சிறியதென்று நூற்களெல்லாம் அணிந்து கூறுகின்றன. இப்புண்ணிய நீரில் ஆடி, அருகில் திருக்கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும்

இறையனாரையும் இறைஞ்சிப் பின்னரே உச்சயினி நோக்கிப் புறப்படவேண்டும். அன்றியும், இது தெய்வத் தன்மைவாய்ந்த திப்பியத் தலம். மண்ணுலகத்தாராய நமக்கு இத்தருணம் போல் இனிக் கிடைப்பதரிது,' என்று சொல்லி அப்பொய்கைக்குச் சென்றார். அவர் ஆங்குள இயற்கை வனப்பெல்லாங் கண்டு கண்டு மகிழ் தூங்கிச் செல்லுந் தறுவாயில், கண்டார் கண்ணையும் மனத்தையும் ஒருங்கே பிணிக்கும் அழகு நிறைந்த பைங்கொடி வீடொன்றைக் கண்டார்; கண்டதும் அசைவற்று, இமைத்தலையும் மறந்து, அதை நோக்கிய வண்ணம், காணாததொன்றைக் கண்டவரென நெடுநேரம் நின்றார். அவர் கண்களில் நீர் தாரை தாரையாய்ப் பெருகிற்று. பேச்சையும் மறந்தார். அவ்வண்ணம் நின்ற அவரை, 'இளமைப் பருவத்தினராதலின், இத்தகைய வனப்பி லீடுபட்டு நிற்கின்றார்,' என்றெண்ணி, 'ஐயன்மீர், உண்மையில் இக்கொடிவீடு மிகுதியும் வனப்புடையதுதான். வாரும்; நேரமாயிற்று. நீராடலாதியவற்றை முடித்துக்கொள்வோம். சேனையும், நமது வருகையை நோக்கிச் சித்தமாயிருக்கின்றது,' என்றேம். எம் மொழிகள் அவர் செவிகளிற் சிறிதும் புகவில்லை. அவர் பழைய எண்ணமொன்றை நினைவுக்குக் கொணர்ந்து வருந்துபவர்போல் வருந்திக் கொடிவீட்டையே பார்த்துக்கொண்டு நின்றார். நாங்கள், 'இஃதென்ன புதுமை!' என்றெண்ணிப் பன்முறை வற்புறுத்தி, அவ்விடம்விட்டுப் பெயர வேண்டினேம். உடனே, அவர் கடுத்த நோக்குடன் எம்மைப் பார்த்து, 'சிற்றரசர்காள், இந்த இடம்விட்டுப் பெயர்ந்துவர என்னால் இயலாது. மன்னரது சேனை, அவர் சென்ற பிறகு, இங்கு வீணில் இருப்பதும் முறையன்று. ஆதலின், நீவிர் சேனையுடன் புறப்பட்டுச் சென்மின்,' எனப் பணித்தனர்.

"இப்பொருத்தமில் லுரையைக் கேட்டு, யாம் பெரிதும் தி, 'எங்கட்கு இங்கிருப்பது தகாது. உண்மைதான். எல்

லாரும் பூசிக்கும் பெருமை வாய்ந்த சுகநாஸருக்குக் குமார ராய்த்தோன்றி, சந்திராபீட மன்னரிடத்துத் தோழமை பூண் டொழுகும் உமக்கிது தகுமோ? சேனையெல்லாம் உமது பார் வையில் இருக்கவேண்டு மென்று சொல்லிப் போனாரே! நீர் அவரைவிட்டுத் தனியே இருக்க எண்ணுவது நீதியோ? உம் மிடம் யாம் வைத்த பேரன்பை நீவிர் சிறிதும் பொருட்படுத் தாது போயினும், இப்பெருங்காட்டில் நம்மைத் தனியே இருக்கவிட்டு, மன்னரைச் சார்ந்து யாம் என்ன கூறுவேம்? வைசம்பாயனப் பெருந்தகையீர், இத்துணை மயக்கமேன்? வேண்டா. விரைவிற் சேனையோடு புறப்படும்,' என்று வெம் மையும் தண்மையுந் தோன்றக் கூறினேம். அதைக் கேட்ட மந்திரியார் மைந்த ரெம்மை நோக்கி, 'எனக்கு நீவிர் போதித் தமை போதும். இளவரசரின்றி ஒரு கணமேனும் தனித் திருக்க என்னா லியலாதென்பது முற்றிலும் உண்மை. ஆயி னும், என் செய வல்லேன்? என் வலி யெல்லாம் எங்கோ பறந்து சென்றுவிட்டது. ஏதோ ஒரு பழமையான கருத்து என்னிடம் தோன்றி என்னை வருத்துகின்றது. இக்கொடி வீட்டை யன்றி வேறு பொருளைப் பார்க்கும் ஆற்றலும், என் கண்களுக்கில்லை. என் காலிரண்டும் விலங்கிடப்பட்டவை போலாயின. அடியெடுத்து வைக்கவும் சிறிதும் இயலாது. என்னுடல் என் வயம் இல்லை. ஒருகால் நீவிர் என்னை வலிய அழைத்துச் செல்லினும், யான் உயிரிழப்பது திண்ணம். இங் கேயே யிருந்தால், இன்னதென்று அறிய முடியாமற் போயி னும், வருந்தியாவது உயிர் பிழைப்பேன். என்னை நீவிர் மீட்டும் மீட்டும் அழைப்பதாற் பயனில்லை. மன்னரின் பக் கத்திலிருந்து, நீவிராவது எப்போதும் பேரின்ப மடைவீராக. மன்னர் சந்திராபீடர்மேல் ஆணை யிட்டுச் சொல்கின்றேன். என்னை யிக்கோலம் காண்கின்ற தெதுவென வெனக்குத் தெரியவில்லை. யானடையும் பெருந்துன்பத்தை நீவிரும்

கண்கூடாகக் காண்கின்றீ ரன்றோ?' என்றார். சிறிது நேரம் சென்றபின், அவ்விடம் விட்டெழுந்து, இழந்த பொருளைத் தேடுபவர்போல எதையோ ஒன்றைத் தேடினார்; பின்னர் நெட்டுயிர்ப் பெறிந்து, அக்கொடி வீட்டில் வந்துட்கார்ந்தார். தேறுதல் கூறப் பல முயற்சிகளை யாம் செய்தும், அவை யெல்லாம் பயனின்றிக் கழிந்தன. உண்டி கொள்ளுமாறு வேண்டி நின்றோம். அவர், 'சந்திராபீடற்கு என் உயிரின் மீது எல்லையிலா வன்பு இருக்கின்றமையின், என்றேனும் என்னை விட்டுத் தானே கழன்றாலும், யான் அதைப் பிரியவொட் டேன்,' என்று கூறி, எழுந்து நீராடினார்; நீராடி, ஆரணிய வாழ்க்கைக் கேற்பச் சில காய் கிழங்குகளை உண்டார். பின் னர் யாமும் சிறிது உண்ணிய தொடங்கினேம். இவ்வண் ணம், எல்லியும் பகலும் இன்பமே கொண்ட மனத்தினராய், ஒருமூன்று நாட்கள் அங்கேயே தங்கியிருந்து, பின்னர், எம் ஆசை பயனின்றி யொழிய இங்கு வந்தோம்,' என்றனர்.

'இம்மொழிகளைக் கேட்ட சந்திராபீடன், 'ஓ! இஃ தென்னை? இது கனவிலும் எதிர்பாராத செய்தியாயிருக் கின்றதே! என் நண்பனுக்கு, இத்தகைய வைராக்கியம் எங்கிருந்து வந்தது? யானும், எத்தகைய தவற்றையும் அவற் குச் செய்திலனே! சிற்றரசரனைவரும், என்னிடத்தும், என் நண்பனிடத்தும் வேற்றுமை சிறிதுமின்றி யொழுகி வருகின் றனர். எல்லா இன்பங்களும் குறைவில்லாமல் நிறைந்திருக்கின் றன. இப்பருவத்துக் கேற்றதன்றே யக்கோலம்! அவன் இன் னும் இல்லற வாழ்க்கையிலும் புகுந்திலன்; பிதிரர், இருடி, தேவர் முதலியோர் கடன்களையும் தீர்க்கவில்லை; தாய் தந்தை யர்க்கு, அவர்தம் மனமொப்பப் பணிவிடை செய்து வாழ்ந்து மிலன். இங்ஙனமாக, ஏனிக்கோலங் கொண்டான்?' என்று அம்மரத்தடியிலேயே யிருந்து நெடுநேரம் ஆலோசித்தான்.

## 14. வைசம்பாயனன் செய்தியை அரசரும் அமைச்சரும் அறிந்து வருந்துதல்

'சந்திராபீடன் பின்னர், உச்சயினி சென்று, புத்திரனது பிரிவால்வருந்தும் சுகநாஸர் மனோரமை முதலியோரைத்தேற்று வதேதனதுகடமையென்றும்,சின்னாட்களில் வைசம்பாயனனைப் பார்த்து வருவதாகப் புறப்பட்டு ஏமகூடஞ் செல்லலாமென்றும் நினைத்து அன்றிரவு அங்கேதங்கி, மறுநாட் காலையில் புறப்பாட்டுப்பறை கறங்கச் சேனையுடன் எழுந்து உச்சயினி வந்தான். இளவரசற்கு முன்னே புறப்பட்டுச் சென்ற சிலரால் நகரெங்கும் வைசம்பாயனனது செய்தி பரவியது. நகர மாந்தர் பலரும் கண்ணீரும் கம்பலையுமாய் நின்றனர். இதைக் கண்ட அரசகுமாரன், 'என் நண்பன் பிரிவுணர்ந்த நகர மாந்தரே யிவ்வாறாயின், அவன் தாய் தந்தையரின் கதி என்னாகுமோ !' என்று எண்ணி, நேரே அரண்மனை சென்று, தாராபீடர், விலாஸவதி முதலியோர் அமைச்சர் பெருந்தகை சுகநாஸரது இல்லம் சென்றிருப்பதாகக் கேள்வியுற்று, அங்கே சென்றான். தன் மைந்தன் நல்லிளமைப் பருவத்தில், மனிதரில்லாப் பெருங்காட்டில், மனமிழந்து தடுமாறி நிற்பதை எண்ணி யெண்ணி மனோரமை தேவி கல்லுங் கரையக் கரைந்தழும் குரல்கேட்டு, சந்திராபீடன் உள்ளே புகுந்து, தந்தைக்கும், சுகநாஸர்க்கும் முன்னாக, வணங்கிய தலையும், வாடிய முகமும், தேக்கிய சிந்தனையு முடையவனாய்க் கீழே உட்கார்ந்தான்.

'தாராபீடன், அவனைச் சிறிது நேரம் பார்த்து, மிக்க துயருடன், மெதுவாக, 'குழந்தாய், நீ உனது உயிரினும், உன்னுடன் பிறந்த நண்பனிடத்துப் பேரன்புடையாய் என்பதை நான் நன்கறிவேன். அன்பு மிகுந்தவர்களிடமிருந்தே பெருந்துன்பம் நிகழ்வது முண்டு. ஆனால், இதனை யுலகம் கொள்ளாது. வைசம்பாயனன்றனை பிறப்பு, ஒழுக்கம், அறிவு, உன்

ணிடம் வைத்த வரம்பிலா அன்பு இவற்றை நோக்குமிடத்து, அவனைப்பற்றி யாமறிந்த செய்திகள் முற்றும் முரணுடையன வாகத் தோற்றுகின்றன. ஆதலின், நீ வைசம்பாயனனுக்குச் செய்த பெரியதொரு குற்றத்தாலேயே இம்மாறுபாடு அவ னில் நிகழ்ந்ததென யான் ஐயுறுகின்றேன்,' என்றான்.

நக்கேட்டார் சுகநாஸர்! அவரது முகம் கறுத்தது. மன்ன வன் அங்ஙனம் மொழிந்தது மந்திரியார்க்குப் பிடிக்கவேயில்லை. ஆதலின், அவர் அரசனை நோக்கி, 'அரசர்க்கரசனே, மதியி னிடத்து வெம்மை காணின் இளவரசனிடத்தும் மாசுண்டாம். தன்னை யின்னு னென்று அறிந்துகொள்ளாது நண்பர்க்குத் துரோக மியற்றிய மாபாவி வைசம்பாயனனே யாவன். நற்குண மனைத்தும் ஒருங்கே நிறையப்பெற்றோனிடத்துக் காரணமின் றிக் குற்றங்காணலினும் பெருந்துயரளிப்பது பிறிதொன்றில்லை கண்டீர்! உலகில், எத்தனையோ என்பொழி யாக்கைகள் உள. அவற்றில் இவனு மொருவன். தீயரது சேர்க்கையான் நல்லோ ரும் அலர்மொழிக் காளாகின்றனர். உயர்குடிப் பிறப்பு, கல்வி யறிவு, செல்லும் வாக்கு முதலியவை இக்கொடியோர்க்கு, பிறர்க்குத் தீங்கிழைப்பதில் பெரிதும் துணையாகி நிற்கின் றன. அவன், சந்திராபீடர் தனக்குப் பிறவித்தோழர் என்பதை யும் போற்றவில்லை. 'நம் தாய்க்கு நாம் ஒரே பிள்ளை,' என்ப தைச் சிறிதும் எண்ணவும் இல்லை. 'பெற்றோர் அனுமதியைப் பெறாது, அவர்தமக்குப் பெருந்துன்பந் தந்து, இவ்வாரண்டி னில், பற்றில்லார்போலத் துறக்கின்றோமே!' என்று அப்பேதை இறையும் கருதிலன். அம்மதியிலாக் கயவனை, ஒரு கிளி யென அரிதின் வளர்த்துக் கொன்னே கலைப்பயிற்சிகளையும் செய்து வைத்தோம். அவ்வீனன், அறிவில்லாச் செந்துவின் வயிற்றிற் பிறக்கவே தகுதியுடையான். எமது பெருந்துன்பத் துக்கு மூலமா யப்பாதகன் எம்மிற் றோன்றினன்,' எனக் கூறி நெட்டுயிர்ப் பெறிந்தார்.

'இவ்வண்ணம் புழுங்கு நெஞ்சினராய அமைச்சர்தம் முகநோக்கித் தாராபீடன், 'அந்தணர் பெருந்தகையீர், நீவிர் சான்றோர். எம்போன்றவர் நுமக்குப்போதிப்பது, சிறு விளக்கி னுதவிகொடு கதிரவனைக் காணுவதொக்கும். பெருமதிபடைத்த பெரியோரெனினும், பெருந்துன்பப்படைகள் கண்டவிடத்து, மாரிக்காலத் தோடைகளென்னக் கலங்குகின்றனர். அமைச்சரே, இளமையை இறையும் தவறின்றிக் கழித்தானிப்புவியில் உளனோ? யௌவனம் முற்றியவிடத்துப் பெற்றோரிடமுள பேரன்பைப் பெரும்பான்மையர் இன்னணமிழந்து நிற்கின்ற னர். இஃது அப்பாழும் யௌவனத் தியற்கை கண்டீர்! நம் வுரைகளானும், அறவுரைகளானும் தேற்றிச் சீராட்டிப் பாராட் டவேண்டிய மைந்தனை இங்ஙனம் தெழித்தல் தீது. சான்றோர் மறுவிலா மனத்தர். அவர்தம் வாய்ச் சொற்கள் பலிக்கும் பான் மைய; வாழ்த்துரைகள் வரமென நன்மையைப் பெருக்கும்; சினத்தா லெழுந்த கொடுஞ்சொற்கள் சாபமா யமையும். தாம் வைசம்பாயனனைக் குறித்துக் கூறிய இக்கடுமொழிகள், என்னு ளத்தைப் புண்ணுக்குகின்றன. தானே வைத்து வளர்த்தமரம், வளர்ந்து முற்றியபோது கருவிடத்தைப் பொழிந்தாலும், வெட்டியெறிய எவன் மனமிசையும்? பெரியீர், நீவிர் குழந்தை வைசம்பாயனனிடத்துக் கொண்ட கோபந் தணிக. அவன் எத்தகைய தகுதியில் செயலையும் இயற்றினனல்லன். அவனது துறவுக்குப் பெரியதொரு காரணமுமிருக்கும். காரணமின்றேல் துறவு ஏன்? தீய என்று நமக்குத் தோற்றுவன நல்லனவாய் இறுதியில் முடிவதும் உண்டு. செய்த செய்கை தீது எனினும், காரணத்தை நாம் நன்னர் அறிய, வைசம்பாயனனை அழைத்து வரல் வேண்டும்,' என்றான்.

'மன்னர் மன்னன்றன் மறுவிலா மொழிகளை மந்திரியார் கேட்டு, மன்னனை நோக்கி, 'அரசரே, இயற்கையான அன்பா லிங்ஙனம் மொழிந்தீர். இளவரசனை விட்டுப் பிரிந்து, அவன்

மே தங்குவதுபோன்ற அடாத செயல் பிறிதொன்று மில்லை,' என்றார்.

'இது கேட்ட இளவரசன், அமைச்சரை நோக்கி, 'பெரியீர், எனது நண்பன் வைசம்பாயனன் ஈண்டு வாராமலிருப்பது என் குற்றமன்று. எனினும், எந்தையார் வேறாகக் கருதுகின்றனர். குற்றமென்னின், அதுவாயினும் நான் ஏற்றுக் கொள்கின்றேன். இக்குற்றத்துக்குத் தக்க கழுவாயை நான் தேடிச் செய்துகொள்ளவேண்டும். வைசம்பாயனனை உஞ்சயினிக்கு அழைத்து வர, நான் இவ்விடம் விட்டுப் புறப்படுவதற்கு எந்தையாரிடமிருந்து தாம் உத்தரவு வாங்கித் தருவீராக. யான் குதிரையேறி முன்னமே சென்று வழிபோதலின், இடையில் எனக்கு எவ்வித இடையூறும் நேராது. பாசறை மிகப் பெரியதொரு சேனையை வைசம்பாயனன் பொறுப்பில் விட்டு விட்டு, முன்னே வந்தேன். வைசம்பாயனன் பின்னே வருகுவான் என்ற எண்ணமே வரும்போது எனக்கிருந்தது. யாம் தோன்றிய நாண்முதல் இதுவரையில், ஒருவரை யொருவர் விட்டுப் பிரிந்திலம். நான் சென்று, எப்படியும் வைசம்பாயனனை இவ்விடம் அழைத்து வருவேன். விடை தருக,' எனத் தொழுது நின்றான்.

'அமைச்சர், சந்திராபீடனது கருத்தை அரசனுக்குத் தெரிவிக்க, அவனும், 'ஆம்; சந்திராபீடன் போதல் மிக நன்று. அவனன்றி மற்றெவருக்கும் வைசம்பாயனனை அழைத்து வருவதில் திறமையில்லை. குழந்தை வெகுதூரம் போகவேண்டியவன். சோதிடரைக் கொண்டு, நல்ல நாளை ஆய்ந்து, அந்நாளில் அனுப்புக,' என்றனன். இளவரசன், உடனே தேவி விலாசவதியிடத்தும், மனோரமையிடத்தும் உத்தரவு பெற அந்தப்புரஞ் சென்றான். அவர் பெரிதும் வருந்தினரெனினும், அவனது தனிமையையும், வைசம்பாயனன் வருகையையும் உன்னி விடை தந்தனர்.

'சந்திராபீடன், சோதிடர்களை நாள் கேட்டான். அவ ரெல்லாரும், 'இளவரசரே, இப்போதிருக்கும் கிரகங்களின் நிலைகள் மிக்க கேடு தருவனவாம். எனினும், மனம் தெளிந் திருக்குமாயின் புறப்படலாம்,' என, 'ஆயின், நாளைக்கே புறப் படலாமென்று அரசர்க்கு மொழிமின்,' என, அவரும் அவ் வாறே, 'நாளையே புறப்பாட்டுக் கேற்ற காலம்,' என்றனர்.

'சந்திராபீடன் மீண்டும் விலாஸவதியின் அந்தப்புரம் சென்று விடை பெற்றுத் தந்தையை வணங்கினன். தாரா பீடன் இளவரசனைப் பார்த்து, 'குழந்தாய், நான் உன்மீது குற்றஞ் சாற்றினேனெனக் கவலற்க. நின் நற்குணங்களை நேரிற் கண்டு இவ்வரசை யுன் தோளில் ஏற்றி வைத்தேனே யன்றிப் புதல்வன் என்னும் அன்பினால் அங்ஙனஞ் செய்தே னில்லை. அரசானது, வலி குன்றியவனிடத்தும், தஞ்ச மென்றவரை அஞ்சலென ஆதரிக்காதவனிடத்தும் நில்லாது. நிறை குண மெனும் கயிற்றால், குடிகளின் மனத்தை இழுத்துக் கட்டு வதில் எவனுக்கு ஆற்றலிருக்கின்றதோ, அவனிடத்தே செங் கோல் நிலை பெறும். உலகத்தை மகிழ்விக்க, இனி நீ முயலல் வேண்டும். யான் சிறிதும் தவறின்றி நீண்ட காலம் இவ்வர செனும் பெரும்பொறையைத் தாங்கி வந்தேன்; ஒரு பொழு தும் பேராசைகொண்டு, குடிகட்கு ஊறுசெய்தேனில்லை; குருக் களை இகழ்ந்தறியேன்; சிற்றின்பப் பற்றுக்கொண்டு பேரின்ப வாழ்க்கையை வெறுத்தே னில்லை; நீ தோன்றியதால், பெரும் பேறு இன்னும் பெற்றேன். இனி என் மனத்தில் இரண்டு குறைகளே யுண்டு: ஒன்று, உனக்கு ஒரு கன்னிகையை தேடி மணம் புரிவித்து மகிழ்தல்; இன்னொன்று, முன்னோர் சென்ற நெறி பற்றி அரணியஞ் சென்று சாந்தி மார்க்கம் நாடு தல்,' என்று கூறி மைந்தனை வழிவிட்டான்.

## 15. சந்திராபீடன் அச்சோதஞ் சென்று தன் நண்பன் கிளியானமை கேட்டு இதயம் வெடித்திறத்தல்

'சந்திராபீடன் புறப்பட்டு நிற்கையில், இந்திராயுதப் பரி கொண்டுவந்து நிறுத்தப்பட்டது. அப்பரி, பிரயாணத்தில் ஊக்கமுடையதாகக் காணப்படாது, சிறிது புறமொதுங்கி நின்றது. சந்திராபீடன் அதைச் சிறிதும் பொருட்படுத்தாது அதன்மீது ஞெரேலெனப் பாய்ந்து, கலினங் கைக்கொண்டு, வெளிச்சென்றான். சிறுபடையொன்றும் அவனைத் தொடர்ந்து சென்றது. அவன் வழியில் நேரும் எவ்விதத் துன்பத்தையும் கருதாது பிரயாணம் செய்யலானான். இடையில் மாரிக்காலம் வந்துற்றது. மேகமெல்லாம் ஒருங்கே திரண்டு மழைமாரி சொரிந்தன. காதம்பரியின் மீது காவலன் மனம் பறந்து சென்றது. அவன் கண்களில் நீர்த்துளிகள் பெருகின. அவன், உயிர் உடலில் தங்குவதற்காக மட்டும் உணவுண்டு, பகற் பொழுதில் பிரயாணம் செய்தும், இரவில் தங்கியும், இவ்வணம் மூன்றி லிரண்டு பங்கு வழியைக் கடந்தான்.

'அவன் செல்லும்போது ஒருநாள், மேகநாதன் தன்னை நோக்கி வருவதைக் கண்டான். மேகநாதன் அருகில் வந்ததும், இளவரசன் அவனைப் பார்த்து, 'மேகநாத, அச்சோதமெனும் பொய்கைக் கரையில் என்னுருயிர்ப் பாங்கன் வைசம்பாயனனைக் கண்டனையோ? அவன் செய்தி என்னை?' எனக் கேட்டான். மேகநாதன், 'அரச குமாரே, வைசம்பாயனர் இங்கிருக்கின்றார் என்ற செய்தியே என் செவியில் விழவில்லை. அச்சோதப் பொய்கைக்கு யாம் செல்லுமுன்னரே, கேயூரகன் பத்திரலேகை முதலியோர், மாரிக்காலம் தொடங்கியதாகலின், நும் பெற்றோர் எம்முடஞ் செல்லுவதைத் தடுப்பினும் தடுத்து

விடலாமென எண்ணி, என்னை வழியிற்றடுத்து, உமது வர வைத் துரிதப்படுத்த நான் செல்லுவது நன்றெனக் கூறினர். யானும், அவர் கூறியாங்கு நும்மிடை வந்தேன். செய்தியிது,' என்றான். சந்திராபீடன், இதைக்கேட்டு மேகநாதனை நோக்கி, 'பத்திரலேகை இது பொழுது காதம்பரியின் அரண்மனை சேர்ந்திருப்பாளா?' என்றான். மேகநாதன், 'அரசரே, வழி வருத்தம் நேராது இருப்பின் சேர்ந்திருக்கலாம்,' என்றான். இதைக் கேட்டதும் இளவரசன் மனம் புழுங்கியது. மாரிக் காலத்தில் இன்பமாய்த் தோற்றும் பொருள்களனைத்தும் துன் பந் தருவனவாகவே அவன் கண்ணிற் பட்டன. இந்நிலையில் அச்சோதம் சென்றடைந்தான் சந்திராபீடன். நீரானும், மலரா னும், மணத்தானும், அனத்தானும், பிறபுள்ளானும், யாண்டும் பசுமையான தோற்றத்தானும் கண்ணும் மனமும் களிப்படை யும் நிலையில் அப்பொய்கை தோன்றிற் றெனினும், இளவர சற்கு அஃது இறையும் இன்பந் தரவில்லை.

'சந்திராபீடன் பொய்கையருகிற் சென்று, தன்னுடன் வந்த பரியாளரனைவரையும் நோக்கி, 'என் நண்பன் நம்மைக் கண்டு நாணத்தான் எங்கேனும் செல்லினும் செல்வான். ஆத லின், நீவிர் குளக்கரையி னெப்புறமும் காத்து நின்மின்,' என ஆணை தந்து, தன்னந் தனியனாய்க் குதிரைமீ திருந்தே எப்புறமும் தன் நண்பனைத் தேடிச்சென்றான்; எனினும், எவ் விடத்தும் அவனைக் கண்டிலன். நண்பன் அங்கு இருந்ததற் கான குறிகளும் அவனுக்குக் காணப்படவில்லை. ஆதலின், அவன், 'என் நண்பன் என் வரவை ஒரு வேளை முன்னரே நன்கறிந்து யாண்டோ சென்றனன் போலும்! எங்ஙனமா யினுமாக; எது வரினும் வருக; நண்பனைக் காணாது எக் காரணத்தானும் நாடு திரும்பேன். மாசுவேதையார் இச் ஙய அறியினு மறிவர். ஆதலின், அவரிடம் சென்று

வினவலாம்,' என்றெண்ணி, அவளது ஆச்சிரம மடைந்தான்.

'அங்கே, பெரியதொரு சிலாதலமிசை மகாசுவேதை முகங்கவிழ்ந்து வதிய, தரளிகை அவளுக்குத் தேற்றரவு கூறிக் கொண்டிருக்கும் காட்சியைக் கண்டான். கண்டதும், 'ஆ! காதம்பரிக்கு யாதேனும் நேர்ந்ததோ! மகாசுவேதையார், என்னைக்கண்டு ஒருபோதும் இவ்வண்ணமிராரே! ஈசா! இதுவோ நின் கருணை!' என்றெண்ணி, அருகிற் சென்று, தரளிகையை நோக்கி, 'அம்மே, இஃதென்னை?' என்றனன்.

'இம்மொழி மகாசுவேதையின் காதிலும் விழுந்தது. அவள் மனத்துயரை அடக்க முடியாமல், நெஞ்சம் அழுதழுக்க மெல்லிய குரலால், இளவரசனை நோக்கி, 'மன்னவ நீ, என்னிலையை என்னென்று கூறுவது? நீவிர் உஞ்சயினி சென்றீரென்று கேயூரகன் சொல்லக்கேட்டு, என்மனம் வருந்தியது. சித்திரரதனது எண்ணமும் என்னால் ஈடேறிற்றில்லை. உமக்கும் யான் எந்நன்றியும் செய்யவில்லை. காதம்பரி தன் கருத்துக்கிசைந்த கணவனுடன் கூடி வாழும் பெருநிலையையும் என் கண்கள் கண்டு களிக்கவில்லை. இவையெல்லாம், மேன்மேலும் என்மனத்தில் வெறுப்பை விளைத்தன. ஆதலின், கடுந்தவம் மீண்டும் இயற்றுங் கருத்தினளாய் யான் இவண் வந்தேன். நாடோறும் என்தொழில்கள் குறைவில்லாது நடந்து வந்தன. ஒரு நாள், அந்தணச் சிறுவனொருவன் இவ்விடம் அலைந்து திரியக்கண்டேன். அவன் உம்மைப்போலவே வடிவங் கொண்டவன். அவன் முகத்தைப் பார்த்தபோது கல்விக் கடலின் கரைகண்டவன் எனத் தோற்றியது. அவன் செயல்கள் அவன் தோற்றத்திற்கு முற்றிலும் மாறாயிருந்தன. அவன் தன்னரும்பொருளைப் பறிகொடுத்தான்போல வெறித்துப் பார்ப்பதும், நிற்பதும், சிறிது நேரம் சிரிப்பதும், கண்களில் நீரைத் தாரைதாரையாகப் பெருக்குவதுமாக இருந்தான். பின்பு வேறு

எதையும் பொருட்படுத்தாமல் என் பக்கத்தில் வந்து என்னைப் பல முறை உற்று நோக்கி, 'அழகின் வடிவமே, நின் பிறப்பு, வடிவம், வயது இவையனைத்தும் இக்கொடுந் தொழிற்கு ஏற்றவையாகா. மலர்போன்ற நின்மேனியை ஏனிக்கடுந்தவத் தால் வாட்டுகின்றனை? இதை நோக்க என்மனம் மிகவருந்து கிறது' என்று பலபடப் பேசினன். இவ்வாறு கூறியதும், யான் வேற்றிடஞ் செல்லத் தொடங்கிக் கடவுட் பூசைக்காக மலர் கொய்து, தரளிகையை அழைத்து, 'தரளிகாய், எவனோ ஓர் அந்தணச் சிறுவன் பித்தன்போல இவ்விடம் சில மொழி களைச் சொன்னான். அவனை இனி இங்கு வரவிடாதே. வந்தால் அழிவு நேருமென்று உறுதியாய்ச் சொல்லிவிடு,' என்றேன். ஒரு நாள் நள்ளிரவில், நளிர்மதியை உற்று நோக்கி, 'மதியே, நீ உலகெங்கணும் அமுதக் கதிர்களைப் பொழிகின்றனையே! அதுபோல என்னாயகன்மீதும் பொழியாயோ?' என்று கூறி நான் என் நாயகன் புண்டரிகனை மனத்தில் கருதிக்கொண் டிருந்தேன். அத்தருணத்தில் அப்பித்தனான அந்தணச் சிறு வன் அடிமேல் அடி வைத்து மெல்ல நடந்து என்னை நோக்கி வந்துகொண் டிருந்தான். அப்பொழுது, அவனது மதங் கொண்ட நிலை என்னை அச்சுறுத்தியது. என் உடல் நடுங் கியது. 'இவன் என் பக்கத்தில் வந்து என்னுடலை ஒரு வேளை தொடுவனாயின், என்னுயிர் போய்விடுமே! இத்தனை நாளாக என்னுயிரைப் போற்றியது வீணாகுமே!' என்று கருதினேன். அவனும் என்னை நெருங்கிப் புன்மொழிகள் பல கூறி, 'நங்காய், நானும் என்னுயிரும் இனியுன் அபயம்! அபயம்!' என்றான். இதைக் கேட்ட நான், கடுஞ்சினங் கொண்டு, 'அடாதீயோய், பதரே, கடையா, என் நினைத்தாய்! நின் தலையில் இடிவிழாதோ? புன்மொழி கூறிய நா அற்றுப் போகாதோ? இறைவரே, இதோ பாருமித் தீயனை! மனிதனாய்ப் பிறந்தும், கலைகளைக் கற்றும், உயர் குடியிற் பிறந்தும்,

கிள்ளைப் பிள்ளையெனச் சிறிதும் அறிவின்றி என்னைப் பேசத் தொடங்கினன். ஆதலின், அக்கிளியின் பிறப்பையே இவன் அடைக. யான் என் தலைவன் புண்டரிகனை யன்றி, மனத்தாலும் பிறரை நினையேனென்னின், என் சொல் இவன் திறத்துப் பலிப்பதாக,' என்று சபித்து முடித்தேன். அவ் வாலிபன், உடனே அடியற்ற மரமென மண்ணிற் சாய்ந்து உயிர் துறந்தான். அவனைச் சேர்ந்த சில ஏவலர், அது கண்டு அவன்மீது வீழ்ந்து, 'ஐயகோ! அம்மவோ!' என அழு தரற்றினர். அப்பணியாளரை, 'இறந்தோன் யாவன்?' எனக் கேட்டேன். கேட்டேற்கு, 'உமது உயிர் நண்பன்' என மறு மொழி தந்தனர்,' என்று கூறி, நாணத்தாலும், துயரத்தாலும் பிடியுண்டு, கண்ணீர் ஆறாய்ப் பெருக்கி யழுதாள்.

'இதை மிக்க பொறுமையுடன் சந்திராபீடன் கேட் டான்; கேட்டுத் துயரெனும் கடலின் கோடி கண்டான். 'மகா வேதையீர், பாக்கியம் புரிந்திலாப் பாவி நான். நீவிர் பெரு முயற்சி செய்தும், காதம்பரி யெனுங் காரிகையைப் பெறும் பேற்றைப் பெற்றிலேன். என் செய்வேன்! இப்பிறப்பில் இவ் வரப்பி லின்ப மில்லாது போயினும், மறு பிறப்பிலேனும் அப் பேறு யான் பெறுமாறு திருவுள மிரங்க வேண்டும்,' என்று கூறியவளவில், அவன்றன் மென்மையும் நன்மையும் நிறைந்த இதயம் படீரெனப் பிளந்தது. அருகிலிருந்த தாரிகை மன்ன னைத் தன்னிரு கைகளாலும் தாங்கி நின்று, மகாசுவேதையை நோக்கி, 'எம்பெருமாட்டியீர், காணீரோ? நன்கு நோக்கிப் பாரும். இளவரசர் கண்டம் சாய்ந்தது. ஓ! உணர்விழந்தார்! ஆவா! உயிர்ப்படங்கினர்! மன்னர் மன்னரே! சந்திராபீடரே! உருவுற்ற மதனரே! அந்தமில் அழகரே! காதம்பரி காதலரே! உயிரிழந்தீரோ!' எனக் கோஒஒஒ வெனக் கதறியழுதாள்.

'தாரிகையின் புலம்பொலியைக் கேட்ட மகாசுவேதை, இளவரச னருகில் வந்து, அவனது மறுவிலா முகத்தை

நோக்கி விம்மி விம்மி அழுதாள். 'அந்தோ! பாவி! பழி காரி! தீய தவத்தாய்! என்செய்தாயடீ! உறுதுயரொழித்து உலகெலாம் புரக்கும் தாராபீட மன்னரது குலத்தை வேரறுத் தாயே!' என்று தன்னைத் தானே பல முறை நொந்துகொண்ட னள். சந்திராபீடன் உயிர் துறந்தது கண்ட அவனது இந் திராயுதப் பரி, பரி யுருவம் நீக்குமாபோலக் கதித்துக் கனைத்

## 16. காதம்பரியின் வருகை

'முன்னரே, சந்திராபீடன், காதம்பரியினிடம் தன் உயிர்ப்பாங்கி பத்திரலேகையை அனுப்பினு னல்லவா? பத்திர லேகையின் வாயிலாக இளவரசன் வருகையைக் காதம்பரி அறிந்தாள். தன் பெற்றோரிடம், 'மாசுவேதையைக் காண யான் போகவேண்டும்,' எனக் கூறி விடை பெற்று, ஆடை யணிகல ஞதியவற்றால் தன்னை நன்கலங்கரித்துக் கேயூரகன் முன்னே சென்று வழி காட்டப் பத்திரலேகையின் கரம் பற்றி, மதலே கையுடன் இன்னுரையாடி மகிழ்ந்து, வழி வருத்தம் மறந்து, சந்திராபீடனைக் காணவேண்டுமெனுங் கருத்து முற்றி, அன மென நடந்து அச்சோதம் வந்தாள்.

'வந்துமென்? அமுதெடுத்த கடலெனவும், பூந்தா துகுத்த முளரியெனவும், ஒளியில்லா மதியெனவும், பொரு ளில்லாச் சொல்லெனவும் உயிர்நீத்த சந்திராபீடனது உடலைக் கண்ணுற்ருள். 'ஆ! என்னுயிரே!' எனக்கதறிக் குப்புற்று மண் ணிற் சாய்ந்தாள். மதலேகை, 'அந்தோ!' எனக் கதறிக் காதம் பரியைக் கரங்களாற் ருங்கினள். பத்திரலேகைப் பாவையும், பதைத்து நினைவு தடுமாறிப் படியிற் சாய்ந்தாள். இன்னணம் சிறிதுநேரம் கழிந்தது. காதம்பரி நினைவு பெற்றெழுந்து, இள வரசன் முகத்தை இமையாமற் பார்த்துப் புலம்பலொழித்து,

அசையாதிருந்தனள். இந்நிலையை மதலேகை கண்டு, 'எம் பெருமாட்டியீர், ஏன் மௌனம்? கதறியழுதாலன்றி யித்துயர் நீங்குவதோ? நீர் அழாதிருக்கின், வரம்புடைத்துச் செல்லும் பொய்கையென நும்மிதயம் பிளந்துபோம். கந்தருவ குலம் இருக்கவேண்டுமென்று நினைத்தால் இவ்வாறிருப்பது தகாது. மதிரையார், சித்திரரதர் என்னு மிவரைக் குறித்தாவது நீர் உயிருட னிருக்கவேண்டும்,' என்று வேண்டினள்.

'அங்ஙனம் வேண்டின மதலேகையைக் காதம்பரி நோக்கி, 'பேதாய், என்னிதயம் கல்லினும் திண்ணிது; வச்சிரத்தினும் வலிது. அது பிளவுபடுவதேது! இறப்பதற்கே பிறந்த யான் என் அன்புடைத் தலைவரது உடலை யவ்வமையமேலா பெற்றேன். பிழைத்தாற் கூடி வாழ்வேன்; இன்றேல், இன்னுயி ரீவேன். அதனாலென் றுன்பமெலாம் ஒழியும். என் றலைவர் என் பொருட்டன்றோ ஈண்டுவந்து இன்னுயிரிழந்து என்னைப் பெருமைப் படுத்தினர்? கண்ணீர் விட்டுக் கரைதலென்? அச் செயல் மிக இழிவானதுகாண்! நாதர், மன்னிய புண்ணிய வுலகஞ் சென்று பேறுபெற யான் அழுவதோ? நன்று! நன்று! நீ எனக்கு நல்லையாயின், அன்புடையையாயின், என் தாய் தந்தையர்தம் ஆராத் துயரத்தை மாற்று. எனக்கு மணமுடித்து மகிழ விருந்த அவர், நின்திறத்து அதனைச்செய்து மகிழட்டும். யானிறந்த பின் எனக்கு இலாதகுறை தீர உன்னிடத்தொரு மைந்தன் தோன்றட்டும். நீ நேரே என் கன்னி மாடஞ் சென்று, என் தலையணைப் பக்கத்துள்ள காமனார் படத்தைக் கிழித்தெறி; என் பொருள்களை யெல்லாம் மறையவர்க்கு வழங்கு; உனக்கு அவற்றில் ஏதாவதேனும் வேண்டுமாயின், எடுத்துக்கொள். இதோ யான் என் தலைவர் கழுத்தைக் கட்டிக்கொண்டு, அவருடன் காட்டேறி உயிர் துறப்பேன்,' என்று கூறி, அணிமையிலிருந்த மாசுவேதையெனும் ஆருயிர்ப் பாங்கியைக் கட்டி யணைத்து, 'தோழி, நின் கணவர் மீட்டும்

வருவார் என்ற நினைவால் நீ உயிர் தாங்கி நிற்கின்றனை. எனக்கு எல்லா வகையாலும் அவ்வாசை ஒழிந்து போயிற்று. ஆதலின், மறு பிறப்பிலேனும் அவர் என்னுடன் கூடியிருக்க விரும்புகின்றேன்,' என்று கூறி, சந்திராபீடன் திருவடிகளை, வியர்வை நீரென அமுத தாரைகளைப் பெருக்கும் தன் கரங்களா லெடுத்து மடிமீ திருத்திக்கொண்டனள். அவ்வுடல், காதம்பரி கைபட்டதும், உயிர்ப்புற்றதெனத் தோற்றியது. பின்னர், அவ்வுடலிலிருந்து மதியின் காந்தியுடன் ஓருருவம் வெளிப்போந்தது. ஆனால், அது கண்களுக்கு நன்கு புலப்பட வில்லை. அவ்விடமெல்லாம் ஒரே வெண்மை நிறமா யிருந்தது. சிறிது நேரஞ் சென்று, செவிக்கமுதென விசும்பில் ஓர் அசரீரி எழுந்தது. அது, 'குழந்தாய், மாசுவேதாய், மீட்டும் யானே உனக்குத் தேறுதல் கூறுகின்றேன். உனது இன்னுயிர்த் தலைவன் புண்டரிகப் பெருந்தகையினுடல், எனது காந்தியால் குளிர்ப்பிக்கப்பட்டு நின்னை அணுமுதற்குச் சித்தமா யிருக்கிறது. எனது மற்றோருடலான இச்சந்திராபீடனுடல் சாபத்தினின்றும் நீங்கியது. இஃது இயற்கையாகவே அழிவற்றது; காந்தி மயமானது. காதம்பரி தன கைகளாற் றொடுதலா னிவ்வுடல் மிக்க களிப்படைந்திருக்கிறது. நுந்தம் நம்பிக்கையி னிமித்தம் இவ்வுட லீண்டே யிருக்க. உயிர் பெற்று எழும் வரையில் இளவரசனுடலைப் பெரிதும் போற்றி வருவீராக,' என்றது.

'பாவை பத்திரலேகையும் அக்காந்தி தன்மேல் படப் பெற்று, அறிவு பெற்றெழுந்து, வெறி கொண்டாளென விரைவினோடிப் பரிவர்த்தகன் எனும் குதிரைப்பாகன் கையினின்று இந்திராயுதத்தைச் சடக்கெனப் பற்றி யிழுத்துக்கொண்டு சென்று, அதனுடன் அச்சோதப் பொய்கையில் வீழ்ந்து அமிழ்ந்தனள்.

## 17. இந்திராயுதம் கபிஞ்சலனுக்குத் தன் வரலாறு கூறல்

'பின்பு, நீரிற் சிக்கிய பாசிக்கொத்தென நீண்ட சடை முடியுடனும் அச்சம் நிறைந்த உருவுடனும் ஒரு முனிகுமாரன் அப்பொய்கை நீரினின்றும் பொள்ளென வெளியேறி வந்தான். மாசுவேதை அவனைக் கண்டு திகைத்து நின்றாள். முனி குமாரன் அவளருகு வந்து, மிக்க துயருடன், 'அன்னையீர், மறுபிறப் பெடுத்து வந்த என்னை யின்னனென் றறிதிரோ?' என்றான். மாசுவேதையின் மனத்தில் இன்பமும் துன்பமும் ஒருங்கே நிறைந்தன. அவள் பொருக்கென எழுந்து முனிகுமாரன் திருவடிகளிற் பணிந்து, 'நீர் கபிஞ்சலரன்றோ? உண்மையும் அறியாமற் போவேனோ யான்? ஐய, இது நிற்க. புண்டரிகரை விண்மீ தெடுத்துச்சென்றவர் யாவர்? நீவிரேன் ஈண்டுத் தனித்து வந்தீர்? இதுகாறும் எங்கிருந்தீர்?' என வினவினாள். அம்முனி குமாரன், 'கந்தருவமாதரே, கூறுவன்; கேண்மின்: நீர் புருடனை யிழந்து புலம்பித் தவிக்கையில் புண்டரிகனை விண்மீ தெடுத்துச் சென்ற தேவ புருடனைப் பின்பற்றி யான் சென்றே னல்லவா? அவன், என் வினாக்களுக்கு ஒன்றும் மறுமொழி கூறாமல், உடு மண்டிலந் தாண்டி, மதி மண்டில மடைந்தான். ஆண்டு, மகோதயம் என்றொரு சபை யிருந்தது. அவன் அச்சபையிற் சந்திரகாந்தச் சிலையொன்றின்மேற் புண்டரிகரது உடலைக் கிடத்திப் பின்னர் என்னை நோக்கி, 'கபிஞ்சல, நான் சந்திரன். உன் இன்னுயிர்த்தோழன் புண்டரிகன், காமனால் உயிர்விட, குற்றம் ஏதுமிலா என்னை நோக்கி, 'ஓ! தீயாய்! பாவி சந்திரனே! என்னை நின் தண்கதிர் கொண்டு தவிக்கச் செய்து, என் மனத்துக் கிசைந்தாளைக் கூடி மகிழ முடியாமல் என் ஆவியை வாங்குகின்றாய். அங்ஙனமே நீயும், கன்மபூமியிற் பிறந்து, அப்பிறப்பிலும் மறுபிறப்பிலும் நின் மனத்துக் கின்ப மான மனைவியுடன் கூடி மகிழப்பெறாமல், மனநொந்து உயிர்

விடப் போகின்றனை!' என்று பெரிய சாபந் தந்தான். அச் சாபத்தீயால் எரிக்கப்பெற்ற யான், 'என்னே யிது! குற்றம் தன்னிடத்திருக்கச் சிறிதும் அறிவின்றி என்னையேன் சபித் தான் இவன்?' என்று சினந்து, 'நீயும் என்போலவே யின்ப துன்பங்களை யனுபவிப்பாய்காண்!' என்று மறு சாபந் தந்தேன். பின்னரென் சினம் அவிந்தது. சிறிது ஆலோசித் தேன். மகாசுவேதை என் தண்கதிர்களிலிருந்து பிறந்த அர மகளிர்தம் கூட்டத்தில் தோன்றிய கௌரியின் மகள். அவள் தானே தன் மனத்துக்கிசைந்த நாயகனாக இவனை வரித்தனள். இவன் தானே செய்த இக்குற்றத்தால் என்னுடன் மண்ணுல கில் இரு முறை பிறக்கவேண்டும். 'இப்பிறப்பிலும் மறுபிறப்பி லும்' என்னுஞ் சொற்றொடர் முனி குமரன் வாயினின்றும் பிறந்திருக்கின்றது. ஆகலின், சாபக் கேடு நெருங்கும்வரை இவ்வுடற்குத் துன்பம் சிறிதும் அணுகாமலிருக்க யானிதனை இவண் எடுத்து வந்தேன்; மாசுவேதைக்கும் தேறுதல் கூறி னேன். நீ இவ்விடம்விட்டுப் பெயர்ந்து, இவன் தந்தையாராய சுவேதகேது மாமுனிவரிடம் சென்று நிகழ்ந்ததைத் தெரிவி. அவர் முற்றுமுணர்ந்த நற்றவத்தினராதலின், இதற்கு ஏதே னும் பரிகாரம் செய்தலும் கூடும்,' என்றான்.

'நானும், நண்பனை யிழந்த துயரம் மனத்திற் கிடந்து வருத்த, ஒன்றும் தோன்றாமல், தேவ நெறி பற்றிச் சுவேத கேதுமாமுனிவரிடம் ஓடினேன். வழியிடையில் சினவுருவங் கொண்ட வொரு தேவ புருடரைத் தாண்டிவிட்டேன். அவர் என்னை எரியெழ விழித்து நோக்கி, 'தீயோய், இவ்வளவு அகன்ற நெறியிலும் ஒரு குதிரையைப்போல நீ என்னைத் தாண்டி யோடினை யாதலின், மண்ணுலகில் நீ குதிரையாய்ப் பிறக்க!' என்று சபித்தார். யான், 'ஐயன்மீர், யான் என் நண் பனைப் பிரிந்த துயரான் மனமாழ்கித் தாண்டிவிட்டேனன்றி நும்மை அவமதித்து இச்செயல் செய்யவில்லை. ஆகலின், பெரி

யீர், இச்சாபங் கெடத் திருவருள் புரிதல் வேண்டும்,' என்று
கூப்பிய கையனாய் மொழிந்தேன். அவர் என்னை நோக்கி,
'யாம் கூறியது மாறாது. ஆயினும், நீ யாருக்கு ஊர்தியா
வையோ, அவன் ஒருநாள் இறப்பன். அதே கணத்தில் நீயும்
நீரில் மூழ்கிச் சாபம் நீங்கப்பெறுவாய்,' என்றார். யான் மீட்டும்
அவரை நோக்கி, 'ஐயன்மீர், என்னருமைத் தோழனான
புண்டரிகனும், சந்திரனும் சாபத்தினால் மண்ணுலகத்துப்
பிறத்தற்குரிய ராயினர். ஆதலின், யான் குதிரையாகப் பிறப்பி
னும் எனது நண்பனுடன் இருந்தே காலங்கழிக்கத் திருவுளம்
பற்றவேண்டும்,' என்றேன். பின்னர் அவர் சிறிதுநேரம் அசை
வற்ற மடுவில் துயில் புரியும் மீனைப்போல இருந்து ஆலோ
சித்து, மீட்டும் என்னை நோக்கி, 'மண்ணுலகில் மக்கட்பேறு
பெற வெண்ணித் தவமியற்றும் தாராபீடனெனும் மன்னற்
குத் தண்மதிக் கடவுள் மகனாய்ப் பிறக்கும்; உன் ஆருயிர்ப்
பாங்கனான புண்டரிகனும் அம்மன்னனது மேலமைச்சாய
சுகநாசப் பெருந்தகைக்கு மகனெனப் பிறப்பான். அவ்விருவ
ரும் விள்ளா நட்புப் பூணுவர். தாராபீடன் மகனாய்ப் பிறந்த
தண்மதிக் கடவுட்கே நீ ஊர்தியாவாய்,' என்றனர். உடனே
யான் விண்ணினின்று பெருங்கடலில் வீழ்ந்து அச்சுவ வுருக்
கொண்டு வெளி வந்தேன். எனினும், குதிரைப் பிறப்பினும்
எற்கு முற்பிறப் புணர்ச்சி மாறிற்றில்லை,' என்றான்.

'கபிஞ்சலன் கூறிய விம்மொழிகளை மகாசுவேதை
ஆழ்ந்த கருத்துடன் கேட்டு, வைசம்பாயனனாதியோர் பிறப்
புக்களின் உண்மையை நன்கறிந்தாள். அறிதலும், அவள்
கண்கள் பலபலவெனத் தாரை கான்றன. தனது தலைவனை
மனத்துக் கொண்டு, 'என் இன்னுயிர்த் தலைவீர், புண்ட
ரிகச் செம்மலே, மறு பிறப்புற்றும் என்னிடம் வைத்த
அன்பை இறையும் மறந்திலீர். நீவிர் விண் புகுந்தும், வேற்
றுருக்கொண்டு துயர்மாற்ற வென்னெதிரிற் றோன்றியும், யானை

தைச் சிறிதுமறியாது இரக்கமிலா வரக்கியெனவும்மை அழித் தொழித்தேன். பெண்ணறிவென்பது பெரும்பேதைமைத்து! அயன் என்னைப் படைத்தது மன்றி, எனக்கு நீண்ட ஆயுளுந் தந்தான். அதன் பயன் உம்மைக் கொல்லுதல் போலும்! எல்லையார், இறைவனுயிருண்டதை இன்றளவும் அறியாத யானே அச்செயற்கு இலக்கியமாகி நின்றேன்!' என விரங்கிப் புலம்பினள்.

'கபிஞ்சலன், பெரிதும் மனமிரங்கி, 'மாசுவேதையீர், நீவிர் வீணிலேன் பழி கூறிக்கொள்கின்றனிர்? நும்மிடைக் குற்றமும் உளதோ? இவையெலாம் விதியின் செயல்கள். நும்மிருவர்க்கும் சாபத்தினாலன்றோ இத்தகைய இன்னல்கள் விளைந்தன? நீவிரிருவீரும் தண்மதிக் கடவுளின் இன்மொழியையும் செவியுற்றிருக்கின்றீர். இறுதியில் எல்லாம் இனிது முடியும். எக்கருமத்தையும் எளிதின் முற்றுவிக்கும் தவத்தை நீர் ஆற்றி வருக. நீவிரிருவீரும் நன்மையே அடைவீர்,' என இன்னுரை இயம்பினன்.

'அவ்வுரைகள் மாசுவேதையின் மனத்தை மகிழ்வித்தன. பின்னர்க் காதம்பரி கபிஞ்சலனை நோக்கி, 'ஐய, பத்திரலேகையும் இப்பொய்கையிற் புகுந்த காரணம் எனக்குத் தெரியவில்லை. கூறியருள்க,' என, கபிஞ்சலன், 'மாதராய், யான் பரியுருக்கொண்டு பௌவத்தில் விழுந்த பின் எவ்விதச் செய்திகளையு மறியேன். ஆயினும், சந்திராபீடனது மறுபிறப்பு, பத்திரலேகையின் செய்தி முதலியவற்றை அறியயானும் ஆவல் கொண்டுளேன். இவற்றை எனக் கறிவிப்பவர், உலக மூன்றையும் அங்கையின் நெல்லியங்கனியெனத் தம் அகக்கண்ணாற் பார்க்கும் பெருமை வாய்ந்த சுவேதகேது மாமுனிவராவர். அவரிடமே செல்வல் யான்,' என்று கூறி விசும்பாறாகச் சென்றனன்.

'சென்றதும், காதம்பரி, மாசுவேதையை நோக்கி, 'ஆருயிர்ப் பாங்கி, நான்முகன் நம்மிருவரையும் உறுதுயருறு வதிலும் ஒப்பவராகச் செய்துவிட்டான். இருப்பினும், அன்றி யிறப்பினும் நமக்குத் துன்பமுண்டாகாது. யான் இனிச்செய்வ தென்? கூறுதி,' என்றனள். மாசுவேதை, 'தோழி, இஃதென்? மனக்கினிய தலைவனைக் கூடும் இன்பம் இனிது பெற நம் மனம் எதைச் செய்ய ஏவுகின்றதோ, அதனையே செய்து முடித்தல் வேண்டும். நின் தலைவரது உடல் நின் மடியீதிருக்க நீ வேறு என்செய விரும்புகின்றனை? அவ்வுடல் சிறிதேனும் பழுதுறா திருக்கப் பணியாற்றுவதே நின்கடனாகும். மக்கள் நன்மைபெற வேண்டி, நாம நீருலகில் மண்ணாலும் மரத்தாலும் சிலை யாலு மியன்ற வுருவங்களையுமன்றோ கடவுளெனப் போற்றி வழிபடுகின்றனர்? அங்ஙனமாக, நீ கண்ணிற் காணும் சந்திரா பீடப் பெயர் கொண்ட தண்மதிக் கடவுளின் உடலுக்குப் பணிவிடை செய்வதில் தவறேதுமிலது,' என்றனள்.

'அவ்வுரை கேட்ட காதம்பரி, இளவரசனுடலைச் சிறி தும் வருத்தாது மெல்லென அதனை மற்றொரு கற்பாறை யிடமெடுத்துச் சென்று கிடத்தி, மாங்கலியத்துக்கெனக் கையிலோர் காப்பு நாணணிந்து, கடவுள் வாழ்த்தி, உள்ளும் புறமும் தூயளாயிருந்து மன்னன் இணையடிகளைத் தன் மடிமீ தமர்த்தித் தன் பணியாளருடன் அயிலுதலுந் துயிலுதலு மின்றிப் பகலையும் இரவையுங் கழித்தாள்.

'பொழுது புலர்ந்தது. காதம்பரி, சந்திராபீடனது உடலை மெல்லத் தன கைகளாற் றைவந்து, அருகிருந்த மதலே கையை நோக்கி, 'மதலேகாய், இதோ பார் மன்னருடலை! இது சிறிதும் மாறுபாடின்றி முன்னிருந்தது போலவே யிருக்கின்றது,' என்றாள். இதைக் கேட்ட மதலேகை, 'ஆம்; பார்ப்பதென்? ஆவி நீங்கியதால் அசைவற்று இருக்

கின்றது. ஒளி சிறிதும் குறையவில்லை. ஆகாய மொழி யும், கபிஞ்சலனுரையும் உண்மையே யாதல் வேண்டும். ஆதலின், நீவிர் எட்டுணையும் அஞ்ச வேண்டா,' என்ற னள். பின்னர்க் காதம்பரி அருகிருந்த அரச குமாரர் அனைவருக்கும் அவ்வுடலைக் காட்டி மாசுவேதை கொணர்ந்த கனி முதலியவற்றைத் தன்னுழையரோடிருந்து இனிதுண் டாள். அவளுக்கு நாளுக்கு நாள் நம்பிக்கையும் பெருகி வரலா யிற்று. அவள் மதலேகையைப் பார்த்து, 'பாங்கி, நீ என் பெற் றோர்க்கு இச்செய்தியை அறிவித்துவா,' என்றனுப் பினள். அவளும், அங்ஙனம் புரிந்து மீண்டனள்.

## 18. தாராபீடனுதியோர் வருகை

'மழைக்காலம் மெல்லெனக் கழிந்தது. ஒரு நாள் மேக நாதனெனும் தானைத் தலைவன் காதம்பரியினிடம் வந்து, 'தலைவியீர், மன்னர் மன்னரான தாராபீடர், தம் மைந்தர் சந்தி ராபீடர் திரும்பிவரவில்லையே யென மிகக் கவன்று, செய்தியை யறிந்து வரச் சில பணியாளரைப் போக்கி யிருக்கின்றனர். அவர்தமைக் கண்ட யான் நிகழ்ந்த செய்திகளைச் சொல்லி, வேந்தரிடம் கூற ஏவினேன். அவர்கள், 'இளவரசர் திரு வடிகளைக் கண்டு வணங்கினல்லாது திரும்பிச் செல்லேம்; செல்லின்; வேந்தர் எம்மைச் சீறுவர்,' என்கின்றனர்,' என்றான். காதம்பரி, இதைக் கேட்டு, 'மேகநாதரே, அவர்கள், இங்கு வந்து இப்புதுமையைக் கண்டு செல்வதே மேன்மை,' என, மேகநாதனும், சேவகர்களை அழைத்து வந்தான்.

'வந்த சேவகர், சேய்மைக்கண்ணிருந்தே கண்களில் நீர்வார, உடல் நிலந்தோயப் பணிந்தனர். காதம்பரி அவர் தமை நோக்கி, 'தூதுவர்களே, ஏன் அழுகின்றீர்கள்? மனத் தடங்கா வின்பச் செய்தியிது. இளவரசர் முகப்பொலிவை

நன்கு பாருங்கள். இதைத் தாராபீட மன்னரிடம் உரைமின். சேய்மையிலிருக்கும் அப்பெரியாரிடத்து இவர் உயிர்பிழைத்து விட்டதாகக் கூற வேண்டா. மீண்டும் பிழைத்தெழுவது உண்மையே யெனினும், அதை யவர் சிறிதும் நம்பார். என் றலைவர் உயிர்பெற்றெழும் இன்பச் செய்தி இன்னுஞ் சின்னா ளில் அவர்கட்குத் தெரியும்,' என்று கூறிச் சிறிது நேரம் ஆழ்ந்த யோசனையி லிருந்தாள்.

'பின்னர்க் காதம்பரி, மேகநாதனைப் பார்த்து, 'மேக நாதரே, பழகினரிடத்து உண்மையை மறுத்தல் பெருந்தீமையாம்; பெரியார் மனத்துக்குத் துன்பம் நேரிடலாகாதென்றெண்ணி, யான் இன்னணம் கூறினேன். ஆதலின், அது வேண்டா; நடந் ததை நடந்தாங் குரைப்பதே நீதியும் நேர்மையும் ஆம். நன் றாய்ப் பேசுதலில் வல்ல ஒருவர் இங்கிருந்து தாராபீடரிடம் போதல் வேண்டும்,' என்றனள். மேகநாதன் துவரிதகன் என்பானை யழைத்துச் சேவகரோடு அனுப்பினன்.

'சந்திராபீடன் ஏமகூடஞ் சென்றது முதல், உச்சயினி நகரில் விலாஸவதிக்கு அவனைப்பற்றிய செய்தி யொன்றுந் தெரியாது. அதனால், அவள் மிகவருந்தி, இளவரசன் இடையூ றின்றி வரல்வேண்டுமென வேண்டித் தேவியின் ஆலயத்தே சென்றாள். ஆங்கு, அவள் பக்தியுடன் தேவியை வணங் கும் எல்லையில், 'இளவரசர் செய்தியை யறிந்துவர நாம் அனுப்பிய சேவகர் வந்து சேர்ந்தனர்!' என்று தோழிகள் மகிழ்ச்சியோடு தேவிக்கு அறிவித்தார்கள்.

'அதைக் கேட்ட விலாஸவதி, 'இளவரசன் க்ஷேமமா?' என்று கேட்டுக்கொண்டே வெளி வந்தாள். சேவகர்களை நகர மாந்தர் சூழ்ந்திருந்தனர். அனைவரும் ஒருங்கிருந்த விலா ஸவதி தேவியை உடல் நிலத்தோயப் பணிந்தனர். அவர்தமை விலாஸவதி அன்புடன் வரவேற்று மெல்லிய குரலில், 'வர

லர்காள், என் மகனது செய்தியை விரைவில் உரைமின்; நெஞ்சம் ஏதேதோ அவனைப்பற்றி நினைக்கின்றது,' என்றனள்.

'பிறகு, ஏவலர், 'எம்பெருமாட்டியீர், யாம் அச்சோதப் பொய்கையின் கரையில் இளவரசரைக் கண்டோம். எஞ்சிய செய்தியைத் துவரிதகன் மொழிவான்,' என்றனர். இச் செய்தி, தேவியைச் சிறிதும் மகிழ்விக்கவில்லை. ஏவலர் முகங்களும் பொலிவற்றிருந்தன. கோப்பெருந்தேவி, 'அந்தோ! துவரிதகன் என்ன சொல்லுவானோ! என் கான்முளைக்கு என்ன நேர்ந்ததோ! யான் போதல் வேண்டா என்று மறுத்துக் கூறியும் தடுத்துச் சென்றனனே! என் செய்வேன்!' என உயிர்ப்பிழந்து சாயப் பாங்கியர் தாங்கிக்கொண்டனர். இச் செய்தி யறிந்த தாராபீடன் பரபரப்புடன் கோயிற்புறத்து வந்துற்றுத் தேவியை இன்மொழிகளால் தேற்றி, 'அணங்கனைய், நங்குமரற்கு ஏதேனும் எதிர்ப்பாராத சம்பவம் நேர்ந்திருக்குமாயின் நமதுயிர் கழியும். இறைவனருளால் பிறந்த குழந்தையைக் கண்ணாரக் கண்டு கழிமகிழ் பூத்தோம். அவன் கலைகளையும் முற்றித் திக்கு விசயமும் செய்தான். உரிய பருவத்தில் அவனுக்கு மணவினை முடித்து, அரசெனும் பொறையை அவன் தோண்மேலேற்றிக் கடுந்தவமியற்றக் காடு போகவேண்டுமென்பதே என் உள்ளம். எண்ணிய எண்ணியாங்கெய்தல் புண்ணியமுடையார்க்கன்றோ பலிக்கும்? சந்திராபீடன் செய்தியை உள்ளவாறு துவரிதகன் அறிந்து வந்திருப்பினு மிருக்கலாம். அவனைக் கேட்போம். வீணிலேன் துயரம்?' என்று கூறியதும், துவரிதகன் அரசனை வணங்கி நின்றான்.

'அரசன்' 'துவரிதக, சந்திராபீடற்கு நேர்ந்ததென்னை? விரைவிற் கூறு,' என்றதும், அவன் நடந்த செய்தியனைத்தை

யும் விடாமல் மொழிந்தனன். மன்னன் முதலில் பெரிதும் துயரம் கொண்டானெனினும், குமாரனுடன் அறியாமல் இருப்பது கேட்டுச் சிறிது தேறுதல் அடைந்தான். அமைச்சர் சுகநாசரும் வைசம்பாயனனது செய்தியை அறிந்தார். மன்னன் மந்திரியார் முகத்தைப் பார்த்தான். அமைச்சர், தம் மகனது நிலைக்கு வருந்தினரெனினும், வருத்தத்தைச் சிறிதும் வெளிவிடா தடக்கிக்கொண்டனர். பேரறிஞர், காக்கும் பிறர் துயரம் தாங்கி, வீரமொடு காக்க விரைகுவா ரன்றோ ?'

‘ சிறிதுபோது சென்றதும், மந்திரியார் மன்னனை நோக்கி, ‘ அரசரே, பிறவி பல விந்தைக் கிடமாயது. தோன்றி யிருந்து இறந்து ஒழியும் பலவகைச் சராசரங்கட்கு எண்ணுளும் ஒரு நிகழ்ச்சி தோன்றிக்கொண்டே யிருக்கும். இதைப் பற்றி ஆலோசனை ஏன் ? மதி வன்மையால் அனைத்தையும் ஆய்ந்து முடிவுக்கு வருதல் முடியாத செயல். நூற் பிரமாணங்களால் அங்கீகரிக்கத் தக்கனவும் உத்திக்கு முரண்பட்டனவும் எத்தனையோ இருக்கின்றன. கல்லிடைக் கண்டப் பட்டானை மந்திர மாதியவற்றா லெழுப்பப்படுகிறதும், அயக்காந்தம் இரும்பைத் தன்னிடத் திழுக்குக்கோடற்கும் காரணத்தினைக் கொண்டு அமைவு கூறமுடியுமா ? அருமறைகளிலும் பெரும புராணங்களிலும் சாபத்தைப் பற்றிய வரலாறுகள் அனேக் கில கூறப்பட்டுள. அமரர் பதம் பெற்ற நகுட மன்னன், அகத்திய முனிவரின் சாபத்தால் அரவானான் ; தானவ குருவான வெள்ளியின் ஆணையால், யயாதியெனும் வேந்தன், இளமையில் முதுமை யெய்தினன் ; திருமால், யமதங்கிக்கு மகனாராக வந்தார். மனிதர்மாட்டுக் கடவுளர் வந்து தோன்றுவது புதுமையன்றே ! சாபங்கள் அன்ன தன்மைய. அன்றியும், தேவியார் கருத்தரிக்கும்போதே அவரது முகத்தில் கலை நிறை மதி யொன்று புகக் கனவு கண்டனர். எனக்கும் கனவில் வெண்டாமரை யொன்று தோற்றியது. ஆதலின்,

தண்மதிக் கடவுளும் புண்டரிகப் பெயரிய முனி குமாரனும் நம்மில் தோன்றினர். இதில் எட்டுணையும் ஐயமில்லை. இறந்தார் உடல் அழியாதிருத்தலன்றி, மீண்டும் உயிர் பெறுதல் எங்ஙனம் என்பீர். இப்படிச் செய்தல் அமுதத்தின் குணம். மதியினிடத்து அமுதம் உண்டென்பது உலகறிந்த செய்தி. அவ்விருவரும் சாபமடைய, அது நம் மகப் பேற்றுக்கு வரமாயிற்று. எதிர்ப்பாராத இந்நிகழ்ச்சிகட்கு நீவிர் சிறிதும் அஞ்சவேண்டா. கொடை, நோன்பு முதலியவற்றை முட்டின்றிச் செய்தால், எத்தகைய வின்னலும் தட்டின்றி நீங்கும்," என்றார்.

'சுகநாஸருடைய பொருள் பொதிந்த கட்டுரைகளைத் தாராபீடன் கேட்டு, 'அமைச்சரே, நீவிர் உரைத்தவை யனைத்தும் மெய்யே யெனினும், மகனது இதயம் பிளவுபட்டு உயிர் நீங்கியதை நினைக்கும்போது யான் என் வயமிழந்து நிற்கின்றேன். மைந்தனது உடலை நேரிற் சென்று காணினல்லால், என்னுயிர் தரியாது. என்னிலை இங்ஙனமாக, கோப்பெருந்தேவியை யான் எங்ஙனம் தேற்றுவேன்? ஆதலின், உயிருடனிருக்க விரும்பினல், நாம் அவ்விடம் சென்றே தீரவேண்டும்,' என்றான். விலாஸவதியும், 'குழந்தையின் இன்முகம் காண்பதுண்டேல் எத்தகைய வின்னல்களையும் பொறுக்கலாகும்,' என்றாள்.

'அத்தருணத்தில், ஆண்டொரு வேதியன் பொள்ளெனத் தோன்றி, அரசற்கு ஆசிகள் பல கூறி, 'வேந்தரே, மஹோரமைத்தேவி குழந்தைகளின் செய்தியை யறியப் பேராவல் கொண்டு, இக்கோயிற் பின்புறத் திருக்கின்றனள். தாங்கள் இவ்விடத்திருப்பது கண்டு, இங்கு வரச் சிறிது நாணுகின்றனள் போலும்,' என்றான். இதுகேட்ட மன்னன், விலாஸவதியை அங்கேயனுப்பி, மஹோரமையை யழைப்பிக்கப் பின்னர் அனைவரும் புறப்பட்டனர்.

'கலங்கிய நெஞ்சத்தினரான அனைவரும், இரவு பகலாகப் பல நாட்கள் சென்று, அச்சோதப் பொய்கையை அடைந்தனர். அண்மியதும், தாவரிதகன் முதலிய சில பரியாளர்களை மன்னன் செய்தி யறிந்து வர முன்னர் அனுப்பினன். இது கண்ட மேகநாதன், தன்னுடன் சில அரச குமாரர்களை அழைத்துக்கொண்டு மன்னனெதிரில் வந்தான். அவர்களைக் கண்ட தாராபீடனது நெஞ்சம் சிறிதளவு அமைதி யடைந்தது. நாற்புறமும் பணிகளால் மூடுண்ட பல்லக்கிலிருக்கும் விலாஸவதி தேவிக்கும், 'மைந்தனது உடல் அழியாதிருக்கின்றது; கவற்சி யொழி,' என்று மன்னன் கூறினன். இத்தனை அரச குமாரர்க்கிடையில், தன் மகன் மாத்திரம் இல்லாதிருப்பது கண்ட தேவி பெரிதும் வருந்தினள். பிறகு மேகநாதன், மன்னன் முன் சென்று வணங்கி, 'அரசர்க் கரசரே, நினைவில்லை; உயிர்ப்பில்லை; உடல்மாத்திரம் நாளுக்கு நாள் ஒளி பெற்று விளங்குகின்றது; இதுவே செய்தி,' என்றனன். மன்னனுக்கு மகன்மேல் [illegible] பெருகியது. அவன் அனைவரோடும் விரைவில் மகாசுவேதையின் ஆச்சிரமஞ் சென்றான்.

## 19. தாராபீடன் மகனைக் கண்டு துறவு பூணல்

'தன்னாச்சிரமம் நோக்கி இளவரசன் பெற்றோர் வருவதை மகாசுவேதை கேள்வியுற்று, நாணத்தால் தலை குனிந்து, குகையினுள்ளே போய் மறைந்து வீற்றிருந்தாள். காரிகை காதம்பரியும் உயிர்ப்பற்றாள். தன்னுடைய பந்துக்களைக் கண்ட விடத்துத் துயரம் பன்மடங்காகப் பெருகு மென்பது பெரியார் வாக்கன்றோ? பின்னர் மன்னனுந்தேவியார் பையப் பையச்சென்று, பனீர் பனிபொன்று ஒளி வீசும் சந்திராபீடனுடலைக் கண்டனர். கன்றைப் பலநாட் பிரிந்து கண்ட

காராவென விலாஸவதி தேவி தன்னிரு கரங்களையும் நீட்டி, 'மைந்தனே, மதக்களிறே, என்னுற்றது? சந்திராபீட, உறங்குகின்றனையோ? பல நூற்றுக் காவதங் கடந்து வந்த பெற்றோரை, நீ எழுந்து உபசரிக்க மாட்டாயோ? ஒரு மாற்றஞ் சொல்லாயோ?' எனக் கதறிக் கதறி யழுதாள். தாராபீடன், தனது துயரை அரிதில் அடக்கி, 'தேவி, ஏன் அழுகின்றனை? நாம் பண்ணிய புண்ணியத்தால் நமக்கு மைந்தனாகப் பிறந்தான் சந்திராபீடன். கடவுட் பிறப்பே யன்றி, அவன் மானிடப் பிறவி யல்லன். அழுவதால் பயன் யாது? நாமிருவரும் இத்தருணம் சுகநாஸருக்கும் மனோரமைத் தேவிக்கு மன்றோ ஆறுதல் கூறவேண்டும்? அவர்தம் மைந்தன் வைசம்பாயனன் எங்கோ மறைந்தனனே! இந்தா காதம்பரி உயிர்ப்பற்றுக் கிடக்கின்றாள். அவளாலன்றோ நின்மகன் உயிர்பெறப் போகின்றான்? அவளையும் நீ தேற்றவேண்டுமே!' என்றான்.

'மன்னன் மொழிகளைக் கேட்டு விலாஸவதி எழுந்து காதம்பரியின் அருகிற் சென்று, அவளைத் தன்னிரு கரங்களாலும் வாரியெடுத்து, மடிமீதிருத்தி, 'நங்காய், காதம்பரி, என் மகன் உயிர் துறந்தான்; நின்னாலேயே அவன் பிழைக்க வேண்டும். எழுந்திரு; துயருற வேண்டா,' என்று தேற்றினள். காதம்பரி மயக்கந் தெளிந்து எழுந்து, நாணத்தால் தலை சாய்த்து ஒரு புறம் நின்றாள். மதலேகை, காதம்பரியை நோக்கி, அனைவருக்கும் வந்தனம் செய்யவேண்டினள். காதம்பரியும் முறைப்படி வந்தனம் செய்தாள். பின்பு மன்னன் மதலேகையை நோக்கி, 'மதலேகாய், நின் தோழியின் அமுதமயமான கைகள் பட்டுப் பட்டு என் மைந்தன் உயிர் பெறவேண்டும். நாங்கள் இங்கிருப்பதால் காதம்பரிக்கு நாணம் மிகும். அதனால், உபசாரங்கள் குறைவுபடும். நாங்கள் இங்கிருந்து என்ன

செய்ய முடியும்? ஆதலின், யாங்கள் செல்கின்றோம்,' என்று சொல்லி எழுந்து மற்றையோருடன் வெளி வந்தனன்.

'அங்கு அரசற்கு வீடொன்று திருத்தப்பட்டிருந்தது. தாராபீடன் அதில் தங்க மனமில்லாதவனாய் அருகேயிருந்த கொடி வீடொன்றில் இருடியைப் போல இருந்தனன். மனம் புழுங்கிய மன்னர் பலரும் அவனைச் சூழ்ந்து நின்றனர். அவர்களைத் தாராபீடன் நோக்கி, 'மன்னர்காள், மகனால் எனக்கு நேர்ந்த துயரங்கொண்டு, இந்நிலையை யான் அடைந்ததாக நீங்கள் எண்ணவேண்டா. என் மகன் சந்திராபீடன் மனைவியோடு இருப்பதைக் கண்டு, அரசெனும் பெரும்பொறையை அவன் தோண்மீதேற்றிப் பதிநீங்கி அடவியினின்று தவம்புரிந்து உயிர் விடவேண்டும் என்று எண்ணம் நெடுநாட்களாக என் உள்ளத்தில் நிலைத்திருந்தது. அப்பேறு இறைவன் இன்னருளால் இன்றே கிடைத்தது. விதி வலிது. அதைவெல்லல் எவராலுமாகாது. என் எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்ள இதுவே தருணமாகலின், நீவிர் அனைவிரும் இதற்கு இணங்குவீர்களென்று எண்ணுகின்றேன்,' என்று கூறி, அரச உடைகளைக் களைந்து தவவேடந் தலைநின்று, காய் கிழங்குகளைப் புசித்துக் காலையிலும் மாலையிலும் மாத்திரம் சந்திராபீடனைக் கண்டு மிக்க இன்பத்துடன் காலங் கழித்து வந்தான்.'

---

## 20. வைசம்பாயனன் பஞ்சரத் தடைபடல்

'ஜாபாலி மாமுனிவர் இங்ஙனம் கதையைக் கூறி முடித்துக் குறுநகை புரிந்து, மற்ற முனிவரை நோக்கி, 'முனிவர்காள், இக்கதையின் சுவையில் நீவிர் பெரிதும் ஈடுபட்டு நின்றது போலவே என் மனமும் சிறிது புறஞ் சென்றது. எதைக்கூற முயன்றேனோ அதைக் கூறாமல், ஒன்றற்கொன்று தொடர்புடைய பல விஷயங்களைக் கூறிவிட்டேன். இக்கிளி

யைப்பற்றிய முடிவான விஷய மென்னவெனில், புண்டரிகன்
என்னும் முனி குமரன், சிற்றின்பத்தால் மனந் தடுமாறி,
தீவினை வயத்தனாய் மண்ணுலகில் சுகநாஸர் என்னும் அமைச்
சரிடம், வைசம்பாயனன் என்ற மகனாகப் பிறந்தான். அக்
குமரனை, தனது மீறிய ஒழுக்கத்தால், தந்தையாரின் கடுஞ்
சினத்துக் காளானான். அதுவு மன்றி, மாசுவேதையின் சாப
மும் அவனைப் பற்றிக்கொண்டது. அவனே கிளியாகப் பிறந்
தான். அதுவே யிக்கிளி. இப்பறவையின் வரலாறு அறிந்
தீரோ?' என்றனர்.

'சூத்திரக மன்னரே, ஜாபாலி மாமுனிவர், என் கதையை
இங்ஙனம் மொழிந்து வரும்போதெல்லாம், உறங்கி யெழுந்த
வனை யொப்ப, எனக்கு முற்பிறப்பின் செயல்களெல்லாம் நினை
வுக்கு வந்தன. கற்ற கலைகளனைத்தும் விளங்கின. மனிதர்களைப்
போல் பேச வாக்கு வன்மையும் உண்டாயிற்று. மனிதவுடல்
இல்லாத குறை மாத்திரம் இருந்ததே யன்றி, மாசுவேதையி
னிடத்து வைத்த நேயம் முதலியவற்றை அப்பொழுதே நான்
அடைந்துவிட்டேன். மனத்தில் ஆசை மிக்கெழுந்தது. ஆக
லின், அம்முனிபுங்கவரைப் பார்த்து, 'தபோநிதியே, தமது
திருவருளால் அடியேன் அறிவு வரப்பெற்றேன். முற்பிறப்
பில் எனக்கிருந்த சுற்றத்தின ரனைவரும் என் நினைவுக்கு வரு
கின்றனர். அவர்தமை யெண்ணும்போ தென்மனம் புழுங்கு
கின்றது. என் ஆருயிர்த் தோழன் சந்திராபீடனை நினைக்
கும்போது, என் உள்ளம் சிதறுவதுபோல வுணர்கின்றேன்.
நான் இறந்தேனென்று என்று கேள்வியுற்றானோ, அன்றே அவ
னிதயம் பிளவுண்டிறந்தான். அவன் இப்போது எப்பிறப்பை
அடைந்திருக்கிறானென்று தேவரீர் சொன்னால், நான் பறந்து
சென்று, என் நண்பனைக் கண்ணாரக் கண்டு, பறவையாயிருக்
கும் தன்மையையும் மறந்து காலங் கழிப்பேன்,' என்று மெது
வாக இறைஞ்சிக் கேட்டுக்கொண்டேன்.

'என் புன்மொழிகளைக் கேட்ட அம்முனிவர், அன்பாலும், சினத்தாலும் என்னை ஒரு முறை பார்த்து, 'தீய பறவையே, மனத்தை மீறவிட்டதால்தானே இந்நிலைமையை நீ அடைந்தாய்? அந்தத் தீய குணம் இன்னும் உன்னைவிட்டு அகலவில்லை. இன்னும் உனக்கு இரண்டு சிறகுகள்கூட முளைக்கவில்லை. அதற்குள் என்ன அவசரம்? உனக்குப் பறக்குந் தன்மை வந்ததும் என்னைக் கேள்; பிறகு சொல்லுவேன்,' என்றார்.

'முனி குமாரரான ஹாரீதர் மகிழ்ச்சி மேலிட்டவராய், 'தந்தையீர், புண்டரிகன் என்னும் குமாரன், சுவேதகேது என்ற முனிவர்க்கன்றோ மகனாகப் பிறந்தான்? அவனுக்கு உயிரைக்கூடத் தாங்க முடியாமல், காமவேதனையினிடத்தில் அவ்வளவு பெரிய பற்றுதல் எங்ஙனம் ஏற்பட்டது? விண்ணுலகிற் பிறந்தும், ஆயுளேன் குறைந்தது?' என்று வணக்கத்துடன் கேட்டார்.

'தம் மதலையின் மொழிகள் கேட்ட ஜாபாலி முனிவர், 'மைந்த, நீ கேட்டதற்குக் காரணம் வெளிப்படையானதுதான்: புண்டரிகன், மயக்கம் முதலியன நிறைந்த ஒரு பெண்ணுக்குப் பிறந்தவன். ஒரு பொருள் எதிலிருந்து உண்டாகின்றதோ, அப்பொருள் அம்மூலப்பொருளின் குணத்தைப் பொருந்தியிருக்குமென்று வேதங்கள் கூறும். காரியங்களெல்லாம், பெரும்பான்மையும் காரணங்களின் குணத்தை யடைந்தவைகளாகக் காண்கின்றன. ஆதலின், இவனும் இவன் பிறப்புக் கேற்பச் சிற்றின்பத்தில் பெரும்பற்று வைத்தான். அதனால் சாவையும் அடைந்தான். இனிப் பிறப்பிலும் அற்பமான வயதுதா னிதற்குண்டு. முடிவில் அளவற்ற ஆயுள் ஏற்படும்,' என்று கூறி முடித்து, 'இக்கதை இத்துடன் போதும்; கதையின் சுவையால், இரவும் நம்மையறியாமலே நீங்கியது. மதியும் மேற்றிசையில் மறைகின்றது. பம்பைப் பொய்கையில், நீர்வாழ்

யுட்களின் வைகறையார்ப்பும் கேட்கின்றது. காலைக்கடன்களை முடிக்கவேண்டிய காலமும் வந்துற்றது,' எனக் கூறி எழுந்தனர். கூட்டமும் கலைந்தது.

'பின்னர், ஆரீதர் என்னைக் கையிலெடுத்துச் சென்று, பன்ன சாலையில் விட்டுக் காலைக் கடன்களை முற்றப் போனார். அப்போது என் மனத்தில் ஒரு பெருங்கவலை குடிகொண்டது; நான், 'எத்தனையோ கோடிப் பிறப்புக்களில் பண்ணிய புண்ணிய வயத்தால் மனிதப் பிறவி கிடைக்கின்றது. 'அரிது அரிது மானிடராதல் அரிது' என்பது பெரியோர் வாக்கு. அப்பிறவி பெற்றும், எல்லா வுலகங்களுக்கும் எப்பொழுதும் நன்மையுண்டாக வேண்டுமென்று நினைக்கின்றவனும், பிரம்மத்தை அறியும் அறிவுடையவனுமான பிராமணனாகப் பிறத்தல் அதினுமரிது. இதனினும் முனி வாழ்க்கை மிகவும் மேலானது. விண்ணுலக வாழ்வு கிடைத்தல் எவற்றினும் அருமை. எல்லாவற்றையும் யான் ஒருங்கே அடைந்திருந்தேன். அடைந்து மென்? மனம் தீய வழியிற் சென்றது. அதனால், ஒன்றுக்கும் பற்றாத இந்நிலையை அடைந்தேன். பறவைப் பிறப்பை யடைந்து பரிதவித்து நிற்றலினும், உயிர் விடுகை கோடி யுறும். எனைத்தானும் இடரிழைக்கும் விதியின் எண்ணமும் ஈடேறட்டும்!' என்று எண்ணி, ஆவி துறப்பதற்குக் கண்களை மூடி மூச்சடக்கிக் கொண்டிருந்தேன்.

'அத்தருணத்தில், ஆரீதர் என்னிடம் வந்து, 'கபிஞ்சலன் என்னும் நினது நண்பன் நின்னைக் காண வந்திருக்கின்றனன்,' என்றார். அதைக் கேட்டதும், 'எங்கே! எங்கே!!' என்று தலை நிமிர்த்திப் பார்த்தேன். சடை முடி புனைந்து, நற்குணம் நிறைந்து விளங்கும் என் இன்னுயிர் நண்பனைக் கண்டேன். என் கண்களினின்றும் நீர் ஆறாய்ப் பெருக்கெடுத்தது. நான் அவனைக் கண்டு, 'நண்ப, கட

நான் இவ்வகையான பிறப்பை அடைந்தும், உன்னைக் காணும் பெரும்பேறுபெற்றேன்; நீ என்னிடம் அன்போடு எழுந்தருளி யிருக்க உன்னை ஓடி வந்து எதிர்கொண் டழைக்க முடியாத பாபாவி யானேன். மார்பிறுகத் தழுவிக்கொள்ளவும் முடியாத நிலைமை யான் அடைந்திருக்கிறேன். என்செய்வேன்!' என்று ஏக்கமுற்றேன். கபிஞ்சலன், என்னை இரண்டு கைகளாலும் அன் போடெடுத்து, என் சின்னஞ்சிறு கால்களைத் தன் தலைமீது அணிந்துகொண்டான். துயர் அவனை யறியாமலே மூண்ட தால் வாய்விட்டுப் புலம்பினான். யான், என் நண்பனை மீட்டும் ஒரு முறை நோக்கி, 'ஆருயிர்ப் பாங்க, நான் பறவையாகப் பிறந்தேன். நீ கொண்ட துயரத்தை எவ்விதத்திலும் ஆற்ற எனக்கு ஆற்றல் இல்லை. நீ துறவனாயினும், ஸம்ஸார மென் னும் கயிற்றாற் பிணிப்புண்ணவில்லை. அறிவிழந்த என்னைப் போல் நீயுமேன் அழுகின்றனை? தந்தையார் ச்வேதகேதுமா முனிவர் சுகமா? என்னுடைய இழிதகைமையைக் கண்டு அவர் சினந்தனரோ? என்னை வெறுத்தனரோ?' என்று ஆதரத்து டன் பல வினவினேன்.

'கபிஞ்சலன் என்னை நோக்கி, 'நண்ப, தந்தையார் க்ஷேமம். அவர் நடந்தசெய்தி யெல்லாம் ஞானப் பார்வையா லறிந்து, துன்பங்கள் நீங்கும்படி பல உபாயங்களையும் செய்ய முயன்றார். நான் குதிரைப் பிறப்பு நீங்கி, அவர்தம் திருவடி களை வணங்க அருகிற் செல்வதற்குப் பெரிதும் பயந்து நின் றேன். நின்ற என்னை, அன்புடன் அருகில் அழைத்து, 'கபிஞ்சல, அஞ்சாதே. நின்னிடம் யாதொரு குற்றமுமில்லை. குழந்தைகள் பிறந்தவுடன், நிறைந்த ஆயுளைக் கொடுக்கும் ஒரு மந்திரச் சடங்கை இயற்ற நான் மறந்தேன். அதனாலேயே இத்துணைத் துன்பங்கள் நேர்ந்தன. இப்பொழுது அவற்றை யெல்லாம் முட்டின்றி நிறைவேற்றிவிட்டேன். நீ வருந்தாதே. என்னிடமே யிரு,' எனக் கட்டளையிட்டருளினார். அவர்

இன்று என்னை யழைத்து, நீ கிளியுருவத்துடன் ஜாபாலி என்னும் முனிவரது ஆச்சிரமத் திருப்பதாகவும், பழம்பிறப் பின் நினைவுகளெல்லாம் உனக்கு வந்துவிட்டனவென்றும் சொல்லி, உன்னை வாழ்த்தியதாகத் தெரிவித்து வருமாறு என்னை யீண்டனுப்பினர். நின் தாயாரான இலக்குமி தேவி யாரும், நின் துன்பம் நீங்குவதற்கான ஒரு சடங்கில், பணிப் பெண்ணாக விருந்து வருகின்றதாகவும், இத்தீவினை உன்னை விட்டு நீங்கும் வரையிலும், நீ ஜாபாலி முனிவர் பன்னசாலை யிலேயே யிருந்து, அவர் திருவடிகளை நாளும் வணங்கிவர வேண்டுமென்றும் நின்னிடம் அறிவிக்கும்படி சொன்னார்,' என்றான்.

'நான் இங்ஙனம் கூறிய கபிஞ்சலனைப் பார்த்து, 'நண் பனே, நீயுமன்றோ என் பொருட்டுக் குதிரையாகப் பிறக்க நேர்ந்தது! நாளும் அமுத மூண்ணும் நின் திருவாயில் கடி வாளம்பூட்டு இழுக்கப்பட்டுத் துன்பமடைந்தாயே!' என்று முற்பிறப்பின் செய்திகள் பலவற்றைக் கூறிப் பறவைத் தன் மையையும் ஒருவாறு மறந்தின்புற்று நின்றேன் இதற்குள் நண்பகலும் வந்துற்றது. கபிஞ்சலன் உணவு கொண்டு சிறிது நேரம் என்னுடனிருந்து, என்னை நோக்கி, 'புண்டரிக, நின் தீவினை முடியும்வரை இங்குநின்றும் அகலாதே. இது நின் தந்தையாரது ஆணை. அவர் செய்து வரும் சடங்கில் யானு மொருவனாகச் சில முயற்சிகள் செய்துவருகின்றேன். ஆதலின், நெடுங்காலம் என்னால் இங்கிருக்க முடியாது,' என்று கூறித் திடீரென விண்ணிலெழுந்து நீங்கினன். சிறிது நேரம் கழிந்த தும் ஆரீதர் எனக்குச் சில நல்லுணவுகள் தந்தார்.

'இன்னணம் பன்ன சாலையில் நன்னர் வளர்ந்து வரு கையில், சிறிது சிறிதாகச் சிறகுகள் முளைத்துப் பறக்கும் ஆற்றலும் எனக்குண்டாயிற்று. ஒரு நாட் காலைப்பொழுதில்

வடதிசை நோக்கி மாசுவேதையின்மீது வைத்த கருத்தின னாய்ப் பொள்ளெனப் பறந்து சென்றேன். அதுவரையில் பறந்து செல்லும் பழக்கம் எனக்கில்லையாதலால், மிகவும் களைத்து, ஒரு புதர்மீது உட்கார்ந்து, என்னையும் மறந்து உறக்கங்கொண்டேன். கண் விழித்ததும் என் கால்கள் கட்டுண்டிருப்பதாக அறிந்தேன். எனக்கெதிரில், கொடுமையே உருக்கொண்டதெனத் தோன்றும் கறுத்த மேனியன் ஒருவன் நிற்கக் கண்டேன். என் உயிரின்மீது பெரிதும் வெறுப் படைந்து, அவனைக் கண்டு, 'அப்பனே, நீ யாவன்? என்னை யேன் கட்டினை? எனது இறைச்சியில் உனக்கு ஆசை யிருந்தால் நான் உறங்கும்போதே என் ஆவியை வாங்கி யிருக்கலாமே! நான் என்ன குற்றம் உனக்குச் செய்தேன்? வேடிக்கைக்காகவா என்னைக் கட்டியிருக்கின்றனை? அவ்வாறு யின், இதுவரை என்னைக் கட்டியிருந்தது போதும்; அவிழ்த்து விட்டுவிடு,' என்றேன்.

'அம்மொழிகளைக் கேட்ட அத்தீயோன் என்னை நோக்கி, 'கிளியே, நான் பறைக் குலத்துப் பிறந்தவன். உன்னை யான் கட்டியது உனது புலாலில் வைத்த ஆசையாலு மன்று; வேடிக்கைக்காகவும் அன்று. என் தலைவன் ஒரு பறைச்சேரியின் அதிகாரி; அவனுக்கு இளமைப் பருவத்தினை ளான மகளொருத்தி உண்டு; நீ ஓர் ஆச்சரியமான கிளி யென்பது அவளுக்குத்தெரியும். ஆகலின், உன்னைப் பிடித்து வர என்னைப்போன்ற பலருக்குக் கட்டளையிட்டான். நான் செய்த பெரும்புண்ணியத்தால் என்னிடம் நீ அகப்பட்டனை. யான் உனக்கு எவ்விதமான துன்பமும் செய்யேன்; எனது தலைவன் குமரியிடத்து நின்னைக் கொண்டுபோய் விட்டு விடு வேன். அவள் நின்னைக் கட்டி வைப்பாளோ? விட்டு விடு வாளோ? எதுவானாலும் செய்ய அவளே அதிகாரி. என்னால் யாதொன்றும் ஆகாது,' என்றான்.

'இம்மொழிகளைக் கேட்ட எனக்கு எண்ணம் பலவாயின: 'ஆ! எனது தீவினை இப்படியுமிருந்ததோ! அந்தோ பறைச்சேரியிலும் யான் நுழைந்து வதியவேண்டும் போலும்! யானோ மிகவும் தூயன்! முனிகுமரன்! நல்லொழுக்கந் தலைநின்றவன்! என் பிறப்பைச் சுடவேண்டும்,' என்று எண்ணி, அவனை மறுபடியும் பார்த்து, 'அப்பனே, யான் முற்பிறப்பை அறிந்தவன்; முனிவர் குலத்துப் பிறந்தவன். பறைச்சேரியிற் புகுவது எனக்குத் தகாது. இத்துன்பத்தினின்று நீ என்னை மீட்பையாயின், உனக்குப் புண்ணியம் உண்டு. எவரும் அறியாத இவ்விடத்தில் என்னை விட்டு விடுவதால், எவ்விதத் தீங்கும் உனக்கு நிகழாது,' என்று கெஞ்சிக் கேட்டேன்.

'அவன், 'கிளியே, நீமூடனைப்போல் வீணில் ஏன் பிதற்றுகின்றனை? என் தலைவன் ஆணையை மீறி நடத்தல் எனக்கு எங்ஙனம் முடியும்? நாம் இவ்வுலகத்தில் செய்யும் எவ்வித வினைகட்கும் கடவுளர் சாட்சியாக நிற்பரென்பதை நீ அறியாய் போலும்! என் தலைவனிட்ட கட்டளையின் வண்ணம், உன்னை அவனிடத்துக் கொண்டுபோகின்றேன்,' எனக் கூறி, என்னைப் பறைச்சேரிக்கு எடுத்துச் சென்றான். அச்சேரியில் பறைக்குலச் சிறுவர் ஒருங்கே குழூஉப் பறவை முதலியவற்றைக் கண்ணிவைத்துப் பிடிப்பதிலும், வேட்டை நாய்கள் முதலியவற்றின் துணைகொண்டு விலங்குகளைப் பிடிப்பதிலும் ஊக்கமுடையவராய் நின்றனர். கூரைகளெல்லாம் தலை ஓடுகளால் மூடப்பட்டிருந்தன. வெள்ளெலும்புகள் குன்றமென ஒருபால் குவிந்து கிடந்தன. குட்டைகளில் தோல் முதலியன ஊறிக் கிடந்ததால் எங்கும் துர்க்கந்தம் வீசிற்று. பருந்து முதலிய பறவைகள் ஆகாயத்தில் வட்டமிட்டுத் திரிந்தன. நாய்களின் குரைப்பு ஓயாமற் கேட்டது. மக்கள், தேட்கடுப்பன்ன நாட்படு தேறலை யருந்தி, மயங்கித் திரிந்து

கொண்டிருந்தார்கள். இங்கொன்றிற் புகுவதுபோல, அப் பறைச்சேரியில் யான் புகுந்தேன். என்னைப் பற்றியவன், என்னைக் கொண்டுபோய், அப் பறைக்குலப் பாவையின் கையில் ஒப்புவித்தான். என் மனம் அப்பொழுதிருந்த நிலைமையை என்னென்பேன்!

'நான் எனக்குள், 'இதென்ன விபரீதம்! எத்தனை சாபம் வந்தாலும் அனுபவிக்கலாம். சேரியில் மாத்திரம் புகுவது அடாது. அந்தோ! இப்பாவை அருள் கூர்ந்து என்னை விடுதலை செய்வாளோ?' என்று பலவாறு எண்ணினேன். அக்கன்னிகையும் மலர்ந்த முகத்துடன், தன்னிருகைகளாலும் என்னை யெடுத்து, 'ஆ! என்னருமைக் குமரனே, நீ என்னிடம் இன்றுதான் சிக்கிக்கொண்டாய். உன் மனம்போனவாறெல்லாம் திரிந்து வருந்துவதை, இனி யான் நீக்கி விடுகிறேன்,' என்று கூறி, மரத்தினியன்ற கூட்டைத் திறந்து, அதில் என்னை அடைத்து வைத்து, 'கிளியே, நீ இனிக் கவலையின்றி வாழ்வாயாக,' என்று மொழிந்தனள்.

'கூட்டிற் புகுந்த நான், 'இதென்ன விந்தை! பெருந் தீங்கில் அன்றோ அகப்பட்டுக் கொண்டேன்! எனது நிலைமையை எடுத்துக் கூறி விடுதலை பெறலாமென்றால், யான் பேசுவதே ஒரு வேளை எனக்குப் பெருந்தீங்காய் முடியினும் முடியலாம். யான் பேசுகின்றேன் என்று அறிந்து தானே இவள் என்னைப் பிடித்துவரக் கட்டளையிட்டாள்? எனது துன்பத்தை எப்படி முறையிடினும் இவள் சிறிதும் செவி கொடுத்துக் கேட்கமாட்டாள். இவளுக்கு நான் மகனும் அல்லேன்; சோதரனுமல்லேன்; மற்றெவ்விதச் சுற்றமுமல்லேன். ஆதலின், இவளுடன் என்ன பேச்சு? வாய் வாளாமையே சால நன்று. பறைக்குலக் கன்னியாதலின், ஒரு வேளை யான் பேசாமலிருப்பது கண்டு, மிகத் துன்புறுத்த

லாம். அத்துன்பங்களுக் கஞ்சிப் பேசுவதினும், அவற்றைப் பொறுமையுடன் பொறுத்தல் நன்றாகும். மௌன நிலையிலை யானிருப்பது கண்டு, வெறுத்த நெஞ்சினளாய் என்னை விட்டு விடுதலுங் கூடும். ஆ! என் தலை விதியை என்னென்பேன்! விண்ணுலகில் முனி மரபிற் பிறந்தேன்! மனிதப் பிறவியை அடைந்தேன்! பறவையாக மாறிப் பறையா கையகப்பட்டுப் பஞ்சர வாஸம் கொண்டேன்! இவ்விடர்ப் பெருக்கெல்லாம் ஐம்புலன்களை யடக்காது மீறிச் செல்ல விட்டதா லன்றோ என்னை வந்தடைந்தன?' என்று எனக்குள் வருந்தி, மௌன விரதமிருப்பதென்று மனவுறுதி கொண்டேன். சோறும் நீரும் அளிக்கப்பட்டும், பட்டினி கிடந்தே அந்நாளைக் கழித்தேன். நான் இருக்கும் நிலையைக்கண்டு மனமிரங்கிய அப்பாவை மறு நாள், தீங்கனிகள் பலவற்றையும் நன்னீரையும் தானே எடுத்து வந்து என்னை நோக்கி, 'கிளியே, கவலை யேதுமின்றி இரை கொள். உயிர் வாழும் பறவை முதலியவை, பசியும் நீர் வேட்கையும் உண்டானால் உணவு கொள்ளாமலிரா. நீயோ பழம்பிறப்புணர்ந்து, பகுத்தறிவு பெற்ற திப்பியப் பிற வியா யிருக்கின்றனை; இருந்தும், ஐயறிவினையுடைய பறவை யானாய். உனக்கு உண்ணத் தகாதன எவையுமில்லை. உன் னறிவு சிறிதும் குன்றாமல் முதலிலேயே நீ பாதுகாத்திருப்பை யேயானால், இந்த இழிபிறப்பு உனக்குண்டாயிராது. நின் தீவினைக்குத் தக்கவாறு பிறந்தபின், அதற்கேற்ற செயல் களைக் கைக்கொள்வதால் என்ன குற்றம்? பறைச்சியால் தொடப்பட்டதென்று தள்ளக் கூடியதும் இல்லை. கனிகளை எவரிடமிருந்தும் பெறலா மெனச் சாத்திரங் கூறும். பறை யன் கையிலிருந்து பூமியில் விழுந்த தண்ணீரும் தூயதன்மை யடைந்து விடுமென்று பெரியோர் சொல்லுவர். ஆதலின், கிளியே, நீ பசியாலும் நீர் வேட்கையாலும் வருந்தி வீணில் மாய வேண்டா,' என்று கூறினள். அவளது அறிவாலும் இன்

மொழியாலும் என் மனமும் திருந்தியது. உண்டியை மாத்திரம் கொண்டேன். எனினும், பேசா விரதத்தைக் கைவிட

'இங்ஙனம் சில நாட்கள் கழிய எனக்கு வாலப் பருவம் நீங்கியது. ஒருநாள் விடியற்காலத்தில், தூங்கியெழுந்ததும் இப்பொன் மயமான கூட்டில் இருக்கக் கண்டேன். சூத்திரகரே, பறைச்சேரி யனைத்தும் அமராவதியென மாறிப் போயிற்று. எதனால் அப்படி ஆயிற்றென்று அறிய என் மனம் ஆவல் கொண்டது. விரதத்தைக் கடந்து பேசவும் தொடங்கினேன். உடனே அக்கன்னிகை பொற்கூட்டுடன் என்னை எடுத்துக்கொண்டுவந்து தங்கள் திருவடி சேர்த்தாள். வேந்தரே, இதுவே செய்தி. அக்கன்னிகை யாரென்றும் அறியேன். அவள் தன்னைப் பறைக்குலத்தவள் என்று எதனாற் சொன்னாளென்பதும் எனக்குத் தெரியாது. என்னைக் கூட்டி லடைத்ததற்கும் இங்குக் கொண்டு வந்ததற்கும் காரணம் அறியேன். இவற்றை யறிந்துகொள்ள தங்களைப் போலவே யானும் பெரிதும் அவாவுடையனாய் நிற்கின்றேன்,' என்று அக்கினி கூறி முடித்தது.

---

## 21. இன்பப் பெருக்கு

சூத்திரக மன்னன், இவ்வரலாறுகளைக் கேட்டுப் பெரு மகிழ்வடைந்தான். எஞ்சிய செய்திகளையும் அறிய அவனுக் குப் பேராவல் உண்டாயிற்று. பிறகு, வாயிற் காப்பாளை அனுப்பி, அப்பறைக்குலப் பாவையை அழைத்து வரச் செய் தான். சிறிது நேரத்தில் அப்பாவை, வேந்தன் திருமுன்னர் வந்து உயரியதொரு மேடையின்மேல் ஏறிநின்று, 'ஓ! உலகின் கண்ணே, உரோகிணி தலைவா, தண்மதிக் கடவுளே, நினது செய்தியையும், அறிவிழந்த இப்பறவையின் செய்தியையும், இதன் வாயிலாகவே முழுதும் அறிந்தாய். அவரவர் செய்த

ின் பயனாகத் துன்பங்கள் நிகழும் என்றுணர்ந்த பின்னரும், இக்கிளி தன் தந்தையாரான சுவேதகேது மாமுனிவரின் ஆணையைக் கடந்து, ஜாபாலி முனிவரின் ஆச்சிரமத்தை விட்டுத் தன் இல்லாளிடம் போக முயன்றதையும் கூறிற்றல்லவா? யான் இக்கொடியோன் தாயான இலக்குமி தேவி. அறிவின்மையால் இக்கிளி அங்ஙனம் போக முயன்றதைச் சுவேதகேது தம்மகக் கண்களாற்கண்டு, என்னை நோக்கி, 'பெண்ணே, தகுதியில் செயல்களைச் செய்யத் துணிந்த எவனும், தானே தன் தவற்றை நினைந்து இரங்கும் நிலைமை வந்தாலொழியத் தீநெறியினின்று சிறிதும் விலகான். உன் மகனாகிய புண்டரிகன், பறவையினும் இழிபிறப்பான குலமொன்றில் வீழ்வான். ஒரு வினை முடிந்து இன்னொரு வினை தொடங்கு முன்னரே, இவனை மண்ணுலகத்தில் எங்ஙனும் கட்டிப்போடுவது மிகவும் நன்றாகும். அன்றியும், இவன் தீய நடத்தையைத் தானே நினைந்து நினைந்து வருந்துமாறு நீ செய்யவும் வேண்டும்,' என்று உத்தரவிட்டார். அவர் விரும்பியாங்கு யானுமிதனைக் கட்டிப்போட்டேன். இக்கிளியினது தீவினை இத்துடன் முடிவடைந்தது. இதுகாறும், நும்மிருவரையும் பல துன்பங்களுக்காளாக்கிய சாபமும் ஒழிந்தது. இத்தருணத்தில், நீவிரிருவீரும், ஓரிடத்திருந்து ஒருங்கே இன்பங்களைத் துய்க்க வேண்டுமென்னு நோக்குடன், யானிக்கிளியை நுந்திருமுன்னர்க் கொண்டுவந்தேன். இவ்வுலக மாந்தரிடம் அளவளாவுதல் வேண்டா என்பதற்காகவே, யான் பறைக்குலத் துதித்தவள் என்று எவரையும் அறியுமாறு செய்தேன். இனிமேல், பிறப்பு, இறப்பு, பிணி, மூப்பு முதலியன நிறைந்த உடல்களைத் துறந்து, நீங்களிருவரும் ஒற்றுமையுடன் நும்மனக் கினியாருடன் கூடி இன்பம் நுகர்வீர்கள்,' எனக் கூறி, அக்கணமே விசும்பி லெழுந்து சென்று மறைந்தாள்.

அவள் மறைந்ததும், சூத்திரகர்க்குப் பழம்பிறப்புணர்ச்சி முற்றிலும் உண்டாயிற்று. உண்டாயதும், மனம் காதம்பரி யெனுங் காரிகையின்மீது கடிதிற் சென்றது. கண்களினின்றும் அருவியென நீருகியது. முகவொளி மழுங்கியது; பரிதியால் வாடிய பங்கமொன்று நீர் சொரிவதுபோல், உடலினின்றும் வெயர்வைத் துளிகள் துளித்தன. அரசியற்றுறையில் கருத்துச் செல்லவில்லை. அசைவற்றதொரு குற்றியென அவனுடல் காணலாயிற்று. வைசம்பாயனனும், தன்னைப் புண்டரிகனாகவே யெண்ணி, மகாசுவேதையினிடம் மனஞ் செலுத்தத் தொடங்கினன்.

இவர்கள் செய்தி இவ்வாறாக, இனிக் காதம்பரியின் செய்தியை நோக்குவாம்: இளவேனிற் காலத்து ஒரு நாள் மாலைப்பொழுதில், கணவனைப்பற்றிக் கவற்சிகொண்ட காதம்பரி நறுநீராடி, அனங்க பூசை யாற்றி, அக்கடவுள் முன்னுகவே சந்திராபீடனது திப்பிய உடலை நறுமணங் கமழும் நன்னீர்கொண்டு நீராட்டித் தன் உள்ளம் கனிய, கண்களில் நீர் வார, நெடுநேரம் அவனை நோக்கித் தன்னிரு கைகளானும் அவன் உடலை அன்பினுற் பலமுறை தீண்டினள். நெடுங்காலம் பிரிந்துபோயிருந்த அவனது உயிர் உடலில்வர அவன் உணர்வு பெற்றனன். உதய காலத்துத் தாமரைமலர்களென அவன் கண்கள் மெல்ல மலர்ந்தன. உறங்கி விழித்தவன் போலப் புரண்டெழுந்தான். காதம்பரி, திகைத்து நின்றாள். பிறகு சந்திராபீடன் காதம்பரியை நோக்கி, 'காதம்பரி, உனக்கேன் இத்துணை அச்சம்? நின்னாலன்றே யானுயிர்பெற்றேன்? நீ அமுதத்துப் பிறந்த தேவமகளிரின் குலத்தவளன்றே? நீ நெடுங்காலமாக என்னை நின் கரங்களாற் றொட்டிடச் சாபம் முடியவில்லையாதலின், யான் உயிர் பெறவில்லை. உயிர் நீங்கிய வென்னுடல், நின் கைகளின் தொடர்பால் சிறிதும் கெடாமல் இருந்து வந்தது. இப்பொழுதுதான் எனது இரண்டாவது

சாபமும் இறுதியுற்றது. இதுவரை நின்னைப் பிரிந்து, சூத்திரகன் என்ற அரசனாக மண்ணுலகில் இருந்தேன். அத்தேகமும் இப்போ தொழிந்தது. உன் உயிர்த் தோழியான மாசுவேதை பின் மனாளனும், என்னுடனிருந்து சாபம் நீங்கினான்,' எனக் கூறி வரும்போதே, புண்டரிகன், கபிஞ்சலன்றன கைகளைப் பிடித்துக்கொண்டு விண்ணினின்றிழிந்து வந்தான். முன்னரே மாசுவேதைபால் காதல் கொண்டு உயிர் விடுகையிலிருந்த அதே உருவத்தோடும் மார்பிற் புரளும் முத்துமாலை யொன்றினோடும் அவன் மிக்க அழகு பெற்று விளங்கினான்.

சந்திராபீடன் அவனைக் கண்டு தழுவிக்கொண்டு, 'நண்ப, நீ முற்பிறப்பில் எனக்கு வேறான உறவினனாயினும், இப்பிறப்பில் நாமிருவரும் விள்ளா நட்புப் பூண்டோமாகலின், அங்ஙனமே இனியும் என்னுடன் நீ பழகிவரவேண்டும்,' என்றான். அத்தருணத்தில் கேயூரகன், சித்திராதன் அம்ஸன் முதலியோர்க்கு இவ்வின்பச் செய்தியைச் சொல்லி அவர்களை மகிழ்விக்க விரைந்து எமகூடஞ் சென்றான். மதலேகை விரைந்து சென்று, தாராபீடன் முதலியோர் திருவடிகளை வணங்கி, 'ஐயன்மீர், நீவிர் பெரும்பேறு பெற்றவரானீர்! இளவரசரும், மந்திரியார் குமாரரும் உயிர்பெற் றெழுந்தனர்!' என்று சொல்லி நின்றனள். தாராபீடன் மகிழ்ச்சியெனும் கடலின் மூழ்கினன். சுகநாஸர் விலாஸவதி முதலியோர் அடைந்த ஆனந்தத்துக்கும் அளவில்லை. பின்னர்த் தாராபீடன் அனைவரையும் உடனழைத்துக்கொண்டு, மாசுவேதையின் ஆச்சிரமஞ் சென்றான்.

ஓயார் வரக் கண்ட சந்திராபீடனும் பரபரப்புடன் எழுந்து, தந்தையை வணங்கினான். வணங்கிய மைந்தனைத் தாராபீடன் நோக்கி, 'மைந்த, என் புண்ணியத்தாலோ, நினது சாபத்தாலோ, நான் உனக்குத் தந்தை யாயினேன்.

நீயோ, உலகெலாம் பணியும் கடவுளரில் ஒருவரே யிருக்கின்றனை. ஆதலின், நீயே எம்மால் வணங்கத் தக்கவன்,' என்று கூறப் பின்னர் அவனும் ஏனைய அரசர்களும் சந்திராபீடனைப் பணிந்தனர். விலாஸவதி அன்புடன் தன் மைந்தனை அழைத்து மடிமீதிருத்திப் பெருமை பல செய்தாள். பின்னர்ச் சுகநாஸரைச் சந்திராபீடன் வணங்கி ஆசீர்வாதங்களைப் பெற்று, 'அமைச்சருட் பெரியீர், இதோ தங்கள் அருமைத் திருக்குமரன் வைசம்பாயனன் இருக்கின்றான்; பாரும்,' என அருகில் நிற்கும் புண்டரீகனைச் சுட்டிக்காட்டினான். இச்சமயத்தில் கபிஞ்சலன், சுகநாஸரிடம் சென்று, ச்வேதகேது மாமுனிவர் தன்னிடம் சொல்லியனுப்பிய கட்டளையைக் கூறக் கருதி, அமைச்சரை நோக்கி, 'நீயன்மீர், ச்வேதகேது மாமுனிவர் தங்களிடம் சொல்லும்படி எனக்குச் சில சொல்லினர். அவை, 'சுகநாஸரே, புண்டரீகனை நான் வளர்த்தேனே யன்றி, அவன் உமது குமாரனேயாவன். அவனுக்கு உம்மிடம் வரம்பில் அன்பு உண்டு. ஆதலின், அவனை வைசம்பாயனன் என்றே எண்ணுமின். அவனுக்கு நேர்ந்த சாபம் தீர்ந்தபின் தங்களிடத்துக்கு யான் அவனை அனுப்பினேன். உலகில் மதியம் உள்ளளவும் அவனுக்கு ஆயுள் உண்டு. எனது அபிமானம் அவன்,' என்பனவே,' என்று கூறினன்.

இம்மொழிகளைக் கேட்ட சுகநாஸர் கபிஞ்சலனை நோக்கி, 'முனி குமார, ச்வேதகேது மிகவும் பெருமை வாய்ந்தவர்; உலகத்தை உள்ளபடி அறிந்தவர். என்னிடம் வைத்த அன்பின் பெருக்கால் இவ்வண்ணம் அவர் ஆணையிட்டனராதல் வேண்டும்,' என்றார். இவ்வண்ணம் அங்குள்ளார் அனைவரும் பழம் பிறப்பின் தன்மைகளைப்பற்றிப் பலபடப் பேசியிருந்தனராதலின், இராப்பொழுது அவர்தமை யறியாமலே கழிந்துவிட்டது. பொழுது புலர்ந்ததும், சித்திரரதன், அம்ஸன், மதிரை, கௌரி எனும் இவர்கள் பல கந்தருவர் புடைசூழ ஆண்டுவந்து,

அனைத்தையுங் கண்டு மகிழ்ந்து, சுகநாஸர் தாராபீடன் முதலிய வரோடு புதிய சம்பந்தம் கிடைத்தமைக்குப் பேரானந்தமடைந் தார்.

இத்தருணத்தில் சித்திரரதன் தாராபீடனை நோக்கி, 'அரசரே, நாமனைவரும் இக்காட்டை நீங்கி நகரஞ் சென்று, நம்மாளிகையிலிருந்து, இச்செய்தியை யொரு திருவிழாவாகக் கொண்டாடவேண்டும்,' என்றுகூறத் தாராபீடன், 'கந்தருவமன்னரே, அதுவன்று செய்தி. எவ்விடத்தில் நமக்கு இன்பங் கிடைக்கின்றதோ அவ்விடமே நமக்கு வீடாகும். இவ்விடம் காடெனத் தள்ளத்தகுந்த தன்று. அன்றியும், இன்னொன்றும் கேண்மின்: யான் இல்லறம்விட்டுத் துறவறங் கொண்டேன். இல்லறம் நம் மருகற்குரியது. ஆதலின், அவனை மனைவியுடன் அழைத்துச் செல்க,' எனக் கூறினன்.

தாராபீடன் கூறியாங்குச் சித்திரரதன், காதம்பரியுடன் சந்திராபீடனை அழைத்துப்போய் ஏமகூடமடைந்து, அரசனைத்தையும் அவற்கே கொடுத்து மகிழ்ந்தான். அம்ஸனும், மாசுவேதையோடு புண்டரிகனை அழைத்துச்சென்று, ஆட்சி முழுதும் அவற்கே யளித்துப் பெருமகிழ்வு கொண்டான்.

இங்ஙனம் அனைவரும் இன்புற்று வாழுநாளில் ஒருநாள், காதம்பரி சிறிது ஏக்கங் கொண்டு தன் தலைவனை நோக்கி, 'தலைவீர், இறந்தாரனைவரும் உயிர்பெற் றெழுந்தனர். நாம் ஒன்று கூடி இன்புற்றோம். ஆயினும், அப்பேதைப் பத்திரலேகை நம்மிடையிற் காணப்படவில்லை. அவள் செய்தி என்னாயிற்று?' என வினவினள். சந்திராபீடன், அவளை நோக்கி, 'நங்காய் அவள் இங்கெப்படி வருவாள்? அவள்தான் உரோகிணிதேவி; எனக்குச் சாபம் நேர்ந்ததை நினைத்துப் புழுங்கி, என்னுடன் கூட இருக்க விரும்பி, முன்னரே மண்ணுலகத்தில் பத்திரலேகை யென்னும் பெயரோடு பிறந்தாள். நான், இரண்டாவது

பிறப்பில் சூத்திரகன் என்னும் அரசனைப் பிறந்தேன். அப்பொழுதும் அவள் என்னுடன் வரவிரும்பினள். ஆயினும், நான் அவள் வருதல் கூடாதென்றும், சந்திரவுலகத்திலேயே இருக்கவேண்டுமென்றுங் கூறித் தடுத்து நிறுத்திவிட்டேன். அவளை நீ காண விரும்பினையாயின், என்னுலகத்திற் காணலாம்,' என்றான். இதைக் 'கேட்ட காதம்பரி, உரோகிணி தேவியின் கற்பைப் பெரிதும் வியந்து இன்புற்றனள்.

காதம்பரியுடன் சந்திராபீடன் ஏமகூடத்தில் ஒருபது நாட்களே யிருந்தனன். பிறகு, அங்குள்ளாரிடம் விடைபெற்று, தவமியற்றும் தந்தையைப் பணிந்தான். தாராபீடன் அங்கிருந்த ஏனைய அரசர்களை யெல்லாம் பெரிதும் புகழ்ந்து, சந்திராபீடன்மீது அரசெனும் பெரும்பொறையை ஏற்றி வைத்தான். அரசைப் பெற்ற சந்திராபீடன், சில காலம் உச்சயினி நகரிலிருந் தரசு புரிந்தான்; சில காலம் ஏமகூடத் திருந்து இனிது ஆண்டான்; இன்னுஞ் சில காலம் உரோகிணி தேவியோடு சந்திரமண்டிலத் திருந்தான்; மற்றுஞ் சில காலம் காதம்பரி மனம் விழையும் இடங்களிலிருந்து இன்பந் துய்த்தான். சந்திராபீடனைச் சந்திரனைப் போலவே யாவரும், எங்கும் எள்ளளவு குறைபாடுமின்றி இனிது வாழ்ந்திருந்தனர்.

வாழ்க நற்றமிழ் வாழ்க வடமொழி
வாழ்க நல்லறன் வாழ்க வளரிறையர்
வாழ்க யாவரும் வன்பொழிந் தின்புடன்
வாழ்க விக்கதை மண்மிசை யென்றுமே.

முற்றிற்று.

PRINTED AT THE B. N. PRESS, MOUNT ROAD, MADRAS.